# கல்கி



KALKI ஆகஸ்ட் 5, 1956 4 அணா

**ரெக்ஸோனாவில் இப்போது ஓர் புதுமை உள்ளது!**

நறுமணம்...

முன்னைவிட...

மிக அதிகம்!

Rexona

இப்போது அபரிமிதமான
நறுமணம் கமழும் ரெக்ஸோனா
சோப் நீடித்த புத்துணர்ச்சியளிக்கும்!



ரெக்ஸோனா ப்ரொப்ரைடரி லிமிடெட்டுக்காக இந்தியாவில் தயாரித்தது

மலர் 16
இதழ் 3

# கல்கி

## பொருளடக்கம்

துன்முகி
ஆடி 21

ஆகஸ்டு 5, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




கருநிற மேனியை அழகு படுத்த ஓர் புதிய சாதனம்

ஆயிரக்கணக்கான ஆண், பெண்களின் சமூக வெற்றிக்குக் காரணம் புளோரோஸோன். ஓசோனும் அமோனுக் ஸினும் கலந்த அற்புதமான புளோரோஸோன் சருமத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக பிரகாசமடையச் செய்து பருக்கள், கரும்புள்ளிகள் சுருக்கங்கள் முதலியவற்றைப் போக்குகின்றன. புளோரோஸோன் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும், பிரகாசமாகவும் இளமையாகவும் வைத்துக் கொள்ள உதவும். புளோரோஸோன் லோஷன் ஒரு பாட்டில் விலை ரூ. 4-4-0 புளோரோஸோன் கான்ஸன்டிரேட் கிரீம் ஒரு புட்டி ரூ. 5-8-0 (வி. பி. சார்ஜ் தனி) எல்லா மருந்து ஷாப்புகளிலும் கிடைக்கும். அல்லது கீழ்க் கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

ஹைஜீனிக் கெமிக்கல் இன்டஸ்ட்ரீஸ்
த. பெ. 1192, பம்பாய்-1

ஏஜண்டுகளும் ஸ்டாக்கிஸ்டுகளும்
ஆர். எல். டெய்லர் & கோ., 59, பந்தர் தெரு, சென்னை
அப்பா & கம்பெனி, சென்னை
வில்பிரட் பெரிரா லிமிடெட், சென்னை
ஜாக்ஸன் மெடிகல் சப்ளைஸ், கோட்டயம்
ஹெக்டர் மெதர் & கோ., கொழும்பு-14

HVE

சரியான முடிவு




கர்னல் நாஸர் அறிவித்து விட்டார் !



மலர் 16 | தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற | துன்முகி ஞூ
இதழ் 1 | தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | ஆடி 21

# சூயஸ் நெருக்கடி

சூஎஸ் பிரதேசத்தில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடி மிகப் பெரிது.

இது எவ்வளவு தூரத்தில் கொண்டு போய் விடும் என்று சொல்ல முடியாது.

இந்த சூஎஸ் வாய்க்கால் வெட்டிய கதையும் எகிப்தில் பிரிட்டிஷாரின் பரிபாலனக் கதையும் ஒரு பெரிய புராணம்; அநீதியும் திருட்டும் நிறைந்த புராணம்.

அது ஒருவிதமாக முடிந்து விட்டதாக உலகம் நினைத்தது. ஆனால், அது முடிய வில்லை. இப்போது மறுபடியும் எரிமலையில் புகை கிளம்பி விட்டது!

"சூஎஸ் கால்வாய் நமது நிர்வாகத்தில் இராவிட்டால் நம்முடைய வியாபார மும் போக்குவரத்தும் யுத்த ஏற்பாடுகளும் கெட்டுப் போகும்" என்று ஐரோப்பிய வல்லரசுகள் ஆரவாரம் செய்கிறார்கள்.

பலாத்காரமாக சூ-எஸ் கால்வாயைப் பிடித்துக் கொள்வதுதான் வழி என்று பிரிட்டிஷ் பார்லிமெண்டிலும் சிலர் பேசியிருக்கிறார்கள்.

தன்னுடைய குழந்தைக்குப் பால் மிக அவசியம் என்பதற்காக ஒருவன் பால்காரனுடைய பசுவைப் பிடித்துப் போவது எவ்வளவு நியாயமோ, அந்தப் படியேதான் இருக்கிறது வல்லரசுகளுடைய வாதமும்!

"நமக்கு நிலக்கரி வேண்டும், மிக அவசியம்" என்று வேறு ஒரு தேசத்தார் இங்கிலாந்தைப் பலாத்காரமாகப் பிடித்துக் கொண்டால் எவ்வளவு நியாயமாக இருக்கும்? அல்லது நமக்குப் பெட்ரோல் இன்றியமையாத பொருள் என்று மேல் நாட்டார் வந்து ஸவூதி அராபியாவைப் பிடித்துக் கொண்டால் அது எவ்வளவு அநீதியாக இருக்கும்?

எகிப்தின் தலைவர் கடல் வழியை அடைத்து விடுவதாகச் சொல்லவில்லை. அதில் வரும் லாபமும் வரி வரும்படியும் எகிப்து நாட்டின் முன்னேற்றத்துக்கு மிக அவசியமாகி விட்டது என்றுதான் சொல்லுகிறார். அந்த வருமானம் தமக்குச் சேர்ந் தால் எகிப்து மக்களுக்குப் பயன்படும்படியாக நைல் நதியில் அணையைக் கட்டி முடிக்க முடியும் என்று கூறுகிறார்.

இவ்விதம் கூறுவது அநீதியா? இதில் என்ன அக்கிரமம் இருக்கிறது?

அணை கட்டுவதற்குப் பணம் தருகிறோம் என்று உறுதிமொழி கூறிய வல்லரசுகள் தங்கள் கட்சியில் எகிப்தின் தலைவர் நாஸர் சேரவில்லை என்பதற்காகக் கோபித்துக் கொண்டு, "பணம் தரமாட்டோம்" என்கிறார்கள்.

இந்நிலைமையில் நாஸர் எகிப்து மக்கள் நல்வாழ்வு வாழ்வதற்கு இன்றியமை யாத அணைக்கட்டை நிர்மாணிப்பதற்காகப் பணத்துக்கு வேறு வழி தேடித்தானே ஆகவேண்டும்? அவ்விதம் தேடுவதற்கு அவர் வழியைக் கண்டு பிடித்துள்ளார். இதில் தவறு என்ன இருக்கிறது? இதைக் கண்டு வல்லரசுகள் ஏன் சீற்றம் கொண்டு ஆர்ப்பாட்டம் செய்ய வேண்டும்?

இந்த விஷயத்தில், மேல் நாட்டு வல்லரசுகள் பலாத்கார முறைகளைக் கைக் கொள்ள எத்தனித்தால் கீழ்நாட்டுத் தலைவர்கள் அனைவரும் ஒன்றுகூடி ஏகமனதாக அக்கிரமத்தை எதிர்ப்பார்கள் என்பது நிச்சயம்.

ஆசியா நாடுகளில் மேற்கத்தி வல்லரசுகள் தங்கள் விருப்பப்படி காரியங்களைச் செய்து வந்த காலம் மலையேறி விட்டது.

** ** ** **

"நம்முடைய பாதுகாப்புக்காக நாம் அணுகுண்டுகளை வெடித்து உலக மெங்கும் சுகாதாரத்தைக் கெடுப்போம்" என்று வல்லரசுகள் செய்யும் பிடிவாதத்தை

யும் அக்கிரமத்தையும் பொறுத்துக் கொண்டிருக்கிறோம்.

இந்தப் பெரும் அநீதியை ராஷ்டிராந்திர நீதி மன்றத்தில் விசாரிக்க யாரும் முயற்சி செய்யவில்லை.

பிரிட்டன், எகிப்துநாட்டைச்சேர்ந்த பணங்களைத் தராமல் தடுத்து விட்டதைப் பற்றி ராஷ்டாந்திர நீதிமன்றத்தில் வழக்குப்போடப் போவதாக நாஸர் தெரிவித்திருக்கிறார்.

அத்துடன் அணுகுண்டு சோதனை வெடிகளைப் பற்றியும் ஒரு வழக்குப் போட்டு விடுவது நலம் என்று தோன்றுகிறது.

தற்போது மத்திய தரைக்கடல் பிரதேசத்தில் எரிமலை குமுறத் தொடங்கி யிருப்பதற்குப் பொறுப்பாளிகள் அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகளே யன்றி எகிப்தின் தலைவர் நாஸர் அல்ல என்பதை உலக மக்கள் நன்கு அறிவார்கள்.

# ஹிந்தி விஷயம்

**ப**ள்ளிக்கூடங்களில் ஹிந்தி கற்பித்தல் மிகவும் நல்லது. ரொம்பவும் அவசியம் என்றெல்லாம் திரு காமராஜர் சொல்லி விட்டார். திராவிடக் கழகத் தலைவர் ஈ. வே. ராவும் முதன் மந்திரி காமராஜரும் ஒன்று என்று பழி சொல்லுகிறவர்கள் இனி அப்படிச் சொல்லுவதற்கில்லை.

ராஜாஜி ஹிந்தியை அகில இந்திய அரசாங்க பாஷையாக்கி அடக்குமுறை செய்யக்கூடாது என்றுதான் சொன்னார். பள்ளிக்கூடங்களில் தமிழர் எல்லோரும் அவசியம் ஹிந்தி படிக்க வேண்டும் என்று தான் வற்புறுத்திச் சொல்லி வந்தார். இப்படியேதான் ராஜாஜி பாஷைக் கமிஷன் முன்னிலையிலும் சொன்னார். பத்திரிகைகளிலும் எழுதினார். ஆயினும் ராஜாஜியைவிடத் தற்போது காமராஜரே ஹிந்திநேசர் ஆகிவிட்டார்! அது நல்ல காரியம்தான்.

இப்பொழுது இன்னொரு சந்தேகம் நமக்கு ஏற்பட்டிருக்கிறது. ''தண்ணீர் எல்லாம் மேற்குக் கடலில் போய் விழுவதே சரி; அதைப் பற்றி நாம் ஒன்றும் கவலைப்படக்கூடாது'' என்று ராஜாஜி சொல்லியிருந்தால், திரு காமராஜர் தட்சிணப் பிரதேசம் கட்டாயம் ஏற்படுத்தியே ஆகவேண்டும் என்று சொல்லி யிருப்பாரோ, என்னவோ!

# நீதி மந்திரி ராஜினுமா

**வெ**கு நாட்களாக எல்லோரும் எதிர்பார்த்து வந்த ராஜினாமாவை இந்திய சர்க்கார் நிதிமந்திரி தேஷ்முக் அவர்கள் நேருஜியிடம் சமர்ப்பித்து விட்டார். இந்திய சர்க்கார் பம்பாய் மாகாணத்தை மூன்று துண்டுகளாகப் போட்டுவிட்டு, பம்பாய் நகரத்தை நாலாவது துண்டாகப் போட்டனர். பாகம் போட்டவரின் ஜேஷ்டாம்சமாகப் பம்பாய் நகரை மத்திய சர்க்கார் எடுத்துக் கொண்டு விட்டது ஸ்ரீ தேஷ்முக் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. இது அனைவருக்கும் தெரிந்த விஷயம்.

இதற்காக ஸ்ரீ தேஷ்முக் புதிய புதிய காரணங்களையும் குறைகளையும் புகார்களையும் தேடி நீண்ட ஒரு பிரசங்கம் செய்து, குழப்பத்தையும் மன வருத்தத்தையும் உண்டு பண்ணியிருக்க வேண்டியதில்லை. தாம் ராஜிநாமாச் செய்ய நேர்ந்ததன் காரணத்தை எத்தவிதமான குழப்பத்துக்கும் இடமின்றி நாலு வார்த்தையில் கூறி முடித்திருக்கலாம்.

'குஜராத்தும் மகாராஷ்டிரமும் ஒன்றாக இருப்பது இருவருக்கும் நல்லது' என்று அசோக் மேத்தா அவர்கள் மக்கள் சபையில் குறிப்பிட்டுள்ளார். அவர் கூறுவதில் மிகுந்த உண்மை இருக்கிறது. ஆனால், அவர் கூறுவது யாருடைய செவிகளில் விழவேண்டுமோ அவர்களுடைய காதுகளில் விழுந்ததாகத் தெரியவில்லை.

மொத்தத்தில் கண்ணுக்கு எட்டிய வரையில் நல்ல சகுனங்கள் தோன்றவில்லை. பம்பாய்ப் பிரிவினை ஏற்பாடும் மொழிவாரியாக நாட்டைப் பிரிப்பதும் பல தொல்லைகளையும் குழப்பத்தையும் உண்டாக்குவதை நாளாவட்டத்தில் காண்போம்.

சாதக பாதகங்களையும் சூழ்நிலையையும் ஆய்ந்தோய்ந்து பாராமல், ஆரம்பித்த காரியத்தை நடுவில் விடக்கூடாது என்கிற ஒரே கொள்கையைப் பிடிவாதமாகப் பிடித்துக் கொண்டு ஆற்றில் ஓடம் செலுத்தப்படுகிறது. ஆற்றோடு செல்வது எப்போதும் எளிது. ஆனால், அது நாம் போக விரும்பும் இடத்துக்கு நம்மைக் கொண்டு போய்ச் சேர்க்கும் என்று நம்ப முடியாது.

# வாய்ப்பூட்டு வேண்டாம்!

**ம**துரையில் சென்ற ஞாயிற்றுக்கிழமை 29-ல் தட்சிணப் பிரதேசக் கமிட்டியின் ஆதரவில் ஒரு கூட்டம் நடைபெற்றிருக்கிறது. தஞ்சை, திருச்சி, திருநெல்வேலி, ராமநாதபுரம், வட ஆர்காடு முதலிய பல ஜில்லாக்களிலிருந்தும் நூறு பிரதிநிதிகளுக்குமேல் கலந்து கொண்டனர். அவ்வளவுபேரும் காங்கிரஸ்காரர்கள். இந்தக் கூட்டத்தில், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றிய 'காங்கிரஸ்காரர்கள் தட்சிணப் பிரதேசம் பற்றிப் பேசக்

கூடாது' என்ற வாய்ப் பூட்டுத் தீர்மானத்தைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருக்கிறது. தட்சிணைப் பிரதேசம் ஏற்படுவதால் உண்டாகக் கூடிய பெரும் பயன்களைப் பற்றிச் சர்ச்சையும் நிகழ்ந்திருக்கிறது. தமிழகத்துடன் "திருவாங்கூர் — கொச்சி ஏன் இணைய வேண்டும்? அதன் தண்ணீர் எங்கே போய்விடும்? பாரத சர்க்கார்தான் இருக்கிறதே! அவர்கள் நமக்குத் தண்ணீர் திருப்பி விடும்படி சொல்லி விடுகிறார்கள்!" என்று கூறி வந்தவர்களுக்குத் திரு டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி ஓர் நுட்பமான உண்மையைத் தெளிவு படுத்தியிருக்கிறார்.

இரு ராஜ்யங்களிடையே ஓடும் ஆறு விஷயமாகத்தான் மத்திய சர்க்கார் தலையிட முடியுமே தவிர, ஒரு ராஜ்யத்தில் ஓடும் தண்ணீரை மற்றொரு ராஜ்யத்துக்குப் பயன்படும்படி செய்ய மத்திய சர்க்காருக்கு அதிகாரம் கிடையாது என்று நமது அரசியல் நிர்ணயச் சட்டத்திலுள்ள நுட்ப விஷயத்தைத் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

தண்ணீர் விஷயம் மட்டுமல்ல; எந்த விஷயத்திலுமே அண்டைப் பிரதேசம் தனி ராஜ்யமாகப் பிரிந்து விட்டால் அதிலுள்ள இயற்கை வளங்களைப் பக்கத்திலுள்ள ராஜ்யத்தினர் பயன்படுத்திக் கொள்ள முடியாமல் போகிறது. அந்த அளவில் இரு ராஜ்யங்களுமே பெரு நஷ்டங்களுக்கு உள்ளாகின்றன. இதனால்தான், தொழில் துறையில் வெகு வேகமாக முன்னேற வேண்டிய இந்தச் சந்தர்ப்பத்தில் குறுகிய மொழிப் பித்தின் காரணமாக ராஜ்யங்களைப் பிரிப்பது தவறு என்று பெரியோர்கள் சொல்லி வருகிறார்கள். இந்த உண்மையை நமது ராஜ்யத்தில் பெருவாரியான மக்கள் உணர்ந்து வருகிறார்கள் என்பதே இந்தத் தட்சிணைப் பிரதேசக் கமிட்டியின் கூட்டம் எடுத்துக் காட்டுகிறது!

தட்சிணைப் பிரதேசம் சம்பந்தமாகத் தென்னாட்டுக் காங்கிரஸ்காரர்கள் எத்தகைய கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று அறிந்துவர, நேரு, தேபர் முதலிய தலைவர்களைச் சந்திக்க, ஐந்து பேர் கொண்ட தூதுகோஷ்டி ஒன்று புது தில்லிக்குப் போவதென்று கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. புது தில்லிக்குச் செல்லும் தூதுகோஷ்டியினர் தமிழ் நாட்டில் பல மொழிப் பிரதேசம் இணைந்த ஒரு பெரிய ராஜ்யம் ஏற்படுத்தினால் தமிழ்ப் பெருமக்கள் தக்க ஆதரவு அளிப்பார்கள் என்ற உண்மையை மேலிடத்தில் வற்புறுத்துவார்கள் என்று நம்புகிறோம்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## 'ஆமாம்' பாட்டு!




"இந்தியாவில் பெரும்பாலான மக்கள் ஹிந்தி பேசுவதால் அதுதான் பொது பாஷையாக இருக்க முடியும்" என்று தூத்துக்குடியில் திரு காமராஜர் கூறியிருக்கிறார்.

# அன்பார்ந்த நேயர்களுக்கு

நேயர்கள் அனைவரும் மகிழ்ச்சியும் பெருமையும் அடையக்கூடிய சந்தோஷச் செய்தி ஒன்றை ஞாபகமூட்ட விரும்புகிறேன். அதாவது உங்கள் சொந்தப் பத்திரிகையான 'கல்கி'க்கு இன்றுடன் பதினைந்து ஆண்டுகள் பூர்த்தியாகிப் பதினாறாவது ஆண்டு பிறக்கிறது.

இந்தப் பதினைந்து ஆண்டு காலத்தில் 'கல்கி' பல சோதனைகளைக் கடந்து பல சாதனைகளை நிறைவேற்றி யுள்ளது.

இன்று 'கல்கி' தன்னுடைய பதினாறாவது பிறந்ததின குதூகலத்தை நேயர்களுடன் பகிர்ந்து கொள்கிறது.

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால் நானும் என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் கல்கி ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் சேர்ந்து திட்டமிட்டு ராஜாஜி, டி. கே. சி. முதலிய பல பெரியவர்களுடைய ஆசியுடன் 'கல்கி'யைத் தொடங்கினோம்.

1941-ம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் மாதம் இருமுறையாகத் தொடங்கிய 'கல்கி' தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் மிகச் சிறந்த முறையில் பணியாற்றி, நேயர்களின் பரிபூரண ஆதரவையும் பாராட்டுதலையும் பெற்று 1944-ம் வருஷம் வாரப் பத்திரிகையாயிற்று.

அந்தச் சமயத்தில் 'கல்கி'ப் பத்திரிகை இருபத்தையாயிரம் பிரதிகள் விற்பனையாகி வந்தது. பிறகு 1944-ம் ஆண்டிலிருந்து 1954-ம் ஆண்டு வரையுள்ள பத்து ஆண்டுகளில் 'கல்கி'ப் பத்திரிகை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக ஓங்கி வளர்ந்தது. பத்திரிகையின் எண்ணிக்கையும் வரவர அதிகரித்து எழுபதினாயிரத்துக்கு உயர்ந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் எனது அருமை நண்பரும் பேராசிரியரும் 'கல்கி'ப் பத்திரிகையின் முதல் ஆசிரியருமான ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி சிறிது காலம் நோய்வாய்ப் பட்டிருந்து அமரராகிவிட்டார். இத்துயரம் எனக்கும் பல்லாயிரக் கணக்கான 'கல்கி' நேயர்களுக்கும், மாபெரும் அதிர்ச்சியைத் தந்தது.



ஆயினும் 'கல்கி'ப் பத்திரிகை தன்னுடைய தொண்டைத் தொடர்ந்து செய்து வந்தது. அரசியல் துறையிலும், கலைத் துறையிலும், இலக்கியத் துறையிலும் 'கல்கி' செய்து வரும் சேவை தமிழ் கூறும் நல்லுலகம் நன்கு அறிந்ததே.

தமிழ் மக்களின் பேரன்பும் ஆதரவும் காரணமாகக் 'கல்கி'ப் பத்திரிகையின் விற்பனை மேலும் உயரத்தொடங்கியது.

1955-ம் ஆண்டு ஆரம்பத்திலிருந்து 'கல்கி'ப் பததிரிகையின் எண்ணிக்கை எழுபத்தையாயிரம், எண்பதாயிரம், தொண்ணூறாயிரமாகப் பெருகி இந்த ஜூன் மாத இறுதியில் தொண்ணூற்று ஐந்தாயிரத்தை அடைந்து, பத்திரிகையின் பதினைந்தாம் ஆண்டு பூர்த்தியாவதற்குள் ஒரு லட்சம் பிரதிகளுக்கு விற்பனை உயர்ந்து விட்டது.

பாரத நாட்டுப் பத்திரிகை சரித்திரத்திலேயே இது ஒரு மகத்தான சாதனையாகும். இந்த மகத்தான வெற்றிக்குத் தமிழ் மக்களின் அபிமானமும் 'கல்கி' ஏஜண்டுகளின் ஒத்துழைப்புமே காரணமாகும். அவர்களுக்கெல்லாம் என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"நாட்டுக்கு நான் பல பணிகள் செய்ததாக நண்பர்கள் போற்றுவதுண்டு. அவற்றிலெல்லாம் 'வியாசர் விருந்து'ம் 'சக்கரவர்த்தித் திருமக'னும் எழுதி முடித்ததுதான் மேலான பணியென்பது என் கருத்து" என்று ராஜாஜி அவர்கள், 'சக்கரவர்த்தித் திருமகன்' புத்தக முன்னுரையில் குறிப்பிட்டிருக்கிறார். இதுபோலவே 'கல்கி' செய்துள்ள பணிகள் எல்லாவற்றிலும் ராஜாஜி எழுதிய 'வியாசர் விருந்து', 'சக்கரவர்த்தித் திருமகன்' ஆகிய இரு புனித இதிகாசங்களையும் வெளியிட்டதையே 'கல்கி'யின் மிகச் சிறந்த பணியாகவும் பாக்கியமாகவும் கருதுகிறேன்.

இதுவரையில் தொண்டாற்றி வந்ததைப் போலவே இனியும் 'கல்கி' தமிழ் நாட்டுக்கும், தமிழ் மொழிக்கும் பணி புரிந்து வருவதற்கு நேயர்களின் ஆசியும் இறைவன் அருளும் துணை நிற்கும் என்று நம்புகிறேன். வணக்கம்.

'கல்கி' காரியாலயம்
சென்னை-10

இப்படிக்கு
**சதாசிவம்**

# என்ன சேதி?

## ஈரோடு உதாரணம்

ஈரோடு அரிசி வியாபாரிகள் ஒன்று சேர்ந்து ஒரு மாத காலத்துக்கு அரிசி பட்டணம் படி பதினொரு அணா விதம் விற்க முடிவு செய்திருக்கின்றனர். அரிசி விலை உயர்ந்திருக்கும் இச்சந்தர்ப்பத்தில் மக்களுக்கு அரிசி மலிவாகக் கிடைப்பதற்காகவே இந்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள். வியாபாரிகளின் இந்த நற்போக்கைப் பாராட்ட வேண்டும். ஈரோடு வியாபாரிகளைப் போலவே பிற ஊர் வியாபாரிகளும் தீர்மானம் செய்து கொண்டால் மக்களுக்கு அதனால் பெரும் நன்மை ஏற்படும். சர்க்கார் தலையிடுவதனால் ஏற்படக்கூடிய சங்கடங்களையும் தவிர்க்கலாம்.

அரிசிவிலை உயர்வைத் தடுக்கச் சிற்சில ஜில்லாக்களில் நியாயவிலைக் கடைகள் திறக்கச் சர்க்கார் உத்தேசித்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. மற்றும் சில இடங்களில் வியாபாரிகள் தங்களிடம் உள்ள அரிசி இருப்பைச் சர்க்காருக்கு ஓரளவு குறைந்த விலைக்கு விற்கத் தீர்மானித்திருக்கிறார்கள். இத்தகைய அரைகுறையான முறைகளில் மக்களுக்குக் கணிசமான பலன் எதுவும் ஏற்பட்டு விடாது. ஒன்று திருவாங்கூர்-கொச்சி சர்க்காரைப் போல் அரிசி மூட்டையின் அதாவது மொத்த விலையையும், சில்லறை விலையையும் கண்டிப்பாக நிர்ணயித்துவிட வேண்டும். இல்லாவிடில் ஈரோடில் பெருந்தன்மைபடைத்த வியாபாரிகளைப் போல், மற்ற விடங்களில் உள்ள வியாபாரிகளும் ஒன்று சேர்ந்து சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்கு முந்தியே அரிசி விலையைக் குறைத்துவிட வேண்டும். அவ்விதம் செய்வதால் அவர்களுக்குக் கிடைக்கும் லாபம் குறையுமேயன்றி, நஷ்டம் எதுவும் ஏற்பட்டு விடாது.

## சபாஷ் திருச்சி!

உழைப்பின் மேன்மையையும், ஊர் நலனுக்குப் பாடுபடுவதன் சிறப்பையும் திருச்சி மாணவர்கள் அறிந்து பொதுப் பணி புரிய முன் வந்திருப்பது பற்றி அவர்களைப் போற்ற வேண்டும்.

திருச்சி தெப்பக்குளத்தில் பாசியும், சேறும், அழுக்கும் சேர்ந்து துர்நாற்றமெடுத்து விட்டது. அக் குளத்தைச் சுற்றிப் பல கல்லூரிகளும் பள்ளிகளும் இருக்கின்றன. குளத்தின் துர்க்கந்தத்தினால் சுற்றியுள்ளவர்களின் ஆரோக்கியம் கெட்டு விடும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. இதை உணர்ந்த அந் நகர் மாணவ மாணவிகள் குளத்திலுள்ள அசுத்தங்களை அப்புறப்படுத்த ஆயிரக் கணக்கில் ஈடுபட்டிருக்கின்றனர். இத் திருப்பணியின் மூலம் பாட புத்தகங்களிலிருந்து கற்றறிந்து கொள்ள முடியாத பல அரிய பண்புகளைத் திருச்சி மாணவர்கள் அறிந்து கொள்வார்கள். சிறுவர்களிடையே சமூக சேவை ஆர்வத்தைத் தூண்டிய பெரியோர்களையும் மனமாரப் போற்றுகிறோம். பிற ஊர் மாணவ மாணவிகளும் ஓய்வு கிடைக்கும் சமயங்களில் இம்மாதிரி பயனுள்ள சமூகப் பணிகளில் ஈடுபடுவார்களாயின் மக்களுக்கு மிகுந்த நன்மை ஏற்படும்.

## குடிசைத் தொழிலுக்கு ஆக்கம்

இந்த ஆண்டில் குடிசைகளில் தீக்குச்சி தயாரிக்கும் இருநூறு நிலையங்களுக்கு ஆதரவளிக்க வேண்டும் என்னும் அகில இந்திய காங்கிரஸ்போர்டின் சிபாரிசை மத்திய அரசாங்கத்தினர் ஏற்றுக் கொண்டு விட்டனர்.

இந்தச் செய்தி குடிசைத் தொழில் இயக்கத்துக்கு ஆக்கமளிக்கும் என்பதில் ஐயமில்லை. கூட்டுறவு முறையில் நடக்


பாங்க் ஆப் மதுரை லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1943)

தலைமை ஆபீஸ்: மதுரை

கிளைகள்:

புதுக்கோட்டை, சேலம், கோயமுத்தூர்

நீங்கள் எங்கள் பாங்கில் "சேவிங்ஸ் கணக்கு" திறப்பதினால் உண்டாகும் நான்கு பெரும் நன்மைகள்.

1. ரூ. 5/- முதல் மேற்படி கணக்கில் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.
2. தினசரி இருப்புக்கு 3% வட்டி கிடைக்கிறது.
3. பாங்க் வழங்கும் "செக்குகள்" மூலம் பணம் திரும்பப் பெறலாம்.
4. முன் அறிவிப்பு எதுவுமின்றி வாரம் ஒன்றுக்கு அதிக பக்ஷம் ரூ. 1000/- கணக்கிலிருந்து எடுத்துக் கொள்ளலாம்.

சுறுசுறுப்பும் மரியாதையும் நிறைந்த சேவை

பி. எஸ். விஸ்வநாதன்
காரியதரிசி

கும் தீக்குச்சி சாலைகளுக்கும், காதி போர்டின் மேற்பார்வையில் நடக்கும் நிலையங்களுக்கும் தலா ஒன்பதினாயிரம் ரூபாய் வீதம் அடுத்த ஆண்டில் மத்திய அரசாங்கத்தினர் கொடுக்கத் தீர்மானித்திருக்கின்றனர். குடிசை வாழ் மக்கள் கையால் தயாரிக்கும் நிலையங்களுக்கு மாத்திரம்தான் சர்க்காரின் மேற்படி உதவி கிடைக்கும். இந்த ஏற்பாட்டைப் பயன்படுத்திக் கொண்டு நமது ராஜ்யத்திலுள்ள குடிசைத் தொழிலில் ஆர்வமுள்ளவர்கள் ஏழை மக்கள் வாழ்வில் இன்பம் நிலவ வழி செய்வார்கள் என எதிர்பார்க்கிறோம்.

## இங்கிலாந்தில் கோயில்

சுவாமி விவேகானந்தர் மேல் நாட்டுக்குச் சென்று ஹிந்து தர்மத்தின் சிறப்பை எடுத்துச் சொல்லத் தொடங்கியதிலிருந்தே ஏராளமான ஐரோப்பியர் பாரத நாட்டு வேதாந்த விஷயங்களில் மிகவும் ஈடுபாடு கொள்ளத் தொடங்கினர். அதன் பயனாக உலகெங்கிலும் ராமகிருஷ்ண மடத்தார், மடாலயங்களை ஏற்படுத்தி வேதாந்தக் கருத்துக்களைப் பரப்பி வருகின்றனர். மேனாட்டின் பல பகுதிகளிலுள்ள ஐரோப்பியர்கள் வேதாந்த நூல்களைப் படிப்பதோடு, ஹிந்து முறைப்படி தெய்வ வழிபாட்டையும் மேற்கொண்டிருக்கின்றனர்.

மேலும் சமீபகாலத்தில் ஏராளமான இந்தியர்கள் இங்கிலாந்துக்குப் போய் வருகின்றனர். கல்வி, தொழிற் பயிற்சி, வர்த்தகம் முதலிய பல்வேறு துறைகளிலுள்ள ஹிந்துக்கள் இங்கிலாந்துக்குச் செல்கின்றனர். அவர்கள் ராம நவமி, கிருஷ்ண ஜயந்தி, தீபாவளி முதலிய புனித நாட்களில் இங்கிலாந்தில் வசிக்க நேர்ந்தால் ஆண்டவனை வழிபட ராம கிருஷ்ண மடாலயத்துக்குச் செல்வதன்றி வேறு வழியில்லை. இதனால் ராம கிருஷ்ண மடத்தில் இட நெருக்கடியைத் தீர்க்க ராமகிருஷ்ண மடாலயத்தார் ஐந்து லட்ச ரூபாய் செலவில் கோவில் கட்ட ஏற்பாடு செய்து வருகிறார்கள். பாரத நாட்டிலே ஆஸ்திக மனப்பான்மையும் தெய்வ பக்தியும் படைத்தவர்கள் இங்கிலாந்தில் ஓர் ஹிந்துக் கோயில் எழுப்பத் தங்களாலான பொருளுதவி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறார்கள். அப்படிப் பொருளுதவி செய்பவர்கள், "ராமகிருஷ்ண வேதாந்தா சென்டர் கோவில், பிரார்த்தனை மண்டபக் கணக்கு, ராமகிருஷ்ண மிஷன், பேலூர் மடம், ஹௌரா" என்ற விலாசத்துக்கு அனுப்பும்படி கோருகிறோம்!

அட்டைப்படம்

# தர்மமும் அன்பும்

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது" —குறள்

தெய்வப் புலமைத் திருவள்ளுவர் இல்வாழ்க்கையில் அன்பும் அறனும் இணைந்து விட்டால் அந்த வாழ்வில் பண்பும் பிரயோசனமும் உண்டாகும் என்று தெளிவுறச் சொல்லி விட்டார்.

கைகேயி, "நான் கேட்ட இரண்டு வரங்களைக் கொடு" என்று வற்புறுத்தினாள்; தசரதன் எவ்வளவு இரங்கியும், தான் சொன்னதையே வற்புறுத்திக் கொண்டிருந்தாள். தனது அறநெறியை விட்டுப் பிறழ முடியாத தசரதன் வரத்தையும் கொடுத்து உயிரையும் இழந்தான்! அறத்தின் சக்தி அப்படிப்பட்டது. மனிதனைவிட, உலகத்தைவிட அறம் உயர்ந்தது! ஆண்மை பொருந்தியது!

அறத்தை விட முடியாமல் தசரதன் தவிப்பதைக் கைகேயி தன் அன்புக் கண்களால் பார்த்து உணர்ந்திருந்தாளானால் அவ்வளவு வற்புறுத்தியிருக்க மாட்டாள். ராமாயணக் கதையே வேறு மாதிரியாகியிருக்கும். தசரதனின் இல்லறம் சிறந்து விளங்கியிருக்கும்.

* * *

பிரெஞ்சு ஆசிரியர் விக்டர் ஹ்யூகோ எழுதிய "லே மிஸரபிளா" ஓர் அற்புத நவீனம். அதில் ஜீன்வால்ஜின் என்ற பாத்திரம் அவரது அற்புத சிருஷ்டி. அவன் திருடனாக இருந்தவன் என்ற காரணத்தினால் நீதியை நிலை நிறுத்தும் பொறுப்பேற்ற போலீஸ் அதிகாரி ஜாவர் என்பவனிடம் என்ன பாடுபடுகிறான்! ஜாவரின் நீதி பரிபாலனத்தில் அன்புக்கே இடமில்லை. அவன் அன்பை அறியமாட்டாதவன். அதனால்தான் இவ்வளவு கொடுமை! அன்புடன் இணைந்த நீதியே உலகுக்கு வேண்டும் என்று ஆசிரியர் அற்புதமாக வற்புறுத்துகிறார்.

அன்பின் வசப்பட்டு நீதி எது என்று தெரியாமல் கொடுமை இழைக்கும் சந்தர்ப்பங்கள் பல அன்றாட வாழ்க்கையில் பார்க்கிறோம். 'வேண்டியவர்' என்று அதிகார பீடத்திலிருப்பவர்கள் எவ்வளவு தவறான காரியங்கள் செய்து விடுகிறார்கள்! ஆகவே அன்பின் வசப்பட்டவர், தயவு தாட்சண்யம் நோக்காத அறத்தையும் மனத்தில் கொள்ள வேண்டும். அப்போதுதான் வாழ்வு சிறக்கும்.

இந்த அற்புத உண்மையையே இவ்வார அட்டைச் சித்திரம் விளக்குகிறது.

அறத்துக்கு ஒரு வீரனின் உருவத்தையும் அன்புக்கு ஓர் அரணங்கின் உருவத்தையும் கற்பனை செய்து ஸ்ரீ கனுதேசாய் ஓர் அற்புத மாயம் புரிந்திருக்கிறார். தர்மதேவனின் தயவு தாட்சண்யம் நோக்கா முகபாவமும் அன்பரசியின் இரங்கு முகமண்டலமும் பார்க்கப் பார்க்கப் புதுப் புது உணர்ச்சிகளை ஊட்டி மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்துகின்றன.



உற்சாகம் செழித்திருக்க

புது சக்தியை அளிக்கும்

## பை-கோலேட்ஸ்

முறையாக உபயோகியுங்கள்

வீருக்கு ஊக்கமூட்டுவதில் மிகச் சிறந்தது

கெடுக்க முடியாத புது சீலுடன்





## 1856 - நூறு ஆண்டுகள் சேவை - 1956

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



# S. S. ரஜுலா

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
| --- | --- |
| 1956 ஆகஸ்டு 19 | 1956 ஆகஸ்டு 20 |

பிரயாணத்திற்குரிய தஸ்தாவேஜுகளைக் காண்பித்து வேண்டிய அளவு "பங்க்" வசதியுள்ள டிக்கட்டுகளையும், "பர்த் வசதியற்ற" டிக்கட்டுகளையும், "சாப்பாட்டுடனோ" அல்லது "சாப்பாடின்றியோ" எங்கள் கம்பெனியின் ஏஜெண்டிடமிருந்து நேரடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

'ரஜுலா' கப்பல் சமீபத்தில் புதுப்பிக்கப் பட்டிருக்கிறது. பங்க் வசதி பெற்றுள்ள பிரயாணிகளும் பெர்த் வசதியற்ற பிரயாணிகளும் இப்பொழுது நிறைய விளக்கு வசதிகளையும், அதிகப்படியான பங்காக்களையும், புதுக் காற்று புளோயர்களையும், ஷவர், வாட்டர்கூலர் ஆகிய வசதிகளையும், சைவ உணவுக்காரர்களுக்குத் தனி வசதிகளுடன் கூடிய ஒரு பெரிய சாப்பாடு அறையும் பெறலாம். எல்லா பிரயாணிகளும் தமிழ் மற்றும் ஹிந்தி சினிமா படங்களையும் பார்க்கலாம்.

பினாங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும் சிங்கப்பூரில் கப்பல் மாற்றி பாங்காக்கிற்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

*பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்*

| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட் |
| --- | --- |
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |




## 5. மறுபடியும் ஒரு பழியா...?

அஞ்சுகம் பார்வதி அம்மாளுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைச் செய்து விட்டுத் தோட்ட வேலைகளைக் கவனிக்கப் போனாள். நிர்மலா தன் அறையில் உட்கார்ந்த வண்ணமே அஞ்சுகம் தோட்டத்துக்குப் போய் விட்டாள் என்பதை அறிந்து கொண்டு மெதுவாகப் பார்வதி அம்மாளின் படுக்கை அறைக்குச் சென்றாள். கண் பார்வை மங்கியும் எப்பொழுதும் சந்தேகத்தில் குறியாகவும் இருக்கும் பார்வதி யாரோ வரும் காலடி ஓசையைக் கேட்டதும் ''யாரது?'' என்றாள்.

''நான்தான்....'' என்று தன்னை இன்னாரென்று காட்டிக் கொள்வது போல் குரல் கொடுத்தாள் நிர்மலா.

''ஓ......நீதானா? நான் அந்தப் பெண்ணோ என்று நினைத்தேன். எனக்கென்னவோ இந்த வீட்டில் வரவரப் பயம் அதிகமாகிறது. உலகத்தில் சட்டென்று யாரையும் நம்பியோ, இரக்கப்பட்டோ வேலைக்கு வைத்துக் கொள்ள முடியவில்லை. அதுவும் நீ சொன்னாயா, கொஞ்சம் ஜாக்கிரதையாகத்தான் இருக்க வேண்டுமென்று—அதிலிருந்து அந்தப் பெண்ணிடம் எனக்குக் கொஞ்சம் சந்தேகம்தான். என்னதான் நல்ல பெண்போலப் பார்வைக்குப் பட்டாலும், ஏதோ தவறு செய்து விட்டுச் சிறைக்குப் போய் வந்தவள்தானே? நீ இருக்கிறாயே என்ற தைரியத்தில்தான் நானும் இருக்கிறேன்..'' என்று கூறினாள் பார்வதியம்மாள்.

''ஆம்! எனக்குக்கூடச் சிறிது பயமாய்த்தான் இருக்கிறது. இந்தக் காலத்தில் யாரை எளிதில் நம்ப முடிகிறது? நானும் ஜாக்கிரதையாகத்தான்

கி.ரா.கோபாலன்



இருக்கிறேன். நீங்கள் அடிக்கடி அவளோடு பேசுவதற்குச் சந்தர்ப்பம் ஏற்படுவதால் அவள் எப்படிப்பட்டவள் என்பதைக் கூடுமான வரையில் தெரிந்து கொண்டிருப்பீர்கள் என்று நினைக்கிறேன். சிறையில் இருந்த பெண் என்றால் சந்தேகம் ஏற்படத்தானே செய்யும்? அவள்மீது நீங்கள் சிறிது சம்சயப்படுவது அவளுக்குத் துளிக்கூடப் பிடிக்கவில்லை. இதை அவளே என்னிடம் சொன்னாள். அவள் அதிக நாட்கள் இங்கு வேலையில் இருக்க மாட்டாள் என்றுதான் நானும் நினைக்கிறேன்'' என்றாள் நிர்மலா.

இதைக் கேட்டதும் அந்த வயதான பெண்மணியின் முகத்தில் கவலைக் குறியும் பீதியும் அதிகமாயின. ''பரிதாபம்! அவள் முகம்தான் எவ்வளவு கபடமற்றதாக இருக்கிறது? அழகாகவும் இருக்கிறாள். இப்படிப்பட்ட பெண்களையெல்லாம் அழகாக வேறு கடவுள் படைத்து விடுகிறான்! அவள் முகத்தைப் பார்த்தால் அவள் திருட்டுக் குற்றம்செய்து ஜெயிலுக்குப் போயிருப்பாள் என்று யாரும் நம்பவே மாட்டார்கள். அவள் என்னைப் பற்றித் தவறாக நினைத்திருந்தால் அவளுடைய துரதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். அவளுக்கு இங்கிருந்து வாழ்க்கையை ஒழுங்காக நடத்த விருப்பமில்லை என்றுதான் அர்த்தம்'' என்றாள் பார்வதியம்மாள்.

இதைக் கேட்டதும் நிர்மலாவின் முகத்தில் சிறிது மாறுதல் ஏற்பட்டது. நெஞ்சில் கொண்ட கபட எண்ணத்தின் விஷமச் சாயல் அவள் கண்களில் பரவி நின்றது. அவள் மெதுவாகப் பார்வதி அம்மாளின் கட்டிலண்டை நெருங்கி அவள் காலடியில் உட்கார்ந்து குழைவான மொழிகளில் பேசத் தொடங்கினாள். ''நீங்கள் கவலைப்படாதீர்கள். எனக்கு எத்தனையோ வேலைகள் இருந்தாலும் எல்லாவற்றிலும் ஒரு

கண் வைத்திருக்கிறேன். நான் இங்கே உங்களையும், உங்கள் பொருள்களையும் பாதுகாக்கத் தானே இருக்கிறேன்? இன்றுகூட ஒரு விஷயம் கண்டு பிடித்தேன்; உங்கள் நீலக்கல் மோதிரத்தை நீங்கள் குளிக்கும் அறையிலோ, வேறு எங்கோ மறந்து வைத்து விட்டு வந்து விட்டீர்கள் போலிருக்கிறது. அது எப்படியோ அவள் துணி மூட்டையில் போய் இருக்கிறது. இதை நான் இப்பொழுது தான் சோதனை செய்துவிட்டு வந்தேன். திருட்டு எண்ணம் உள்ளவளுக்கு அந்தப் புத்தி எப்போதும் போகவேபோகாது, அம்மா!'' என்றாள்.

இதைக் கேட்டதும் சாய்ந்து படுத்திருந்த பார்வதி திகைப்படைந்து எழுந்து உட்கார்ந்து கொண்டாள். ''நான் ஒரு பெரிய தப்பு செய்துவிட்டேன் நிர்மலா. ஜெயிலிலிருந்து வந்த ஒரு பெண்ணை வேலைக்கு வைத்துக் கொண்டது பெரிய தவறுதான். சரளாவிட மிருந்து சிபாரிசுக் கடிதம் வாங்கிக் கொண்டு வந்திருந்தாள். நீ வேறு அந்தப் பெண்ணிடம் இரக்கம் காட்டினாய். எனக்கும் ஏதோ அவள் முகத்தைப் பார்த்ததும் பரிதாபமாக இருந்தது. இன்று நீ சரளாவுக்கு ஒரு கடிதம் எழுதிவிடு. இப்படிப்பட்ட ஒரு பெண்ணுக்கு வேலை கொடுக்கும்படி எனக்குச் சிபாரிசுக் கடிதம் எழுதிக்கொடுக்க அவளுக்கு எப்படித் தோன்றியது என்று. இப்படிப் பட்ட ஒரு இளம் பெண் வாழ்க்கையில் தவறான பாதையில் சென்றால் அவளைத் திருத்துவதற்காக இப்படி உதவி செய்வது தவறல்ல....ஆனால் மறுபடியும் அந்தத் திருட்டுப் புத்தியே இருந்தால் என்ன செய்ய முடியும்? உனக்கு நிச்சயம் தெரியுமா, அவள்தான் அந்த மோதிரத்தைத் திருடித் தன் மூட்டைக்குள் பதுக்கினாள் என்று?'' — பதை பதைப்போடு கேட்டாள் பார்வதி.

''இதில் என்ன சந்தேகம்? நான் கூடப் பொய் சொல்லுவேனா? பாவம்! ஒரு அனாதைப் பெண்ணின்மீது, அதுவும் வயிற்றுப் பிழைப்புக்காக நம்மிடம் அண்டிய பெண்மீது, நான் பழி சுமத்துவேனா? இங்கு அவளைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்? இப்பொழுதும் அந்த மோதிரம் அவளுடைய மூட்டையில்தான் இருக்கிறது. ஏற்கனவேயே உங்களிட மிருந்த பணம் அடிக்கடி காணாமல் போய்க் கொண்டிருக்கிறது என்று சொல்லி யிருக்கிறீர்கள். எனக்குப் பயமாகத்தான் இருக்கிறது. நீங்கள் விலையுயர்ந்த நகைகளெல்லாம் வேறு வைத்திருக்கிறீர்கள். அவைகளெல்லாம் பத்திரமாக இருக்க வேண்டுமே?'' என்றாள் நிர்மலா, தர்மசங்கடமான நிலையில் வேறொன்றும் தோன்றாது அச்சமடைகிறவள் போல்.

இதைக் கேட்டதும் பார்வதி முன்னிலும் அதிக பீதி அடைந்தவளாக, ''இதற்கு நாம் என்ன செய்வது?'' என்றாள் மிகுந்த குழப்பத்தோடு.

நிர்மலா தன் எஜமானியின் தோளில் தன் கையை வைத்துக் கொண்டு, ''நீங்கள் பயப்படாதீர்கள். அவளை மெதுவாக வெளியே அனுப்பி விடுவதுதான் நமக்கு நல்லது. இன்று காலை வரை எனக்கு அப்படிப்பட்ட எண்ணம் இல்லை. இப்பொழுது



தான் அவள் ஏதோ பெரிய கொள்ளை அடிக்க இந்த வீட்டுக்கு வந்திருக்கிறாள் என்று தோன்றியது'' என்றாள் மிக சாமர்த்தியமாக.

பார்வதி சிறிது நேரம் ஏதோ யோசனை செய்து விட்டு, ''அவளுக்கு என்ன துணிச்சல், அந்த நீலக்கல் மோதிரத்தைத் திருட? அது மூன்று தலைமுறைகளாக எங்கள் வீட்டில் இருக்கிறது. மிகவும் விலையுயர்ந்தது. எங்களுடைய குடும்ப கௌரவமே

பிரசித்தி பெற்ற
**பைலட்**
**பேனாக்கள்**

விஷயமறிந்த
குடும்பத்தினர்
விரும்புவது
பைலட்
**PILOT**
பேனாக்களும்
மசியும்

கவர்ச்சி மிக்க
நிறங்களில்
பற்பல
மாடல்கள்

எங்கும்
கிடைக்கும்

*Manufactured By*
THE PILOT PEN CO. (INDIA) PRIVATE LTD.,
"CATHOLIC CENTRE"...ARMENIAN ST.,
MADRAS-1.........PHONE: 2325.

உலகப் புகழ் பெற்ற
**பைலட் இங்க்**

| | | |
|---|---|---|
| 1 oz. | ஒரு புட்டி | 0-5-0 |
| 2 oz. | .. | 0-8-0 |
| 24 oz. | .. | 3-8-0 |


அந்த மோதிரத்தில் தானிருக்கிறது. ஏன் நாம் அவளை இப்பொழுதே போலீஸில் ஒப்படைக்கக் கூடாது?'' என்றாள் ஆத்திரம் நிறைந்த குரலில்.

''பதற்றப் படாதீர்கள்! அவள் எங்கே ஓடி விடுவாள்? பார்த்துக் கொள்ளலாம்! முதலில் நான் அவளை விசாரணை செய்கிறேன். இப்பொழுது மெதுவாக என்னுடன் வாருங்கள். அவளுடைய துணி மூட்டையில் மோதிரத்தைப் பதுக்கி வைத்திருப்பதைக் காட்டுகிறேன். அதையும் நீங்கள் பார்த்துவிட வேண்டாமா? அப்பொழுதானே உங்களுக்கும் விஷயம் நன்றாகப் புரியும்?'' என்றாள் நிர்மலா.

பார்வதி நிர்மலாவின் தோளைப் பிடித்துக் கொண்டு மெதுவாக நடந்து அஞ்சகத்தின் அறைக்கு வந்தாள். நிர்மலா அந்த அறையில் ஒரு மூலையில் வைத்திருக்கும் துணி மூட்டையை எடுத்து அவிழ்த்து உதறினாள். அதிலிருந்து ஏதோ பொத்தென்று கீழே விழுந்தது. ''இதோ பார்த்தீர்களா?'' என்று சொல்லிக் கீழே விழுந்த மோதிரத்தை எடுத்துக் கொடுத்தாள்.

''என்ன அநியாயம்? என்ன துணிச்சல்? இது ஒரு பெண் செய்யும் காரியமா? இந்த மோதிரத்தைத் திருடியவள் இன்னும் என்னதான் செய்ய மாட்டாள்?'' என்றாள் பார்வதி, நடுங்கும் தன் கைகளால் மோதிரத்தை வாங்கிக் கொண்டே.

''எதுவும் செய்வாள் அவள். நகைப் பெட்டியின் சாவிகள் எல்லாம் உங்கள் தலையணைக்கு அடியில்தானே வைத்திருக்கிறீர்கள்?'' என்றாள் நிர்மலா.

''ஆமாம்! நான் என்ன செய்வேன்? எப்படி எல்லாவற்றையும் பாதுகாக்கப் போகிறேன்? கொத்துச் சாவியைத் தலையணைக்கு அடியில் வைக்காமல் வேறு எங்கு வைப்பது? இந்த வீட்டில் பத்திரமான இடம் வேறு ஏது? நீ வேண்டுமானால் வைத்துக் கொள்கிறாயா..?'' என்றாள் பார்வதி நடுங்கும் குரலில்.

''வேண்டாம் - வேண்டாம் - நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். நான் இருக்கும் வரையில் நீங்கள் எதற்குமே பயப்பட வேண்டாம். நீங்கள் உங்கள் அறையில் போய்ப் படுத்துக் கொள்ளுங்கள். நான் அவளை இதோடு விட்டுவிடப் போவதில்லை'' என்று தைரியமும் சமாதானமும் சொன்னாள் நிர்மலா.

கிழவி சிறிது மன ஆறுதல் அடைந்தவளாக ஏதோ முனகிக் கொண்டே தன் அறையை நோக்கி நடந்தாள்.

**அ**ஞ்சகம் தோட்ட வேலைகளை முடித்துக் கொண்டு வீட்டுக்குள் நெருங்கிய

போது இரவு நெருங்கி விட்டது. அவள் தன் எஜமானிக்கு மாலை வேளைகளில் செய்ய வேண்டிய பணிவிடைகளைச் செய்வதற்கு அவசரம் அவசரமாகச் சென்றாள். அந்தச் சமயம் அவள் எதிரில் நிர்மலா வந்து அவள் கையைப் பிடித்து நிறுத்தினாள். அஞ்சுகம் திகைப்படைந்தவளாகப் பரபரப்போடு விழித்தாள்.

நிர்மலா அவளை மெதுவாக அணைத்துக் கொண்டு, "பயப்படாதே! ஒரு முக்கியமான விஷயம்; எஜமானியம்மாளின் நீலக்கல் மோதிரம் காணாமல் போய் விட்டது" என்றாள்.

"என்ன? நீலக்கல் மோதிரம் திருட்டுப் போய்விட்டதா?" என்று கேட்டுத் திகைப்படைந்து நின்றாள் அஞ்சுகம்.

"அதை நீ திருடி யிருப்பாய் என்று நான் சொப்பனத்தில் கூட நினைக்கவில்லை. இது விதிதானே? அது எப்படி உன் மூட்டைக்குள் வந்ததோ?" என்றாள் நிர்மலா.

"அது என் மூட்டைக்குள் இருந்ததா! நான் திருடினேனா?" என்றாள் நடுங்கும் குரலில் அஞ்சுகம்.

"அப்படியெல்லாம் நீ செய்திருக்க மாட்டாய் என்று நான் எஜமானியம்மாளிடம் எவ்வளவு சொல்லியும் அவள் நம்ப வில்லை. உன்னைப் போலீஸாரிடம் ஒப்படைத்தால்தான் மனசு நிம்மதியடையும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். நல்ல வேளை! எஜமானி யம்மாளை நீ பார்ப்பதற்கு முன்னால் நான் உன்னைப் பார்க்க முடிந்தது. நீ இனிமேல் இந்த வீட்டில் இருந்தால் ஆபத்து; தெரிந்து கொள். இப்பொழுதே நீ உன் துணிமணிகளை எடுத்துக் கொண்டு ஓடிப் போய் விடு" என்றாள், பதைபதைப்பும் அனுதாபமும் கொண்டவள் போல்.

நிர்மலாவின் வார்த்தைகள் எதிர்பாராதவண்ணம் தலையில் விழுந்த இடி போலத்தான் இருந்தன அஞ்சுகத்துக்கு. அவளுடைய அழகிய முகம் அவமானத்தாலும் திகிலாலும் வெளுத்தது. அவள் தனக்குள்ளே பொருமினாள். 'மறுபடியும் நான் போலீஸ்காரர்களிடம் சிக்க வேண்டுமா? மறுபடியும் நான் சிறைக்குச் செல்ல வேண்டுமா?' என்று கடந்து போன சிறை வாழ்க்கையை எண்ணி அவள் உள்ளம் நடுங்கியது. அவள் என்ன செய்வாள்? ஏதும் தோன்றாமல் மனம் குழம்பினாள். தான் திருடியல்ல என்பதை எப்படி அவளால் உலகத்தில் நிரூபித்துக்காட்ட முடியும்?

உலகமே அவளுக்கு எதிராக இருப்பது போல்தான் தோன்றியது. எந்தப் பக்கம் திரும்பினாலும் போலீஸ்



திருப்பூர் பிரபல பஞ்சு வியாபாரம் ஸ்ரீ வி. எஸ். நடராஜமூர்த்தி அவர்களின் குமாரி சௌ. **சகுந்தலாவுக்கும்**, கோவை பிரபல அட்வகேட் ஸ்ரீ C.P. மீனாட்சிசுந்தர சாஸ்திரியார் அவர்கள் குமாரன் சிர. **பாலசுப்ரமணியன்** B.A.க்கும் (Reserve Bank of India, Madras) ஜூலை 13-ந் தேதி விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. திருமணம் நடந்த ஐந்து தினங்களில் முதல் நான்கு தினங்களில் இன்னிசைக் கச்சேரிகளும், நடன விருந்தும் நடைபெற்றன. திருமணத்திற்குப் பிரமுகர்களும் நண்பர்களும் உறவினர்களும் வந்திருந்து விழாவைச் சிறப்பித்தனர். பல பிரமுகர்களிடமிருந்தும், நண்பர்களிடமிருந்தும், வாழ்த்துச் செய்திகளும் பரிசுகளும் வந்தன.



தஞ்சையை அடுத்துள்ள ரெங்கனாதபுரம் கிராமத்து மிராசுதார், ஸ்ரீ வி. வெங்கடராமய்யரின் குமாரன் சிரஞ்சீவி **நடராஜனுக்கும்** சென்னை ஹைகோர்ட் வக்கீல் ஸ்ரீ எம். எஸ். வைத்தியநாதய்யர் B.A., B.L., அவர்கள் குமாரி சௌபாக்யவதி **ஜெயலக்ஷ்மிக்கும்** சென்ற ஜூன் மாதம் 21-ம் தேதி சென்னை மயிலாப்பூரில் விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.

**வாழ்க, ஜெயலக்ஷ்மி — நடராஜன்**



# EPHRILIME

## எப்ரிலைம்



அவள் கொடுக்கும் இந்த மருந்தை உட்கொண்ட ஒரு சில நிமிஷங்களிலேயே அவனது ஆஸ்த்மா உபாதைகள் மாயமாய் மறையும்.

நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக் கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

**யூனியன் டிரக் கம்பெனி லிட்.**
மதராஸ் டிப்போ :
**ஜோன்ஸ் லேன் — மதராஸ்-1**




MA

**ORIGINAL SHUNMUGAM SNUFF (ESTD-1839) CO.**
**POST BOX 140 MADRAS-1**

# இந்தியன் பாங்க், லிமிடெட்



( ஸ்தாபிதம் : 1907 )

**தலைமை ஆபீஸ்: "இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்", வடக்கு பீச் ரோடு, மதராஸ்-1**

தென் இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும், பம்பாய், கல்கத்தா, புது டில்லி முதலிய இடங்களிலும் சப் ஆபீஸ்கள், கிளைகள் இருக்கின்றன.

**மூலதனம்**

| | | | |
|---|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்டது | ... | ரூ. | 1,00,00,000 |
| வழங்கப்பட்டது | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்டது | ... | ரூ. | 60,20,000 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | ... | ரூ. | 77,50,000 |
| டெபாஸிட்டுகள் (31-12-55-ல்) | ... | ரூ. | 29·44 கோடிகள் |

எல்லாவிதமான பாங்கிங் அலுவல்களும் செய்யப்படும்

*என். கோபால அய்யர், செக்ரடரி*

காரரின் முகம்தான் அவளுக்குத் தோன்றியது. அவள் கண்களில் நீர் ததும்ப, தழுதழுத்த குரலில் கூறினாள்: "நான் இதைப்பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? எந்த தேவதை கொண்டு வந்து அந்த மோதிரத்தை என் துணி மூட்டையில் பதுக்கியதோ? நான் அந்த மோதிரத்தைத் திருடவில்லை என்று சொன்னால் யாரும் நம்பிவிடப் போவதில்லை. இங்கு ஏதோ சூது நடக்கிறது. நான் ஒரு தடவை குற்றவாளியாக ஜெயிலில் இருந்ததால் என் மீது எந்தப் பழியைச் சுமத்தினாலும் உலகம் நம்பும். ஆனால் நான் திருடியல்ல. என்னைப் பிடித்த துரதிர்ஷ்டம் எனக்கு அந்தப் பெயரைச் சூட்டி விட்டது. அது போதும், உலகம் முழுவதும் என்னைக் கெட்டவள் என்று நினைப்பதற்கு."

"ஆமாம்! ஏதோ துஷ்ட தேவதைதான் இந்த மாதிரியான விஷமங்களெல்லாம் செய்திருக்க வேண்டும். இது ரொம்பப் பழைய புராதன்மான வீடு. இப்படிப்பட்ட வீடுகளிலெல்லாம் அப்படிப்பட்ட தேவதைகள் நடமாடுவது சகஜம். அதிருக்கட்டும்! நீ சீக்கிரம் கிளம்பு. அப்புறம் ஆபத்து—" என்று பயமுறுத்தினாள் நிர்மலா.

"இந்த உலகத்தில் மனிதர்கள்தான் என்மீது அடாத பழியெல்லாம் சுமத்துவதற்குச் சித்தமாயிருக்கிறார்களென்றால் தேவதைகளும் என்மீது இரக்கமில்லாமல்தா னிருக்கின்றன" என்று துயரத்தோடு சொல்லிக் கொண்டே, சட்டென்று தன் அறையில் போய்த் தன் உடைகளை எடுத்துக் கொண்டு தலை குனிந்தவண்ணமே வெளியே வந்தாள். ஒரு நாள் சொக்கன் சொல்லியபடி அவள் வாழ்வதற்குத் தகுதியான இடம்ஒன்று உண்டு என்றால் மறுபடியும் அங்காடிப் பேட்டைக்குத்தான் அவள் போய்ச் சேர வேண்டும். வாழ்க்கை நெறி கெட்ட அந்த மக்களுடன்தான் அவளும் வாழ வேண்டும். அவள் நிர்மலாவிடம் எவ்வித பதிலும் சொல்லாமல் மெதுவாக நடந்தாள். அவள் அந்த வீட்டின் வாசலுக்கு வந்த போது நிர்மலா அவளுக்குப் பின்னால் வந்து, "அஞ்சுகம், இது ரொம்பப் பரிதாபம். இது மாதிரி ஒரு பரிதாபகரமான நிகழ்ச்சி நடப்பதைக் கண்டால் என் மனம் பொறுப்பதில்லை. நான் எவ்வளவோ உன்னைப் பற்றி எஜமானியம்மாளிடம் சொன்னேன். அவள் எதையுமே ஏற்கவில்லை. என்ன செய்வது?" என்றாள், மிகவும் துயரம் நிறைந்ததாகப் பாவனை செய்துகொண்டே.

"எனக்கு எதுவுமே புரிய வில்லை. மூளை குழம்புகிறது. நான் வந்த அன்றிலிருந்து எனக்குச் சொந்தமில்லாத எந்தச் சாமானையும் நான் கையால் கூடத் தொட்டதில்லை. மறுநாளிலிருந்து எஜமானியம்மாள் என் மீது குற்றம் சொல்லத் தொடங்கி விட்டார்கள். இத்தனை நாட்கள் நான் பணத்தைத் திருடியதாகப் பழி இருந்தது. இப்பொழுது நான் மோதிரத்தைத் திருடியதாகப் பழிசுமத்தப்பட்டிருக்கிறேன். இந்த வீட்டில் எனக்கு எதிரியாக யாரோ இருக்கிறார்கள் என்றுதான் எனக்கு மறுபடியும் தோன்றுகிறது. தேவதைகளாவது, இப்படிச் செய்கிறதாவது? அதையெல்லாம் நான் நம்பவில்லை" என்றாள் துக்கத்தினிடையே சிறிது ஆத்திரத்தோடு.



இதைக் கேட்டதும் நிர்மலா முன்னிலும் பச்சாத்தாபமும் அன்பும்கொண்டவள்போல் அஞ்சுகத்தை அணைத்துக் கொண்டாள். "எனக்கும் அவைகளில் நம்பிக்கை இல்லைதான்.... எனக்கு எப்பொழுதுமே ஒரு சந்தேகம் உண்டு, அஞ்சுகம்! ஆனால் நாம் அதை நிரூபிக்க முடியாது. வயதான காலத்தில் எஜமானியம்மாளுக்கு மூளை குழம்பி இருப்பதால் அவள் தட்டுத் தடுமாறித் தன்னுடைய பண்டங்களை எங்கெங்கோ கொண்டு போய் வைக்கிறாள். ஏன் அவளே தன் மோதிரத்தை உன்

மூட்டையில் கொண்டு வந்து வைத்திருக்கக் கூடாது?'' என்று கேட்டாள்.

அஞ்சுகம் நிர்மலாவின் முகத்தைக் குறிப்பாகவும் சந்தேகத்தோடும் பார்த்துக் கொண்டே, ''நான் அப்படி நினைக்கவில்லை. அவள் அப்படிச் செய்திருப்பாளானால் அவள் எல்லா விஷயத்திலுமே அப்படி மூளை குழம்பிப் பிதற்றுபவள் போல் அல்லவா இருக்க வேண்டும்?'' என்று கூறினாள்.

''என் வார்த்தையை நம்பா விட்டால் போ. எல்லாருமே அதைப் புரிந்துகொள்வது கடினம். இந்த வீட்டில் நீ இருந்தால் ஆபத்துக்கு மேல் ஆபத்து ஏற்படும் என்பதால்தான் உன்னைப் போகச் சொல்கிறேன். எஜமானியம்மாள் உன் மீது ஏதோ வஞ்சம் தீர்த்துக் கொள்பவள் போல்தான் இருக்கிறாள். நான் அவளுக்குச் சமாதானம் சொல்லா விட்டால் இத்தனை நேரம் அவள் போலீசையே வரவழைத்திருப்பாள். தெரியுமா?''



அஞ்சுகத்தின் முகம் இதைக் கேட்டதும் ரத்தம் சுண்டியது போல் வெளுப்படைந்தது. அந்த இடத்தில் இன்னும் ஒரு விநாடி நின்றால் கூட வாழ்க்கையில் அவள் அனுபவித்த அவமானத்தை மறுபடியும் அனுபவிக்க நேரும். அவளுடைய குற்றமற்ற நெஞ்சையும் பரிசுத்தத்தையும் அப்பொழுது எப்படி நிரூபித்துக் காட்ட முடியும்? உலகத்தில் நியாயத்தை நிலை நிறுத்துவதற்காக ஏற்பட்ட எந்தச் சட்ட விதிகளும் அவளைப் போன்ற அபலைப் பெண்ணைக் காப்பாற்ற அருகதையற்றவை என்பதை அவள் உணர்ந்தாள். அவள் கண்களில் நீர் தளும்ப நிர்மலாவுக்கு வணக்கம் செய்து விட்டு விடைபெற்றாள்.

''உன்னைப் பார்த்தால் எனக்கு மிகவும் துக்கமாக இருக்கிறது. ஏழை—அனாதைப் பெண். நீ உலகத்தில் எப்படி வாழப் போகிறாய்? உனக்கு உதவி செய்யக்கூடிய நல்ல மனிதர்கள் யாரேனும் இருந்தால் அவர்களிடம் போய் ஒழுங்காகவும் அடக்கமாகவும் இரு. வேறு என்ன செய்ய முடியும்?'' என்றாள் நிர்மலா மிகவும் துயரத்துக்குள்ளானவள் போல்.

''நல்ல மனிதர்களா! அப்படி யாரும் எனக்கில்லை. திருடர்கள், பொய்யர்கள், சோம்பேறிகள், போக்கிரிகள் இவர்களைத்தான் தெரியும். அவர்களிடையே தான் நான் வாழ்ந்தேன். என் விதி இனியும் அவர்களோடுதான் சேர்ந்து வாழ வேண்டும் போலும்! நானும் அவர்களை விட்டு விலகி இருக்க வேண்டும் என்றுதான் விரும்பினேன். விதி யாரை விட்டது? இப்பொழுது நானாகவே அவர்களிடம் போய்ச் சேர வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. உலகத்தில் எனக்கு அந்த வழி ஒன்றுதான் உண்டு. என்னைப் பத்திரமாகக் காப்பாற்றுவேன் என்று யார் வாக்களித்திருக்கிறார்களோ அவர்களிடம் போகிறேன். நான் மீண்டும் சிறைச் சாலைக்குச் செல்வதை விட மற்ற எதுவும் எனக்குக் கெடுதலானதல்ல. இந்த உயிரை விட்டாலும் விடுவேனே தவிர மறுபடியும் சிறை வாசலை மிதிக்க மாட்டேன்''

என்று சொல்லி விட்டு அவள் மெதுவாக நடந்தாள். அவள் எவ்வளவு நம்பிக்கையோடு அந்த வீட்டுக்குள் அடியெடுத்து வைத்தாள்! ஆனால் இன்று...! தோல்வியுடன் மற்றொரு பழியையும் தாங்கிக் கொண்டல்லவா செல்கிறாள்?

அஞ்சுகத்தின் உருவம் இருளில் மறையும் வரை அவளையே பார்த்துக்கொண்டிருந்தாள்; பிறகு கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே சென்று நாற்காலியில் அமர்ந்து ஒரு பெருமூச்சு விட்டாள் நிர்மலா. அஞ்சுகத்தோடு பேசிக் கொண்டிருக்கும் போதெல்லாம் பரிவும் பச்சாத்தாபமும் தோய்ந்திருந்தது போல் இருந்த அவள் முகத்தில் வஞ்சனையும், வெறுப்பும் வந்து சூழ்ந்து கொண்டன. அவளுடைய அழகான கண்களில்தான் எத்தகைய குரூரம் தாண்டவமாடியது? அவளுடைய சிவந்த உதடுகள் சூதும் கொடுமையும் நிறைந்த விஷச் சிரிப்பால் நெளிந்தன. அவள் ஒரு தடவை தன் தலையை ஆட்டிக் கொண்டாள், தான் போட்ட திட்டப்படி அதுவரையில் எல்லாவற்றையும் மிகவும் வெற்றிகரமாக நடத்தி விட்டது போல்.

**(தொடரும்)**

அவள் கேட்டது பின்னி சேலைகள்

நீங்களும் அதையே தான் கேட்பீர்கள்!

விருந்துக் கூட்டங்களில்
அலங்காரமாய் எடுப்
பாகத் தோன்றுவதற்கு
பின்னி
ஸில்குகளும்
ஜார்ஜெட்டுகளும்
இன்றியமையாதவை



எச். ஏ. ஆர். மகம்மத் & சன்ஸ்
சென்னை




# எங்கிருந்து வந்தார்கள்?

காந்தன்

சினிமா பார்ப்பது ஒருவிதமான அனுபவம் என்றால், நாடகம் பார்ப்பது இன்னொரு விதமான அனுபவம். 'சினிமாக் காட்சிகளில் தத்ரூபமாக நேருக்கு நேர் பார்ப்பதுபோல் பல அபூர்வ நிகழ்ச்சிகளைக் காண முடியும். நாடகத்தில் அத்தகைய காட்சிகளைக்காணவே முடியாது' என்று எல்லோரும் நினைக்கிறார்கள். அது உண்மைதான். ஆனால் நாடகத்தில் காணக் கூடிய சில ரஸாநுபவங்களைச் சினிமாப் படங்களில் காண முடியாது என்பதையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

'ஓ'வென்று இரைச்சலிடும் அருவியையும், நீலவானத்தையும், அலைமோதும் ஆழ்கடலின் அழகையும், வெண்மதியையும், வியக்கத்தக்க விண்மீன்களின் விளையாட்டையும், சீறும் நாகத்தையும், கொல்லும் புலியையும், ஆசை பெற விழிக்கும் மானையும், அதன் அருகே பாடி நகர்ந்து வரும் நதியையும் சினிமாவில் நேருக்கு நேர் பார்க்கலாம். நாடகத்தில் இந்தக் காட்சிகளைக் காண முடியாதுதான்.

ஆனால், ஆண் குரல் படைத்த பெண் உருவங்களையும், ஆடாத மரங்களையும், பாடாத ரேடியோவையும், ஓடாத ரயில் வண்டிகளையும், நாடகத்தில் வரும் வசனங்களை மறந்து விசனப்படும் கதாநாயகியையும், கதாநாயகியின் கவலையை அறிந்து கண்ணீர் உகுக்கும் கதாநாயகனையும், காட்சி முடிந்த பிறகும் இறங்க மறுத்துவிடும் நாடகத் திரையையும் சமய, சந்தர்ப்பம் தெரியாமல் தொந்தரவு கொடுக்கும் நடிகர்களின் சாரீரத்தையும் காணும் அரிய வாய்ப்பு நாடக மேடைகளில்தான் கிடைக்கும். அதுவும் நாடகத்தை நடிப்பவர்கள் அமெச்சூர் நடிகர்களாயிருந்து விட்டால் கேட்கவே வேண்டாம்.

அமெச்சூர் நாடகத்தைப் பார்ப்பதற்கு முன்பு ஒரு விஷயம் நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அமெச்சூர் நாடகக் குழுவில் நடிப்பவர்களெல்லோரும் வாழ்க்கையில் வெவ்வேறு துறைகளில் ஈடுபட்டிருப்பவர்கள். ஆகவே பொழுது போக்காகவே அவர்கள் நடிப்புக் கலையைப் பழகுவார்கள். அதே மாதிரி நாடகம் பார்க்க வருபவர்களும் நாடகத்தில் பங்கெடுத்துக் கொள்ளுகிறவர்களின் முக தாட்சண்யத்துக்காக அசிரத்தையோடு வருவார்கள். நாடகமும் சாவதானமாகக் குறித்த நேரத்துக்குக் கொஞ்சம் தாமதமாகவே ஆரம்பமாகும்.

அத்தகைய நாடகத்துக்குப் போக நேரிட்டால், மேடையை மட்டும் கவனிப்பதில் பயனில்லை. ஒவ்வொரு காட்சியிலும் மேடையின் பக்கவாட்டுகளையும் கவனிக்க வேண்டும்.

ஒரு நடிகர் — கதாநாயகர் — மேடையில் தோன்றிப் பேச ஆரம்பிப்பார். 'கண்ணே !' என்றதும் அந்தப் பாழாய்ப் போன வசனம் 'மக்கர்' பண்ணும். தொண்டையைக் கனைப்பார் ; இருமுவார் ; ''உம்..உம்..'' என்பார். ஆனால் வார்த்தை வாயில் வராது.

அந்தச் சமயத்தில் நாம் மேடையின் பக்கவாட்டுகளில் கவனத்தைச் செலுத்தினால் சுவாரஸ்யமாயிருக்கும். வசன புத்தகமும் கையுமாக அங்கே தெரிந்தும் தெரியாமலும் 'பிராம்ப்டர்', — அதாவது உதவியாளர், ஒளிந்து கொண்டிருப்பார். அவர் அச்சமயம் சிறிது வெளிப்பட்டு நடிகருக்கு மறந்து தொலைந்த வசனங்களை எடுத்துச் சொல்லி அவரைத் தடுத்து ஆட்கொள்ளுவார். அந்தக் காட்சிதான் நாடகத்தைவிட ரஸமானது.

''கண்ணே, நீ ஆடினால் நான் ஆனந்தமடைவேன் !'' என்று உதவியாளர் சொன்னதைக் கேட்டுக் கொண்டு நடிகர் மீண்டும் அந்த வசனத்தைச் சொல்லுவார். மீண்டும் விழிப்பார். உடனே உதவியாளர் குரல் கொடுப்பார், ''....நீ பாடினால் நான் பரவசமடைவேன்..'' என்று. நடிகரும் அதை அப்படியே ஒப்பிப்பார். இந்த ருசி சினிமாவில் காண முடியாது !

நாடகத் துறையில் சிறந்து விளங்கும் தொழில் நடிகர்களைப் பற்றிச் சொல்ல வரவில்லை. அவர்கள் நன்கு பயிற்சி பெற்ற



நடிகர்கள். அவர்களிடம் இந்தக் குறை யையே காண முடியாது. அமெச்சூர் நடிகர் களும் சிரத்தையுடன் முயன்றால் இந்தக் குறையை அகற்றி விடலாம்.

பெரிய பெரிய உத்தியோகஸ்தர்களெல் லாம் நடிப்புக் கலையில் உள்ள ஆர்வம் காரணமாகப் பலனை எதிர்பாராமல் அமெச் சூர் சங்கங்கள் நிறுவி நெடுங் காலமாக நாடகம் நடத்தி வருகின்றனர். அத்தகைய வர்கள் இல்லை யென்றால் நாடகக் கலை மறைந்து போயிருக்கும் என்றே கூறலாம். மேற்படி அமெச்சூர் சங்கங்களிடம் உள்ள ஆர்வம் காரணமாக நான் ஜூலை 21-ந் தேதி யன்று சென்னை இந்தியன் நேஷனல் ஆர்ட் டிஸ்ட்ஸ் நாடகக் குழுவினர் எழும்பூர் மியூஸி யம் தியேட்டரில் நடித்த "**எங்கிருந்தோ வந் தான்**" என்னும் நாடகத்தைப் பார்க்கச் சென்றேன். அந்த நாடகத்துக்குக் கதை எழுதியவர் திரு வி. எஸ். ஆர். என்றும், வசனமும் பாடல்களும் அமைத்தவர் திரு மா. ரா. என்றும் அறிந்து மகிழ்ச்சியுற்றேன். இந்த இரு அம்சங்களும் மேற்படி நாடகத் துக்கே ஜீவநாடியாக விளங்கும் இரு சிறந்த அம்சங்களாக உள்ளன.

இந்தக் கதையில் மருந்துக்குக்கூடக் காதல் கிடையாது. குழந்தை அன்பு, சகோதர வாஞ்சை, புத்திர வாத்ஸல்யம், பெற்ற மனத்தின் பேதைமை, காதலர் பிரிவாற் றாமை, பிரிந்தவர் கூடுதல், உள்ளத்தை உருக்கும் சோகம், மோகத் தீயின் வேகம்— இவைகளில் ஏதாவது இடம் பெற்றிருக்கின் றனவா என்று கேட்டால், "ஊஹூம், கிடையவே கிடையாது. எதுவுமே கிடை யாது" என்றுதான் கூறவேண்டியிருக்கிறது.

ஆரம்பத்தில் ஒரே ஒரு பெண் வருகிறாள், ஆனால் வந்த சற்று நேரத்துக்கெல்லாம் கொலை செய்யப்பட்டு விடுகிறாள். கடைசியில் ஒரு பெண் வருகிறாள். அவள் வந்த சில நிமிஷங்களில் நாடகமே முடிந்து விடுகிறது!

"என்ன ஐயா, இது! பெண் பாத்திரம் இல்லாமல் ஒரு நாடகமா?" என்று நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது.

ஆம். இந்த நாடகத்தில் பெண் பாத்திரம் இருக்கத்தான் செய்கிறது. அதை ஆதார மாகக் கொண்டுதான் கதை அமைக்கப்பட் டிருக்கிறது. ஆனால் நாடகத்தில் அந்தப் பாத்திரத்துக்கு வேலை அதிகம் இல்லை. அதனால் எந்த விதத்திலும் நாடகத்தின் சுவாரஸ்யம் குன்றி விடவில்லை.

பணக்காரனை பத்மநாபன் புஷ்பாவைக் காதலிக்க வில்லை; ஆனால் அவளை மணந்து கொண்டு அவளுடைய பிதுரார்ஜித சொத்தை அடைய விரும்பினான். புஷ்பா அநாதை. அவளுக்குப் பத்மநாபன் கார்டியன்.

அவள் வாழ்க்கையே மிகவும் விசித்திர மானது. அவளுடைய இளம் பிராயத்திலேயே பெற்றோர் அவளைத் தனியே விட்டுப் பிரிந் தனர். தனக்கு இணங்காத அவளைப் பத்ம நாபன் கொன்று விட்டான்.

பத்மநாபனிடம் இரவலாகத் துப்பறியும் நாவல் வாங்கிப் படித்துத் தன் புத்தியை வளர்த்து வைத்திருக்கிறான் ராஜா என்ற சிறு பயல். அவன் அத்துடன் நின்றிருந்தால் பாதக மில்லை. பத்மநாபன் செய்த கோரக் கொலை யைக் கண்ணால் பார்த்து விட்டான். அத்துட னாவது நின்றிருக்கக் கூடாதா? அவன் தகப்பனார் அடிக்கடி சொல்லுவது போல், 'பாவிப் பயல் மகன்' அதைப் போலீஸில் சொல்லித் தொலைத்து விட்டான். அவ்வளவு தான் அவன் செய்தது. அதன் காரணமாக ரசிகர்கள் இந்த நாடகத்தில் போலீஸ் ஸ்டேஷனையும், பத்மநாபன் வீட்டையுமே மாறி மாறிப் பார்க்க நேரிடுகிறது. ஆனால் அது அலுப்புத் தட்டவில்லை. நாடகத்தின் முடிவையறியும் ஆவலும் விறு விறுப்பாக ஓடும் காட்சிகளும் பார்ப்பவர்களைப் பர வசப்படுத்துகின்றன.

ராஜா தான் கண்ணால் பார்த்த கோரக் கொலையை வெளிப்படுத்திப் பத்மநாபனைத் தூக்கு மேடைக்கு அனுப்பியே தீருவதென்று

உறுதியோடு இருக்கிறான். தான் செய்த கொலையை அடியோடு மறைத்து விடுவது என்று பத்மநாபனும் உறுதியாக இருக்கிறான். ராஜாவின் தந்தை சங்கரலிங்கம் தன் மகனின் உறுதியைத் தகர்த்தெறிவதில் உறுதியாயிருக்கிறார். ராஜாவின் மூலம் விஷயம் முழுவதும் அறிந்த போலிஸ் இன்ஸ்பெக்டர் கொலைக் குற்றம் சரியானபடி ருசுவாக வேண்டும் என்று உறுதியாயிருக்கிறார்.

தமது பள்ளியின் ஆண்டு விழாவுக்குத் தலைமை வகிக்கப் பத்மநாபனை அழைப்பதில் தமிழாசிரியர் கார்முகில் பண்டிதர் உறுதியாக இருக்கிறார். போலிஸ் இன்ஸ்பெக்டரும், டி. எஸ். பி.யும் அந்தச் சந்தர்ப்பத்தில் பத்மநாபனைக் கைது செய்யும் விஷயத்தில் உறுதியா யிருக்கிறார்கள். திடீரென்று எங்கிருந்தோ வந்து குதித்த உஷா—புஷ்பாவின் தங்கை— தன் சகோதரியைக் கொலை செய்தவனைப் பழிவாங்குவதில் உறுதியாயிருக்கிறாள்.

ஆகவே, நாடகம் பார்க்க வந்த ரஸிகப் பெருமக்களும் கடைசி வரையில் உறுதியோடு இருந்து நாடகம் பார்க்க வேண்டியதாகிறது.

நடிகர்கள் அனைவரும் சக்கைப் போடு போடுகிறார்கள். 'நடமாடும் நியூஸ்மார்ட்'— அதாவது பத்திரிகை விற்கும் பையனிலிருந்து நாடக வில்லன் பத்மநாபன் வரையில் ஒவ்வொருவரும் மிகச் சிறப்பாக நடிக்கிறார்கள். இந்த நாடகத்தைத் தொழில் நடிகர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் பார்க்க நேர்ந்தால், நிச்சயம் மூக்கில் விரல் வைத்து அதிசயித்துப் போவார்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

'வில்லன்' என்றாலே பொல்லாதவன் என்றொரு அபிப்பிராயம் எல்லாருக்கும் உண்டு. ஆனால் இந்த நாடகத்தில் வில்லன் பத்மநாபன் பாத்திரம் தாங்கிய ஸ்ரீராகவன் அதைத் தகர்த்து எறிந்து, நல்லவன்கூட வில்லனாயிருக்க முடியும்; வில்லனும் நல்லவன் போல் இருக்கக்கூடும் என்ற உண்மையைப் பிரமாதமாக நடித்துக் காட்டுகிறார்.

புஷ்பாவிடம் தன் கருத்தை வெளியிட்டு அவள் மறுத்ததும் கோபம் கொண்டு அவள் கழுத்தைக் கருக்கிட்டதிலிருந்து, போலிஸ் விசாரணை, ராஜாவின் இடையறாத குற்றச் சாட்டுகள் முதலிய எல்லாச் சிக்கல்களிலும் ஸ்ரீராகவன் இணையற்ற திறமையோடு நடித்திருக்கிறார். அவர் சிரிப்பும், அலட்சியப் பார்வையும், முகபாவமும், அழுத்தமான அவரது இயல்பை அற்புதமாக வெளியிடுகின்றன.

சிறுவன் ராஜாவின் இளம் நெஞ்சில் பதிந்த கோரக் கொலைக் காட்சி அவனை எப்படியெல்லாமோ ஆட்டி வைக்கிறது. கண்ணால் கண்ட உண்மையை நிரூபிக்க முடியாமல் விம்முகிறான்; பெருமூச்சு விடுகிறான். தன் பேச்சை நம்பாத பெற்ற தகப்பனாரை எதிர்த்து வாதாட முடியாமல் உள்ளங் குமுறுகிறான். ''இது தெய்வத்துக்குப் பொறுக்குமா? கொலை செய்தவன் தண்டனையின்றி உயிர் வாழ்வதா?'' என்று கதறுகிறான்.

இந்தச் சிரமமான பாத்திரத்தை ஏற்று அபாரமாக நடிக்கும் ஸ்ரீ வாதிராஜ், தாம் உண்மையிலேயே ஒரு சிறந்த நடிகர் என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளுகிறார்.

ராஜாவின் தந்தை சங்கரலிங்கமாக நடிக்கும் பாலசந்தர் நாடக பாத்திரமாகவே மாறி அந்தப் பாத்திரத்துக்கு உயிர் கொடுக்கிறார்.

தமிழ்ப் பண்டிதராக நடிக்கும் ஸ்ரீ விஜயராகவன் எவ்வாற்றானும் பாராட்டுக்கு உரியவரே. எஞ்ஞான்றும் அன்னாரின் விசேஷ நடிப்பும், குனிந்து சரிந்த தோற்றமும், தமிழை அறக் கற்ற அறிஞரே போல் அவர் அருந் தமிழில் அறைந்ததும் அனைத்துலகும் காணக் கிடைக்காத அருமையானதொரு நிகழ்ச்சியே! ஆனால் தமிழ்ப் பண்டிதர் வடமொழிச் சொற்களை அத்துணை கலந்து பேசி இருக்க வேண்டியதில்லை.

புஷ்பாவாகவும் உஷாவாகவும் நடிக்கும் தேவிகாராணி அநாயாசமாக நடித்து நல்ல பெயர் வாங்கி விடுகிறார்.

டி. எஸ். பி.யாக நடிக்கும் வேணுகோபாலும், ஸப்-இன்ஸ்பெக்டராக நடிக்கும் நடராஜனும் உத்தியோக மிடுக்கோடு விறைப்பாகப் பேசி நடிப்பதுமல்லாமல், சிறுவன் ராஜாவின் மன வேதனையையும் மதித்து மனித இதயத்தோடு நடந்து பாராட்டைப் பெற்று விடுகின்றனர். கான்ஸ்டபிள் 420 ஆக நடிக்கும் ஹரிகிருஷ்ணன் டெலிபோனில் பேசுவதிலிருந்து சல்யூட் அடிக்கிற வரை எல்லாமே மறக்க முடியாத ஹாஸ்யங்கள் தான்.

கொலையும் விசாரணையும், துடிப்பும், மன வேதனையும் நிறைந்த இந்த நாடகத்தில் நல்ல பழத்தில் நிறைந்திருக்கும் இனிய சாறு போல், ஹாஸ்யரஸம் ததும்புகிறது. அந்த ரஸத்தை எடுத்துப் பரிமாறும் பொறுப்பை ராமுவும் சோமுவும் ஏற்றுக் கொண்டு எல்லோரையும் விழுந்து விழுந்து சிரிக்கப் பண்ணுகிறார்கள். மாலியும் ராஜகோபாலும் இந்த நாடகத்தில் இல்லை என்றால், புஷ்பாவின் கொலைக்குச் சாட்சியம் கிடைப்பது சிரமம். அவர்கள் கண்டெடுத்த கைப்பையின் உதவி இல்லையென்றால் வழக்கைச் சுலபமாக முடித்திருக்க முடியாது. நாடகம் பார்ப்பவர்களும் கோரக் கொலை நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்ட இந்த நாடகத்தைப் பார்த்து விழுந்து விழுந்து சிரித்து ரஸித்து மகிழ்ந்திருக்க முடியாது.

அரங்க நிர்மாணமும் அதற்கேற்ற ஒளி வீச்சும் அருமையாக அமைந்திருக்கின்றன என்பதையும் குறிப்பிடாமல் இருக்கமுடியாது.

''எங்கிருந்தோ வந்தான்'' என்னும் இந்நாடகத்தை இவ்வளவு சிறப்பாக, கச்சிதமாக நடிக்கும் இந்த அமெச்சூர் நடிகர்கள் திடுதிப்பென்று நாடக மேடையில் தோன்றிச் சக்கைப்போடு போடுகிறார்கள். இந்த அற்புத நடிகர்கள் இத்தனை நாட்களும் எங்கே இருந்தார்கள்; எங்கிருந்து வந்தார்கள் என்று கேட்கத் தோன்றுகிறது!





டாக்டர்:—"என்னப்பா, உடம்பு சரியாக இல்லையா ?"


"ஸார்! போர்ட்டர் வேணுமா ?"

# அசட்டுக் கேள்விகள்


" ஆசிரியர் ஐயா, தங்கள் பத்திரிகையில் கதை கட்டுரை எல்லாம் பிரசுரிப்பீர்களா?"






# “நான் எப்போதும் விரும்புவது காவேரி ஸூபர் சோப்”

“காவேரி ஸூபர் சோப் தேய்த்து குளித்தவுடன் என் உடல் சோர்வு நீங்கி நான் உற்சாகமடைகிறேன். உடலும் தூய்மையடைகிறது. காவேரி ஸூபர் சோப்பை உபயோகித்து குளிப்பதனால் ஏற்படும் இன்பமே அலாதி! தேக துர்நாற்றத்தையும் அழுக்கையும் அறவே அகற்றி எனக்கு ஒரு புத்துணர்ச்சியை அளிப்பது காவேரி ஸூபர் ஒன்றுதான்!”

ஔஷத குணம் நிறைந்த சால் மூக்ரா தைலம் கலந்து தயாரிக்கப்படும் காவேரி ஸூபர் சோப் ஒரு உன்னத ஸ்நான சோப். கையடக்கமான ஸைஸ். எப்போதும் நீங்கள் கேட்டுவாங்க வேண்டிய சோப் காவேரி ஸூபர் சோப்.






தயாரிப்பு:
மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.
மேட்டூர் அணை
சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்: சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிட்.


‘இசை விருந்து’ — புதன் கிழமைதோறும் ‘ரேடியோ சிலோன்’னில் 6 - 30 மணிக்கு — 41 மீட்டரில்

# அவசரக்கோலம் வேண்டாம்!

கொழும்பு, ஜூலை 30உ.

இலங்கை அரசாங்கத்தின் சிங்கள பாஷைக் கொள்கையை எதிர்க்க இந்தியாவில் ஆதரவு திரட்டுவதற்காக இலங்கை தமிழ் அரசுக் கட்சி எடுத்துவரும் நடவடிக்கைகளைச் சிங்களத் தலைவர்கள் கடுமையாகக் கண்டித்து வருகிறார்கள். பிரதம மந்திரி ஸ்ரீ பண்டார நாயகா இதைப் பற்றிப் பத்திரிகை நிருபர்களின் மகாநாட்டில் பிரஸ்தாபித்த பொழுது, சமஷ்டித் தலைவர்கள் ஒரு அந்நிய நாட்டின் உதவியை நாடுவதற்கு வருத்தம் தெரிவித்து விட்டு, பாஷைப் பிரச்னை இலங்கையின் உள்நாட்டுப் பிரச்னையாதலால், அதில் இந்தியா தலையிடுவது இரு தேச உறவையும் பாதிப்பதாயிருக்கும் என்று நாசூக்காக எச்சரித்தார்.

சமஷ்டிக் கட்சியின் பொதுக் காரியதரிசியும் எம். பி. யுமான ஸ்ரீ எஸ். ஜே. வி. செல்வநாயகம் இதைப் பற்றிப் பார்லிமெண்டில் பிரஸ்தாபித்த பொழுது அநீதி இழைக்கப்படும் ஒரு சமூகம் தனக்கு இழைக்கப்படும் அநீதிகளை உலகறியச் செய்வது இயற்கையும் அதன் கடமையுமாகும் என்று கூறினார். தமிழர்களின் பிரதேசங்களில் சிங்களவர்களைப் பதினாயிரக் கணக்கில் குடியேற்றி, தமிழ் மக்களை அவர்களுடைய பகுதிகளிலேயே சிறுபான்மையோர்களாக்க முயற்சிப்பதைக் குறிப்பிட்டார். தமிழ் பேசும் மக்களை அடியோடு ஒழிப்பதுதான் அரசாங்கத்தின் இலட்சியமாக இருக்கிறது என்று அவர் கூறினார். 1948-ம் வருஷம் புதிய பிரஜாவுரிமைச் சட்டம் இயற்றப்பட்டதையும் அதன் விளைவாகப் பத்து லட்சம் இந்தியத் தமிழர்கள் வோட்டுரிமையை இழந்ததையும் பார்லிமெண்டிலிருந்து அவர்களுடைய எட்டு ஸ்தானங்களும் பறிபோனதையும் எடுத்துக் காட்டி, இதெல்லாம் தமிழ் பேசும் மக்களை நசுக்கும் நடவடிக்கைகள் என்று குறிப்பிட்டார்.

* * *

இவ்வாரம் தனிச் சிங்கள மசோதாவை எதிர்த்துப் போராட்டம் நடத்துவதற்காக ஒரு ஐக்கிய முன்னணியை ஏற்படுத்துவதின் பொருட்டு ஸ்ரீ வி. சுந்தரலிங்கத்தின் வாசஸ்தலத்தில் தமிழ்த் தலைவர்களின் மகாநாடு ஒன்றுநடைபெற்றது: இம்மகாநாட்டிலும் இந்தியத் தமிழர்களின் பிரஜாவுரிமைப் பிரச்னை விவாதத்துக்கு வந்தது. பாஷைப் பிரச்னை என்பது இந்திய வம்சாவளியினர்களின் பிரஜாவுரிமைப் பிரச்னையைச் சேர்ந்த ஒரு அம்சமே என்றும், தமிழ் பேசுவோர் என்ற காரணத்தை முன்னிட்டே இந்தியத் தமிழர்களின் உரிமை பறி போயிருக்கிறது என்றும், ஆகையால் தங்களுடைய போராட்டம் நியாயமற்ற பிரஜாவுரிமைச்சட்டத்தை எதிர்த்து நடத்தப்பட வேண்டுமென்றும் சமஷ்டிக் கட்சித் தலைவர்கள் வற்புறுத்தினார்கள். " நம்மில் சிலர் முன்பு இந்தியத் தமிழர்களுக்குத் துரோகம் செய்தோம். அந்தப் பாபத்தைக் கழுவி அவர்களுடைய நம்பிக்கையை மறுபடியும் பெறப் பிரஜாவுரிமைப் பிரச்னையில் நமது திட்டவட்டமான அபிப்பிராயங்களைப் பகிரங்கமாக

## 'மேயர் நாயுடு' மறைந்தார்

● முன்னாள் மேயர் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு மறைந்தார் என்ற எதிர்பாராத செய்தி கேட்டுத் தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் பெரும் துயரத்துக்குள்ளாகி யிருப்பார்கள். சென்னை நகரத் தலைவர் பதவியையும் 'ஷெரீப்' என்னும் கௌரவப் பதவியையும் திறம்பட வகித்துப் பெரும் கீர்த்தியும் பெற்றவர்.



ஸ்ரீ நாயுடு சிறந்த பக்திமான். எப்போதும் தூய உடை தரித்துத் தூய்மையான உள்ளத்துடன் வாழ்ந்தவர். பொது நலப் பணியில் குன்றாத ஊக்கமும் பரோபகார சிந்தையும்கொண்டவர். காந்தி மகான் ஞாபகார்த்த மண்டபத் திருப்பணியில் ஈடுபட்டவர். எல்லாரிடமும் சமமாகவும் சுமுகமாகவும் பழகும் அருங்குணம் படைத்தவர். சிறந்த பேச்சாளர். நல்ல ரசிகர்.

தமது கடைசிக் காலத்தில் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துடன் தொடர்பு கொண்டு பணியாற்றி வந்தார். கடந்த ஒரு மாத காலமாக நோய்வாய்ப்பட்டுச் சென்ற 23-7-56 அன்று தமது ஐம்பதாவது வயதில் காலமாகி விட்டார். தந்தையைப் பிரிந்து நிற்கும் இரு பெண்களுக்கும் புதல்வருக்கும் அவருடைய உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். ●

வெளியிட வேண்டும்'' என்று அவர்கள் மகாநாட்டில் எடுத்துக் கூறினார்கள்.

இலங்கையில் இந்தியப் பிரஜைகளா யிருப்பவர்களின் நிலைமையும் இந்திய வர்த்தகர்களின் நிலைமையும் எவ்வளவு நிச்சயமற்றதாயுள்ள தென்பதை இலங்கை இந்திய வர்த்தகச் சங்கத்தின் தலைவர் ஸ்ரீ எஸ். பாலசுப்பிரமண்யம், சங்கத்தின் 26-வது வருடாந்திரப் பொதுக் கூட்டத்தில் தலைமை வகித்துப் பேசிய பொழுது தெளிவாக எடுத்துச் சொன்னார். நிச்சயமற்ற இந்த நிலைமை தொழிலையும் பொருளாதாரத்தையும் பாதிக்கும். ஒவ்வொரு இந்தியத் தொழில் ஸ்தாபனத்திலும் நம்பிக்கைக்குரிய சில பதவிகளில் இந்தியர்களைத் தொடர்ந்து வைத்துக் கொள்ள அனுமதிக்க வேண்டு மென்றும் இதற்கு அரசாங்கம் ஒரு கோட்டாவை நிர்ணயிக்க வேண்டு மென்றும் கேட்டுக் கொண்டார். ''வர்த்தகத்தைப் படிப்படியாக இலங்கையர் மயமாக்குவதை நாங்கள் ஆட்சேபிக்கவே யில்லை. ஆனால் பெருமளவு முதலீடு செய்திருக்கும் தொழில்களைச் சீர்குலைக்கும் முறையில் தீவிரமாக இலங்கையர் மயக் கொள்கையை அவசரப்பட்டு அமுல் நடத்தக் கூடாதென்றே நாங்கள் சொல்லுகிறோம்'' என்று ஸ்ரீ பாலசுப்ரமண்யம் அரசாங்கத்துக்கு அறிவுரை கூறினார். பெரும்பாலான இந்தியச் சிப்பந்திகள் ஏற்கெனவே இந்தியாவுக்குத் திரும்பிவிட்டபடியினால் இலங்கையில் எஞ்சியிருப்பவர்களைத் தொடர்ந்திருக்க அனுமதிப்பது இலங்கையர் நலனுக்குப் பாதகமாயிராதென்றும் அவர் சொன்னார். - ரஜனி

## ****** கல்வித் தொண்டுக்குப் பாராட்டு விழா ******

நுங்கும் நுரையுமாகப் பொங்கி வந்த புது வெள்ளத்தில் ஒரு வாலிபன் அகப்பட்டுக் கொண்டு அவதிப்பட்டான். அவனை வெள்ளத்தில் இருந்து காப்பாற்றிக் கரையேற்றினார்கள். அவன் களைப்புத் தீர்ந்தவுடன் ''இந்த ஊர் ஆரம்பப் பாடசாலையில் உபாத்தியாயராக இருக்கிறாயா?'' என்று கேட்டார்கள். ''அப்பா, மாட்டேன்!'' என்று அலறிக் கொண்டு மீண்டும் ஆற்றில் விழச் சென்றானாம் அந்த வாலிபன். ஆரம்பப் பாடசாலை வாத்தியாராக இருப்பது அவ்வளவு கஷ்டமானது என்பதற்கு இந்தக் கதை கர்ண பரம்பரையாக வழங்கி வருகிறது.

இவ்வளவு கஷ்டமான ஆரம்பப் பாடசாலை வாத்தியார் பதவியை ஒருவர் ஏற்று, பிள்ளைகளிடத்திலும் பெற்றோரிடத்திலும் நல்ல பெயர் சம்பாதிப்பது என்றால் அது சாதாரண காரியமா? அதிலும் முப்பத்திநாலு ஆண்டுகள் சிறப்பாகத் தொண்டாற்றினால் அதற்கு ஒரு விழாக் கொண்டாட வேண்டியதுதானே!



மாயூரம் நகராண்மைக் கழகப் பள்ளியில் 34 ஆண்டுகள் தொண்டாற்றிய ஸ்ரீ சி. கோவிந்தசாமி பிள்ளை, நீண்ட காலப் பணிக்குப் பிறகு சமீபத்தில் தம் வேலையிலிருந்து ஓய்வு பெற்றார். அவருடைய நீண்ட நாள் சேவையையும், ஆசிரியர் சங்கத்தலைவராக இருந்து பணியாற்றியதையும் பாராட்டுவதற்காக மாயூரத்தில் உள்ள பல அன்பர்கள் சேர்ந்து ஒரு விழா நடத்தினார்கள். இந்த விழா ஜூலை 22உ மாயூரம் நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளியில் நடைபெற்றது.

விழாவுக்கு ஸ்ரீ டி. புருஷோத்தம நாயுடு எம். எல். சி., தலைமை வகித்தார். கல்வி இலாகா தலைவர் ஸ்ரீ என்.டி. சுந்தரவடிவேலு, ஸ்ரீ கோவிந்தசாமி பிள்ளைக்குப் பொன்னாடை போர்த்தி, பாராட்டுக் கேடயம் வழங்கினார். பற்பல ஆசிரியர் சங்கங்கள் சார்பில் ஸ்ரீ கோவிந்தசாமி பிள்ளைக்குப் பாராட்டுப் பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன. தமக்கு அளித்த பாராட்டுக்கு ஸ்ரீ கோவிந்தசாமிபிள்ளை நன்றி கூறியபின் விழா இனிது முடிந்தது.

பேராசிரியர் கல்கி ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் ஸ்ரீ கோவிந்தசாமி பிள்ளை அவர்களும் பால்ய சிநேகிதர்கள். ஸ்ரீ கல்கி பிறந்த ஊராகிய மணல்மேடு கிராமத்தில் பிறந்து ஆரம்பப் பள்ளியில் அவருடன் ஒன்றாகப் படித்து, பின்னர் ஆசிரியத் தொழிலில் ஈடுபட்டுச் சேவை செய்தவர். ஆசிரியர் வேலையிலிருந்து ஓய்வு பெற்றாலும் ஆரம்ப ஆசிரியர்கள் சமூகம் உயர்வதற்குப் பாடுபடுவதிலிருந்து அவரால் ஓய்வு எடுத்துக் கொள்ள முடியாது!

விழாத் தலைவர் ஸ்ரீ புருஷோத்தம நாயுடுவையும், ஸ்ரீ சுந்தரவடிவேலு ஸ்ரீ கோவிந்தசாமி பிள்ளைக்குப் பொன்னாடை போர்த்துவதையும் படத்தில் காணலாம்.

# தேவை

பஞ்சாபி, உருது, வங்காளி, மராத்தி, தெலுங்கு, தமிழ் ஆகிய ஒவ்வொரு மொழிக்கும் ஒரு உதவி ஆசிரியர் வீதம் ஆறு உதவி ஆசிரியர்கள் தேவை. ரூ. 250–15–400 சம்பளம், அத்துடன் அலவன்சுகளும் உண்டு. சர்க்கார் வேலையல்ல; பென்ஷன் கிடையாது. தற்சமயத்துக்கு ஒரு வருஷம் வரை நீடிக்கும் வேலை. 21 வயது முதல் 40 வயது வரையுள்ளவர்களே விண்ணப்பிக்க வேண்டும். ஆனால் அரசாங்கத்தில் பத்திரிகையாளர் வேலை செய்பவர்களும், ராஜ்ய சர்க்கார்களின் கம்யூனிடி பிராஜக்ட்டு களிலும் என். இ. எஸ்.களிலும் வேலை செய்பவர்களுக்கு இந்த வயது விதி தளர்த்தப் படும். **யோக்கியதாம்சங்கள்:** (1) குறைந்தபட்சம் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறியவர்களாக இருக்க வேண்டும். (2) தாம் எந்த மொழியில் வேலை செய்ய விண்ணப்பித்துக் கொள்கிறாரோ, அதில் புகழ் பெற்ற ஆசிரியராக இருக்க வேண்டும். (விண்ணப்பத்துடன் தமது பிரசுரங்களை அனுப்ப வேண்டும்.) 3. ஆங்கிலத்திலிருந்து தமது பிரதேச மொழியிலும் தமது பிரதேச மொழியிலிருந்து ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கும் திறமைபெற்றிருக்கவேண்டும். அந்தத் திறமைக்கு அத்தாட்சியாகத் தமது மொழிபெயர்ப்பு நூல்களையும் அனுப்ப வேண்டும்.

இதற்கென்று பிரத்தியேகமாக ஏற்பட்ட விண்ணப்பப் பாரங்களைக் கோரிப் பெற்று, அத்துடன் ரூ. 5/-க்கு இந்தியன் போஸ்டல் ஆர்டரை இணைத்து விண்ணப் பத்தை அனுப்ப வேண்டும். (தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் ரூ. 1-4-0-க்கு போஸ்டல் ஆர்டர் அனுப்பினால் போதும்.) விண்ணப்பங்கள் 22-8-56-ந் தேதிக்குள் காரியதரிசி, **இந்தியன் கவுன்ஸில் ஆப் அக்ரிகல்சரல் ரிஸர்ச், க்வீன் விக்டோரியா ரோடு, புது தில்லி** என்ற விலாசத்துக்கு அனுப்ப வேண்டும். ஏற்கனவே சர்க்கார் வேலையில் இருப்பவர்கள் தங்கள் விண்ணப்பங்களைத் தங்கள் மேலதிகாரிகளின் மூலமாக அனுப்ப வேண்டும். நேரில் பேட்டி காண அழைக்கப்படும் வெளியூர் விண்ணப்பதாரர்களுக்குப் போகவர சமீப மார்க்க மூன்றாம் வகுப்பு ரயில் பிரயாணக் கட்டணம் அளிக்கப்படும்.



**FOLDELUXE**

**போல்டிலக்ஸ்**
**நாற்காலிகள்**

★ **நிமிஷத்தில் மடிக்கக் கூடியவை** ★ **நீடித்து உழைக்கக் கூடியவை**
★ **உயர்ந்த ஸ்டீல் குழாய் சட்டங்கள்** ★ **பல வர்ணங்களில் கிடைக்கும்**

ஹோட்டல்கள், கிளப்புகள், ஆஸ்பத்திரிகள், சினிமா, நாடகக் கொட்டகைகள், நூல் நிலையங்கள், வீடுகள் முதலான இடங் களுக்கு உபயோகமாகும்படி பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டவை

தென்னிந்தியாவுக்கு விற்பனை ஏஜண்டுகள் :

**அடிஸன் & கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
மதராஸ் - - பெங்களூர்

# என் கப்பல் பிரயாணம்

சரோஜினி வரதப்பன்



ஆழ்கடலில் பிரயாணம் செய்ய வேண்டுமென்னும் ஆசை யாருக்குத்தான் இல்லை? எனக்கும் வெகு நாட்களாகவே அந்த ஆவல் உண்டு. ஆனால் நான் சிறிதும் எதிர்பாராத விதத்தில், அந்த ஆவல் இப்படிப் பூர்த்தியாகும் என்று கொஞ்சமும் நான் எதிர்பார்க்கவில்லை. 14-2-56 அன்று கப்பல் பிரயாணம் செய்யும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அதுவும் நல்ல அறிவாளியும், சிறந்த பொதுநலச் சேவிகையுமான ஸ்ரீமதி அம்மு சுவாமிநாதன் அவர்களுடன் கப்பலில் சிங்கப்பூர் வரையில் பிரயாணம் செய்வதற்குக் கிடைத்த வாய்ப்பைச் சாதாரணமாகச் சொல்ல முடியுமா?

உங்களுக்கெல்லாம் அதை எடுத்துச் சொல்வதில் மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகிறது.

கப்பலில் அடித் தளத்தில் (டெக்) பிரயாணம் செய்பவர்களின் நலன்களைக் கவனிப்பதற்கென்றே இந்திய சர்க்கார் ஒரு கமிட்டி அமைத்துள்ளார்கள். கப்பலின் அடித்தளத்தில் பிரயாணம் செய்பவர்களின் நிலையை நீங்களெல்லோரும் அறிந்திருந்தால்தான் இக்கட்டுரையின் நோக்கம் புலனாகும். மேற்படி துர்ப்பாக்கியப் பிரயாணிகளை, நம் நாட்டில் ரயில் வண்டிகளில் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்யும் துரதிருஷ்டசாலிகளோடு ஓரளவு ஒப்பிடலாம். ரயில் வண்டியில் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்பவர்களின் அசௌகரியங்களும், சிரமங்களும் இரண்டு மூன்று நாட்களுக்குத்தான். அதற்கு மேல் ரயில் பிரயாணங்கள் நீடிப்பதில்லை. அத்துடன் நடுவில் ஸ்டேஷன்களில் இறங்கிப் பிரயாண அலுப்பை மாற்றிக் கொள்ள முடிகிறது. ஆனால் கப்பல் பிரயாணிகள் நாள் கணக்கில் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கிறது. நடுக்கடலில் அவர்கள் எங்கே இறங்கித் தங்க முடியும்?

அடித்தளத்தில் பிரயாணம் செய்பவர்களின் சௌகரியங்களையும் அசௌகரியங்களையும் நேரில் கண்டு அறிந்து வரும் பொருட்டு நாங்கள் சிலபேர் இந்தக் கப்பலில் பிரயாணம் செய்தோம்.

கப்பல் கம்பெனிகளை இந்திய மயமாக்கின பின்பு, கம்பெனிக்காரர்களும் பிரயாணிகளின் நலன்களைக் கவனிப்பதை முக்கிய நோக்கமாகக் கொண்டு அவர்களுக்குப் பல சௌகரியங்கள் செய்து கொடுக்க முன் வந்துள்ளனர். இந்திய சர்க்காரும் இது விஷயத்தில் மிகவும் அக்கறை கொண்டுள்ளனர்.

** ** **

பாரதத்துக்குச் சொந்தமான கப்பலில் பிரயாணம் செய்கிறோம் என்னும் இணையற்ற ஒரு பெருமித உணர்ச்சியுடன் எனது முதல் கப்பல் பிரயாணத்தைத் துவங்கினேன். 'ஈஸ்டர்ன் ஷிப்பிங் கார்ப்பொரேஷ'னின் மேற்பார்வையில் 'ஸிந்தியா ஸ்டீம் நாவிகேஷன்' கம்பெனியாரால் நிர்வகிக்கப்பட்டு வரும் 'ஸ்டேட் ஆப் மதராஸ்' என்னும் மலேயா செல்லும் கப்பலில் ஏறிச் சென்றேன். இந்தக் கப்பல் மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்டிருந்தது. காபின் பிரயாணிகளுக்கு, ஏ. பீ. ஸி. என்ற மூன்று பிரிவுகளுடன், பல சௌகரியங்கள் செய்யப்பட்டிருந்தன. இந்தக் கப்பலில் 150 காபின் பிரயாணிகளும் 900 'டெக்' பிரயாணிகளும் செல்ல அநுமதி பெற்றிருந்தார்கள். அடித் தளத்தில் பிரயாணம் செய்பவர்கள் சௌகரியமாகப் பிரயாணம் செய்ய விரும்பினால் அதிகம் பணம் கொடுக்க வேண்டும். அப்பொழுது 'பங்க்' வசதி (தனியறை வசதி) கிடைக்கும். தனியாகப் பிரயாணம் செய்யும் பெண்மணிகளுக்குப் பிரத்தியேகமான 'பங்க்' ஏற்பாடு செய்து தரப்படுகிறது. அடித் தளத்தில் பிரயாணம் செய்பவர்களுக்கு ஒவ்வொரு பகுதியிலும் ஆறு குளிக்கும் அறைகள் இருக்கின்றன. ஆங்காங்கு குடிக்கும் தண்ணீர் வசதி சௌகரியமாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். முடிவெட்டும் இடம் மிகவும் நன்றாக இருக்கிறது.

உணவுக்கு அடுத்தபடி அத்தியாவசியமானது உடை; நினைத்தபோது சலவை செய்து சுத்தமான உடைகளை அணியச் சலவைச் சாலை, மற்றும் தேவையான சாமான்களை வாங்க ஒரு கடை ஆகிய எல்லா வசதிகளும் இந்தக் கப்பலில் இருக்கின்றன.

சாப்பாட்டு விடுதியில், சைவ உணவுக்குத் தனியிடம் இருக்கிறது.

கப்பலிலேயே மிகவும் சிறந்த முறையில் தோற்றம் அளிக்கும் இடம் ஆஸ்பத்திரிதான். ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித் தனி ஆஸ்பத்திரி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஒரு டாக்டரும் ஒரு நர்ஸும் இரவு பகல் இருபத்துநாலு மணி நேரமும் நோயாளிகளை அக்கறையோடு கவனிக்கிறார்கள்.

கப்பலில் மிகவும் தாராளமாக அநுபவிக்கக்கூடியது ஏதாவது இருக்கிறது என்றால், அது சமுத்திரத் தண்ணீர் ஒன்றுதான். ஒவ்வொருவருக்கும் குளிப்பதற்கு ஒரு வாளி நல்ல தண்ணீர் கிடைக்கும். அதற்குமேல் உப்புத் தண்ணீரை வேண்டிய மட்டும் உபயோகித்துக் கொள்ளலாம். நல்ல தண்ணீர் வேண்டும் போதுதான் அடித்தளப் பிரயாணிகள் மிகவும் சிரமப்படவேண்டியிருக்கிறது.

கப்பலில் எவ்வளவு நல்ல தண்ணீர் சேமித்து வைக்க முடியுமோ அந்த அளவுக்குச் சென்னையில் இருந்து சேமித்து வைக்கிறார்கள். இந்தத் தண்ணீரை ஒரு வாரத்துக்குமேல் வைத்திருந்து ஆயிரம் பிரயாணிகளுக்குப் பங்கிடு செய்வது எத்தகைய சிரமமான பொறுப்பு என்பதை நாம் சிந்திக்க வேண்டும். நடுக்கடலில் நல்ல தண்ணீர் கிடைக்காதல்லவா?

அடித்தளப் பிரயாணிகளின் உபயோகத்துக்கென்று அமைக்கப்பட்டிருக்கும் குளிக்கும் அறைகளில் உப்புத் தண்ணீருக்குப் பெரிய குழாய்களும், நல்ல தண்ணீருக்குச் சிறிய குழாய்களும் வைத்திருக்கிறார்கள். 'டெக்' பிரயாணிகள் நல்ல தண்ணீர் போதாது என்று அடிக்கடி புகார் செய்கிறார்கள்.

பிரயாணிகள் கொஞ்சமும் பொறுப்பு உணர்ச்சி இல்லாமல் கப்பலில் நல்ல தண்ணீரை வீணாக்குவதைக் கண்ட எனக்கு மிகவும் மனவருத்தம் ஏற்பட்டது. சிலர் நல்ல தண்ணீரில் பாத்திரம் கழுவினார்கள்; மற்றும் சிலர் குழாயை மூடாமல் விட்டிருந்தார்கள்! அயல்நாட்டுக் கப்பல்களில் குளிப்பதற்கு நல்ல தண்ணீரே கொடுப்பதில்லை என்று கூறக் கேட்டிருக்கிறேன்.

அடித்தளப் பிரயாணிகளின் கஷ்டங்களை நான் நேரில் கண்டு அறிந்தபடி சொல்கிறேன்.

அடித்தளப் பிரயாணி ஒவ்வொருவருக்கும் பன்னிரண்டு சதுர அடி அளவு இடம் கொடுக்க வேண்டும் என்று கப்பல் கம்பெனிக்காரர்கள் பொதுவாக ஒரு திட்டம் ஏற்படுத்தியிருக்கின்றனர். இங்கிருந்து மலேயா, சிங்கப்பூர் போகும்போது சிரமம் அவ்வளவாகத் தெரியவில்லை. மலேயாவிலிருந்து இங்கு வரும்போதுதான் மிகவும் நெருக்கடியாயிருக்கிறது. அங்கிருந்து வரும் பிரயாணிகள் இரண்டாயிரம் ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் எடுத்துக்கொண்டு வரலாம் என்று சலுகை அளித்திருப்பதால், எல்லோரும் ஏராளமான சாமான்களைக் கொண்டு வருகிறார்கள். சாமான்களுக்கென ஒதுக்கப்பட்டிருக்கும் இடத்தில் அவைகளை வைக்க ஏனோ நம் பிரயாணிகள் விரும்புவதில்லை. இதன் காரணமாக நம் கப்பல்களில் மிகவும் இடநெருக்கடி ஏற்படுகிறது. 900 பிரயாணிகளும் ஆறு ஏழு பிரிவாக இருந்துகொண்டு 'கம்பார்ட்மெண்ட்' ஒவ்வொன்றிலும் நூற்றுக் கணக்கில் அடைபட்டு ஒரு வாரம் பிரயாணம் செய்வதென்றால் கஷ்டமாக இருக்கத்தானே செய்யும்?

இந்தப் பகுதியில் பிரயாணிகளின் காற்றுவசதிக்காகக் கப்பல் கம்பெனியார் இயன்ற அளவு மின்சார விசிறிகள் வைத்துக் கொடுத்திருக்கிறார்கள். அப்படியிருந்தும் சில பகுதிகளில் மிகவும் உஷ்ணமாக இருப்பதை நாங்கள் நேரில் கண்டோம். முக்கியமாக, 4-ம் நெம்பர் பகுதியில் 159 'பங்கு'கள் இருக்கின்றன. இவைகள் மிகவும் நெருக்கமாக இருப்பதால், பிரயாணிகளுக்கு வெய்யில் காலங்களில் சிரமம் அதிகமாக இருக்கிறது. அதிகப் பணம் கொடுத்தும் கூட, இந்தப் பிரயாணிகள், பாவம்—தூங்குவதற்கும் காற்று வாங்குவதற்கும் வேறு இடங்களுக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. இது விஷயம் கப்பல் கம்பெனியார் கவனிக்க வேண்டியதுதான்.

சாப்பிடும் அறை தனியே இருக்கிறது: ஆனால் அது சிறியதாயிருப்பதால் அவ்வளவு பிரயாணிகளும் அங்கு ஒரே சமயத்தில் சாப்பிடுவது மிகவும் சிரம சாத்தியமான காரியம்.

சில பிரயாணிகளுக்கு அவர்கள் இருக்கும் இடத்திலேயே சாப்பிட அனுமதிக்கிறார்கள். இதனால் பிரயாணிகள் இருப்பிடம் அசுத்தமாகிறது. குப்பைத் தொட்டிகள் ஒவ்வொரு மூலையிலும் வைக்கப்பட்டிருந்தும் அவற்றின் உபயோகத்தை உணர்ந்தவர்கள் மிகச் சிலர் தான் கப்பலில் இருந்தனர். ஒவ்வொரு பிரயாணியும் தன் இருப்பிடத்தைச் சுத்தமாக வைத்துக் கொண்டால் கப்பலில் அசுத்தம் ஏற்படுவதற்கே இடம் இராது.

நாம் கப்பல் பிரயாணத்திலிருந்து அறிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் எத்தனையோ உண்டு. அதில் முக்கியமானது எப்போதும் இதர பிரயாணிகளின் நன்மையைக் கோருவது. கடல் பிரயாணத்தில் பல பிரயாணிகளோடு சேர்ந்து நீண்ட நாட்கள் கப்பலில் செல்லவேண்டியிருப்பதால் அது எவ்வளவு இன்றியமையாதது என்பது யாவரும் அறிந்த விஷயம்.

கப்பல் பிரயாணிகளின் சாப்பாட்டு விஷயம் ஒரு பெரிய பிரச்னை. வீட்டில் தினுசு தினுசாக ருசித்துச் சாப்பிட்டவர்கள், கப்பலில் ஏறியதும் ஒரேமாதிரி உணவை ஒரு வாரத்துக்கு உட்கொள்ளும்போது ஆத்திரமடைகிறார்கள். இது விஷயத்தில் கப்பல் அதிகாரிகள், பிரயாணிகள் [illegible] கொருவர் விட்டுக் [illegible]



பினாங்கில் ஸ்ரீமதி சரோஜினி வரதப்பனும், ஸ்ரீமதி அம்மு சுவாமிநாதனும்.

# நீரிழிவு
## குணமாகும்

சிறு நீரில் சர்க்கரை காண்பது நீரிழிவு (DIABETES) நோயின் முக்கிய அறிகுறி. உங்களுக்குப் பசியும் தாகமும் அதிகமாயிருந்தாலும், உடல் உருகிக் கொண்டு வந்தாலும் அடிக்கடி நீர் இறங்கினாலும் உங்களுக்கு நீரிழிவு நோய் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இக் கொடிய உடல் உருக்கி நோய், தான் பற்றினவர்களைக் கடைசி மூச்சு உள்ள வரையில் விடுவதில்லை; கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை மரண வாயிலுக்கு இழுத்துச் செல்லும். நீரிழிவு வியாதியைக் குணப்படுத்த இஞ்செக்ஷன்கள் போடப்படுகின்றன; ஆனால் அவற்றினால் வியாதி கொஞ்சமும் குணமாவதில்லை. இஞ்செக்ஷன்கள் நீரில் சர்க்கரையை குறைக்கின்றன — அதுவும் மருந்துச் சக்தி உள்ள வரையில்தான். ஆகவே, உபாதைகளைத் தடுக்க வாழ்நாள் முழுவதும் ஊசிகள் போட வேண்டியதுதான். இதனால் அதிகச் செலவு ஏற்படுவதோடு கஷ்டமும் உண்டாகிறது. நோய் குணப்படுத்தாது போனால் நீங்கள் புண்களினாலும், கண் நோய், பல் நோய், வயிற்றுக் கோளாறு முதலிய பலவித வேதனைகளால் சிரமப்பட நேருகிறது.

நீரிழிவு வியாதியை, **வீனஸ் சார்ம்** மாத்திரைகளை உபயோகித்து, சிக்கனமாகவும், சுலபமாகவும், நிச்சயமாகவும், பத்திரமாகவும் சிகிச்சை பெறுங்கள்.

பண்டைக்கால யுனானி வைத்திய முறைகளைக் கொண்டு, அரிய மூலிகைகளின் சேர்க்கையுடன் தயார் செய்யப்படும் **வீனஸ் சார்ம்** மாத்திரைகள், நோயை அடியோடு அகற்றுவதுடன், எத்தனையோ பேர்களை இன்செக்ஷன் அல்லது ஒருவிதமான பட்டினி இல்லாமல் குணமாக்கி யிருக்கிறது. இதை உபயோகித்து பல ஆயிரக் கணக்கானவர்கள், இந்நோயின் மரணப் பிடியிலிருந்து தப்பி யிருக்கிறார்கள். இம் மருந்தை உபயோகிக்கத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம், நீரில் சர்க்கரை குறைகிறது; அத்துடன் அதிக நீர் இறங்குவதும் நிற்கிறது. சில நாட்கள் உபயோகித்தாலே நோய் தணிந்து திருப்தி ஏற்படுகிறது. வீட்டிலிருந்தபடி வீனஸ் சார்ம் சிகிச்சையைத் துவங்குங்கள். விசேஷ பத்தியம் எதுவும் இல்லை. நீங்களே அதன் குணத்தை அறிவீர்கள். இதுபற்றிய விரிவான இலவச ஆங்கிலப் பிரசுரத்தை வரவழைத்துப் பாருங்கள்.

**50 மாத்திரைகள் கொண்ட புட்டி ஒன்றின் விலை 6-12-0**

**(பாக்கிங் தபால் செலவு இனாம்)**

**வீனஸ் ரிஸர்ச் லாபரேட்டரி (K. M)**
**தபால் பெட்டி நெ. 587. கல்கத்தா**


மல் காரியத்தை நடத்திக் கொண்டு சுமுகமாகப் போவதற்கு முயல வேண்டும்.

** ** **

கப்பல் பிரயாணத்தில் உள்ள மிகவும் சங்கடமான விஷயம் சுங்க இலாகா பரிசோதனை, வைத்தியப் பரிசோதனை முதலியவைகள்தான். இவைகளால் அநாவசியமாகக் காலதாமதம் ஏற்படுகிறதென்று கூறக் கேட்டிருக்கிறேன். அது உண்மை என்பதை நேரிலும்கண்டு அறிந்தேன். நாங்கள் பிரயாணம் செய்த 'ஸ்டேட் ஆப் மதராஸ்' கப்பல் பிப்ரவரி 14-ந் தேதி புறப்படுவதா யிருந்தது. பிரயாணிகள் யாவரும் பிற்பகல் இரண்டு மணிக்கெல்லாம் துறைமுகத்துக்கு வரவேண்டும் என்று சொல்லி யிருந்தார்கள். பிரயாணிகள் ஏராளமாக வந்து குழுமிவிட்டார்கள். ஆனால் சுங்க இலாகா அதிகாரிகள் வருவதற்கு மாலை நாலு மணியாயிற்று. அது வரையில் துறைமுகத்தில் பிரயாணிகள் காத்திருக்கத் தகுந்த இடவசதி கிடையாது. அவர்கள் கஷ்டம் எப்படி யிருக்கும் என்பதை நீங்கள் ஊகித்துக் கொள்ளலாம்.

சுங்க இலாகா பரிசோதனை நாலு மணிக்கு மேல் ஆரம்பமாயிற்று. அத்தனை பிரயாணிகளையும் சோதித்து முடிப்பதற்கு வெகு நேரம் ஆயிற்று. கப்பல் குறிப்பிட்ட நேரத்தில் புறப்பட முடியவில்லை. இந்தத் தாமதம் காரணமாக, துறைமுகத்துக்கு எங்களைச் சந்திக்க வந்த உறவினர்களையும் நண்பர்களையும் அவர்கள் வீட்டுக்குப் பிரிவுபசாரம் செய்து அனுப்ப நேர்ந்தது! எனக்கு இந்தக் கப்பல் பிரயாணம் முதல் அநுபவமாகையினால் மனத்தில் ஒரு உற்சாகம் பொங்கிக் கொண்டிருந்தது.

கப்பலில் சைவ உணவு நன்றா யிராது என்று சிலர் சொல்லிவிட்டபடியால் என் தாயார் எனக்காகப் பலவித ஊறுகாய்கள் தயாரித்துக் கொடுத்திருந்தார். தனியாகக் கறிவேப்பிலைப் பொடி செய்து தந்தார். நெய் ஒரு பாத்திரத்தில் கொடுத்தார். அன்றிரவுச் சாப்பாட்டையும் கொண்டு வந்திருந்தபடியால் சாப்பாட்டையும் சீக்கிரம் முடித்துக் கொண்டு விட்டேன். அலுப்பின் காரணமாகத் தூக்கமும் விரைவில் வந்து விட்டது. என் அதிர்ஷ்டம் அன்று சமுத்திரம் அமைதியாக இருந்தபடியால், கப்பலின் ஆட்டமும் அசைவும் தெரியவில்லை.

காலையில் எழுந்து குளித்து, தோசை, காப்பி சாப்பிட்டேன். காப்பிதான் உள்ளே செல்ல மறுத்துவிட்டது. கடல் பிரயாணத்தில் நல்ல பாலுக்கு எங்கே போவது? எல்லாம் புட்டிப் பால்தான். காப்பி விளக்கெண்ணெய் மாதிரி இருந்தது. மோரும் அதே கதிதான். இந்தக் கஷ்டத்தைப் பார்க்கும்போது, கப்பலில் இரண்டு மாடுகளை ஏற்றிச் சென்றால் என்ன என்றுகூடத் தோன்றியது!

மறுநாள் காலை எட்டு மணிக்கு, கப்பல் நாகப்பட்டினத்தை அடைந்தது. நாகப்பட்டினத்தின் துறைமுகம் கப்பல் வந்து தங்க வசதியா யில்லாததால், இரண்டு மைல்களுக்கப்பால் கடலிலேயே கப்பல் நின்றுவிடுகிறது. சிறு படகுகள் மூலம் பிரயாணிகள் கப்பலுக்குக் கொண்டு வரப்படுகிறார்கள். படகுகளைக்

கப்பலுக்கருகே கொண்டு வந்து நிறுத்தி, பிரயாணிகளை ஏற்றுகிறார்கள். சாமான்களைத் தூக்குவதுபோல் பிரயாணிகள் எல்லோரையும் தூக்கிக் கப்பலுக்குள் போடுகிறார்கள். பார்ப்பதற்குப் பயமாயிருக்கிறது. இந்தக் காட்சியை அன்று முழுவதும் பார்த்தோம். மாலை நாலு மணிக்குக் கப்பல் நாகப்பட்டினத்தை விட்டு நகர்ந்தது.

**　　　**　　　**

இந்தப் பிரயாணத்தில், நிறையப் புத்தகங்கள் படிக்கச் சந்தர்ப்பம் கிடைத்தது.

ஸ்ரீமதி அம்மு சுவாமிநாதன் உலகம் முழுவதும்சுற்றிப் பார்த்து நல்ல அநுபவம் பெற்றவர். அவருடன் பிரயாணம் செய்வதே ஒரு சிறந்த அநுபவம் ஆகும் அல்லவா !

என் கப்பல் பிரயாணத்தில் ஒரு விஷயம் என் உள்ளத்தில் உறுத்தியது. தினம் காலையில் கிறிஸ்தவர்களுக்கான பிரார்த்தனையும் உபந்நியாசங்களும், மாலையில் முஸ்லிம்களுக்கான பிரார்த்தனையும் பிரயாணிகளுக்குள்ளேயே ஒருவர் முன் வந்து செய்கிறார்.

ஆனால் நம் ஹிந்துக்களுக்கென ஒருவிதமான சத்விஷயமும் காணோம். இது எனக்குக் கொஞ்சம் கஷ்டமாய்த்தான் இருந்தது.

கப்பல் பினாங்கை அடைந்ததும் துறைமுகத்தில் இடமில்லாததால் கடலிலேயே நிறுத்தப்பட்டது. பிரயாணிகளுக் கெல்லாம் ரொம்பக் கஷ்டமாய்ப் போய் விட்டது. ஸ்ரீமதி அம்மு சுவாமிநாதனையும் என்னையும் சந்திக்க, பினாங் இந்திய சபைக் காரியதரிசியான ஸ்ரீ ராமநாத் அவர்களும் ஸ்ரீமதி விசாலாட்சி அம்மாளும் கப்பலுக்கே வந்தனர். பிறகு ஒரு மோட்டார்ப் படகில் பினாங் சென்றோம். அங்கு இந்திய வர்த்தக சபையின் காரியாலயத்தில் பல சங்கங்களின் பிரதிநிதிகளைச் சந்தித்து, கப்பலின் அடித்தளப் பிரயாணிகளின் கஷ்டங்களைப் பற்றிக் கேட்டு அறிந்தோம். பிறகு பினாங் பத்திரிகைக்காரர்களுக்குப் பேட்டி அளித்தோம்.

இருபத்திரண்டாந் தேதி பகல் பன்னிரண்டு மணிக்குச் சிங்கப்பூரை அடைந்தோம். உடனே இறங்க வேண்டும் என்னும் ஆவல் உந்தினாலும், எல்லாச் சம்பிரதாயங்களும் முடிந்து கப்பலை விட்டு இறங்க மணிக்கணக்கில் தாமதமாகி விட்டது.

சிங்கப்பூரில் எத்தனையோ பிரமுகர்களைச் சந்திக்க எங்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

கப்பலில் முக்கியமான ஒரு புதிய ஏற்பாடு பிரயாணிகள் நல அதிகாரியை நியமித்திருப்பது. அவ்வப்போது ஒலிபெருக்கியின் மூலம் கப்பல் போகும் திசை, கப்பலில் நடக்கும் நிகழ்ச்சிகள், யாவற்றையும் தெரிவிப்பது அவர் கடமை. பிரயாணிகளுக்குக் குறை ஏதேனும் இருந்தால் இவரிடம் தெரிவிக்கலாம்.

நாங்கள் தாய்நாட்டுக்குத் திரும்பி வந்தபோது கப்பல் சற்று வேகமாக வந்தபடியினால் குறிப்பிட்ட தினத்துக்கு ஒருநாள் முன்னதாக வந்து சேர முடிந்தது. என்ன இருந்தாலும் தாய்நாடு திரும்பியதும் மனத்தில் ஒரு தனி உற்சாகம் பொங்குகிறது. நீண்டகாலம் வெளிநாடுகளில் இருந்துவிட்டுத் தாய்நாட்டுக்குத் திரும்புகிறவர்களின் உற்சாகம் இன்னும் எத்தகையதாயிருக்கும் !




கூந்தல் மற்றும் மூளை
அபிவிருத்திக்கான தைலம்

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது. வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும் நிறுத்துகிறது. ஞாபகசக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது. எல்லோருக்கும் எக்காலத்திலும் ஏற்றது.

பெரிய பாட்டில் ரூ. 3-8-0
சிறிய பாட்டில் ரூ. 2-0-0

எங்கும் கிடைக்கும்






ராம்தீர்த் யோகாஷ்ரமம்
பம்பாய்-14. (C. Rly)

ஆரோக்கியமாகவும், திடமாகவும் இருக்க யோகாசனங்களை விவரிக்கும் எங்கள் அழகான ஆசனப் படத்திற்கு எழுதுங்கள். தபால் செலவு உள்பட ரூ. 1-14-0, மணியார்டரில் தொகை அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். வீட்டிலேயே ஆசனங்களை சுலபமாகப் பழகலாம்.

சென்னை டெப்போ :
4/441, தங்கசாலைத் தெரு, சென்னை


ஆகஸ்டு 3 முதல்
சென்னை
வெலிங்டன்
பிரபாத்
சரஸ்வதி
மற்றும் தென்னாடெங்கும்


V.கோவிந்தராஜன் அளிக்கும்
ஜுபிலி பிலிம்ஸ்
மர்ம வீரன்
டைரக்ஷன்: T.R.ரகுநாத்
BALAN
இசை: வேதாசலம்
வசனம்: A.L.நாராயணன்
ஸ்டுடியோ: வாஹினி

# போலி கௌரவம் வேண்டாம்!

வசுமதி ராமசாமி

அன்புமிக்க சகோதரி சுஜாதாவுக்கு,

கடைக்குப் போவதும், வீட்டுக்கு வேண்டிய சாமான்கள் வாங்குவதும் பெரிய தொல்லையாய்ப் போய் விட்டதென எழுதியிருக்கிறாய். அது ஒரு கலை யென்பதைப் பலர் அறியவில்லை. பெரிய குடும்பங்களில் கடைக்குப் போய்ச் சாமான்கள் வாங்கிப் போடுவதற்கென ஒரு ஆள் நியமித்திருப்பார்கள். சாமான் அறையை மேற்பார்வை பார்க்க ஒருவரைத் திட்டம் செய்து வைத்திருப்பார்கள். சாதாரண மத்தியதரக் குடும்பங்களில் அப்படியெல்லாம் ஆள் போட்டால் பார்த்துக் கொள்ளச் சாமான்களே இருக்காது.

மேல்நாட்டார் கடைக்குப் போய்ச் சாமான்கள் வாங்குவதைக் கௌரவக் குறைவாக நினைக்க மாட்டார்கள். நம்மிடம் அந்தப் பழக்கம் இன்னும் வரவில்லை. ஒரு நீதிபதி தம்முடைய வெளிநாட்டு அநுபவத்தை வெகு அழகாகச் சொன்னார். அங்கே வீட்டுக்கார அம்மாள் வீட்டைச் சுத்தம் செய்து, கடைக்குப் போய்ச் சாமான்கள் வாங்கி வந்து, சமையலையும் துரிதமாகச் செய்து முடித்து விட்டுப் பின் மேஜை மேல் உணவைப் பரிமாறவும் வந்து விட்டாளாம்.

சில விஷயங்கள் ஆண்கள் செய்ய முடியாதவை. பெண்களால் மட்டும் ஆகக் கூடியவை சில இருக்கத்தானிருக்கின்றன. சமையல் வேலை, வீட்டு நிர்வாகம், நோயாளிக்குப் பணிவிடை செய்வது, குழந்தைகளை வளர்ப்பது, கடைக்குப் போய் வீட்டுக்குத் தேவையான சாமான்கள் வாங்குவது முதலிய வேலைகள். இவைகளுக்கு அடிப்படையான சகிப்புத் தன்மை ஆண்களுக்குக் குறைவுதானே. 'கடைக்குப் போவது ஆண்களால் முடியாது' என்றால் ஆயிரம் கேள்விகள் எழலாம். ஆனால் அந்தக் காரியம் பெண்களால்தான்முடியும்.

பெண்கள் துணிக் கடைக்குப் போவதில் ஏற்படும் கசப்பான ஒரு பழைய அநுபவத்தைக் கூறுகிறேன், கேள்.

ஒரு சமயம் திருச்சியிலிருந்து என் தோழி வந்திருந்தாள். அவளுடன் துணிக் கடைக்கு என் உறவினர் ஒருவரைத் துணைக்கு அனுப்பியிருந்தேன். என் தோழி விதம் விதமாகக் குழந்தைகளுக்கு நிறையத் துணிகள் வாங்கினாள். "உன் பெண் சுதாவுக்கு இந்த நிறப் பாவாடை நன்றாயிருக்குமே?" என்று என் உறவினரைக் கேட்டாளாம். எங்கே தம்மைக் கருமியென நினைத்து விடப் போகிறாளோ என்ற போலி கௌரவத்தில் அவர் கையில் இருந்த ரூபாய்க்குப் பாவாடைத் துணி வாங்கி விட்டார். என் உறவினர் அந்தத் தொகையை ஒரு முக்கியமான செலவுக்கு ஒதுக்கி வைத்திருந்தாராம். பிறகு நீண்ட நாட்கள் வரை அந்தப் பணத்தின் அவசியத்தை உணர்ந்து சிரமப்பட்டுக் கொண்டே இருந்தார்.

நாம் துணிக் கடைக்குப் போவதில் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும் என்ற பாடத்தைக் கற்றுக் கொள்ள எனக்கு அந்தச் சம்பவம் பெரிதும் உதவியாக இருந்தது. கடைகளில் புடவைகளை விதம் விதமாக எடுத்துப் போடுவார்கள். சாதுர்யமாகப் பேசுவார்கள். நாம் விலையைப் பார்த்துச் சற்று யோசித்தால் கூட, "பரவாயில்லை. எடுத்துக் கொண்டு போங்கள். உங்களைப் போன்றவர்களிடம் சேலையைக் கொடுத்து எங்கள் கடைப் பெருமையை அறியப் படுத்த வேண்டும்" என்பார் வியாபாரி. "உங்களைப் போல்" என்ற பதம் நம் தலையில் ஐஸ் வைத்துக் கட்டிய மாதிரி ஆகிவிடும். "சேலை நன்றாக இருக்குமென்ற உத்தரவாதமான வியாபாரம் எங்களுடையது. உங்களுக்கு விலையைப் பார்த்துப் போடுகிறேன்" என்று தொடர்ந்து கூறுவார். இது என்னவோ நமக்குத் தனிச் சலுகை என நினைத்து நாம் அதிக விலைக்குப் புடவையை வாங்கிக் கொண்டு விடுவோம்.



இவ்வாறு அவர்கள் சாதுர்யமாகப் பேசி அதிக விலையுள்ள துணிமணிகளை வாங்கச் செய்து விடுவார்கள். விலை குறைவான சேலையை எடுத்தால், "அது உங்களுக்கு வேண்டாம், நெசவு சரியில்லை" என்று சொல்லி விடுவார்கள். மின்சார விசிறி, குளிர்ந்த பானம், காப்பி இப்படியெல்லாம் உபசாரம் இருந்தால் நம்முடைய பில் விஷம் போல் ஏறி விடுமென்று அறிந்து கொள்ள வேண்டும்.

நம் பணப் பையைப் பற்றியும் குடும்பத்தின் வருவாயைப் பற்றியும் ஒரு நினைவு இருந்தால் நாம் சமாளித்து விடலாம்.

இப்படிக்கு,
பூமா தேவி





# குற்றமுள்ள நெஞ்சு

எஸ். விஜயராகவன்

**கா**ரியாலயத்திலிருந்து அப்போதுதான் வீடு திரும்பிய ரங்கராஜன், உடைகளைக் கூடக் களையாமல் நேராகக் கூடத்து அறைக்குள் நுழைந்தான். அங்கே கட்டிலில் படுத்திருந்த அவன் மனைவி கோமளா காலரவம் கேட்டதும் மூடியிருந்த தன்னுடைய இமைகளை மலர்த்திப் புன்முறுவலுடன் கணவனை விழித்து நோக்கினாள்.

கட்டிலின் விளிம்பிலேயே அமர்ந்தபடி, ''கோமளா, உடம்பு எப்படியிருக்கிறது?.. நான் ஆபீசுக்குப் போன பிறகு நன்ருகத் தூங்கினயா?'' என்று அன்பும் ஆதுரமும் பொங்கக் கேட்டான் ரங்கராஜன்.

''எனக்கு ஒன்றுமில்லை; இடமாகவே இருக்கிறது. இது வரை நன்ருகவும் தூங்கினேன். ம்..ம்..ம்.. என்னைச் சிரமப்படுத்தக் கூடாதென்றுதான் தெய்வம் கைக் குழந்தையையும் வைக்காமல் என்னைத் தனி மரமாக நிறுத்தி விட்டதே!'' — இவ்வாறு தழுதழுத்த குரலில் கூறினாள். கோமளாவின் கரு நீலக் கண்களில் நீர் துளித்துப் பளபளத்தது. ரங்கராஜனால் தாள முடியவில்லை.

''சே!...அசடு! போனதை நினைத்து வருந்தி என்ன பயன்? எல்லாம் தெய்வச் செயல்! இந்த மட்டும் தலைக்கு வந்தது தலைப்பாகையோடுபோயிற்றே! நீயாவது பிழைத்து எழுந்ததில் எனக்கு எவ்வளவோ திருப்தி, கோமளா!'' என்று, தன் கைக் குட்டையை எடுத்துக் காதல் மனைவியின் கண்ணாடி நெற்றியிலே முத்திட்டிருந்த வியர்வையை ஒத்தித் துடைத்தான்.

பிறகு அன்புடன் கோமளாவின் முன்தலைமயிரைத் தடவியபடி, ''பேசாமல் படுத்துத் தூங்கு. உடைகளை மாற்றிக் கொண்டு, நான் போய்க் கமலுவையும் பார்த்து விட்டு, நொடியில் வருகிறேன்!'' என்று கூறிவிட்டு ரங்கராஜன் மெல்ல எழுந்தான்.

''கமலுவின் குழந்தை அரை நாழிகையாக அழுது கொண்டிருந்தது. சமையற்கார அம்மாள் போய்க் கமலுவுக்கு உதவியாகப் பார்த்துக் கொண்டாள். பசியால்தான் அழுததாம்!'' என்ருள் கோமளா.

''என்னவோ கோமளா, அவளாவது தெம்பாக இருக்கிருளே! அதோடு கமலுவின் குழந்தை பிறந்ததுமே ஏழு பவுண்டு இருந்தது. தங்க விக்கிரகம் மாதிரி இருக்கிறது!'' என்று மகிழ்ச்சியுடன் கூறிவிட்டு ரங்கராஜன் வெளியே போனன்.

கணவனின் தலைமறையும் வரை கோமளாவின் பார்வை அவனைத் துரத்தியது. பிறகு, ''பாவம்! குழந்தை என்ருல் அவருக்கு எவ்வளவு ஆசை! அவரை ஏமாற்றும்படி என்

விதி என்னைச் சதி செய்து விட்டதே! ஆனால் கமலு?..அவள் கொடுத்து வைத்தவள்!'' என்று தனக்குள்ளாகவே முணுமுணுத்துக் கொண்டாள் கோமளா.

அப்போதே அவள் நினைவும் எங்கெங்கோ நழுவிச் சென்றது....

* * *

கோமளாவுக்கும், அவள் நாத்தனார்—ரங்கராஜனின் தங்கை—கமலுவுக்கும் கிட்டத்தட்ட ஒரே வயசுதான்: நிறம், உயரம், தோற்றம் இவற்றிலும் கூட இருவருக்கும் அதிக வித்தியாசமில்லை. இவர்கள் இருவரையும் கூடப் பிறந்த சகோதரிகள் என நினைத்துக்கூட எவ்வளவோபேர்கள் ஏமாந்ததுண்டு.

இப்படி ஒரே அச்சில் வார்த்த இரு உருவங்கள் போல் திகழ்ந்த இவர்களது வாழ்விலும் பல ஒற்றுமைகள் இருந்தன. கோமளா ரங்கராஜனை மணந்து கொண்டு இவ் வீட்டில் அடியெடுத்து வைத்த ஒரு மாசத்துக்குள்ளாகவே கமலுவுக்கும் திருமணம் நிகழ்ந்தது. அதையும்விட விசித்திரம், இருவரும் ஒரே சமயத்தில் கருவுற்றார்கள். இரண்டு மாதங்களுக்கு முன்புதான் இருவருக்கும் இந்த வீட்டில் ஒரே முகூர்த்தத்தில் சீமந்தக் கல்யாணம் நடந்தது.

இந்தக் கல்யாணத்தின் போதும் ஒரு ஒற்றுமை நிகழ்ச்சி நடந்தது.

அன்று மாலை ரங்கராஜன் மனைவியிடம் வந்து, ''கோமளா! ஊரிலிருந்து நெல் விற்ற பணம் இரண்டாயிரம் வந்திருக்கிறது. அதை என்ன செய்யப் போகிறேன், தெரியுமா? நீ எனக்குப் பெற்றுப் பரிசளிக்கப் போகும் 'இளவரசு'க்குப் பதில் பரிசாக முன்னமேயே இப்போது உனக்கு ஒரு வைரத் தோடு வாங்கப் போகிறேன். நீயும் ஆசைப்பட்டாயல்லவா?'' என்றான்.

இதைக் கேட்கையில் கோமளாவின் உள்ளம் குளிர்ந்தது. ''என் ராஜாவின் விருப்பம் உங்கள் கோமளத்தின் பாக்கியம்! ஆனால் வைரத்தை மட்டும் இப்போது வாங்குங்கள். ஏன்னால் இப்போது கடை கண்ணிகளுக்கெல்லாம் வயிறும் பிள்ளையுமாகப் போக முடியாது. பேறு ஆனதும் நானே வந்து மாதிரித் தோடுகளைப் பார்த்து நல்ல மாதிரியில் தோடு கட்டிக் கொள்கிறேன்!'' என்றாள் அவள்.

மறு நாளே தோட்டுக்காகப் பதினாறு வைரக் கற்களை இரண்டாயிரம் ரூபாய்க்கு வாங்கி வந்தான் ரங்கராஜன். இரண்டு காரட்டுக் கற்கள் என்றால் கேட்கவா வேண்டும்! இருளில் ஒளி விடும் புலியின் கண்களைப் போல நீல ஒளியைச் சிந்திய அக் கற்கள் பார்ப்போர் கண்களைப் பறித்தன.

இவ் விஷயத்தை அறிந்த கமலு எப்படிப் பொறுப்பாள்? அவளும் தன் கணவன் சாரநாதனிடம் சென்று மெதுவாக அவன் மனசைச் சூடேற்ற ஆரம்பித்தாள். முதலில் அவன் மறுத்தாலும், இறுதியில் அவளது பெண் சாகஸம்தான் வெற்றி பெற்றது. தன் ஊருக்குச் சென்று அடுத்த வாரமே பணத்துடன் திரும்பிய சாரநாதனும் ஒரு ஜதை தோட்டுக்கான வைரக் கற்களை வாங்கி விட்டான். ஆனால் சாரநாதன் பேரம் பேசுவதில் சாமர்த்தியசாலி; வேறொரு புதிய கடையில் மலிவாக ஆயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கே வாங்கி விட்டான்! கமலுவின் தோடும் பிரசவத்துக்குப் பிறகே கட்டுவதென்று ஏற்பாடாயிற்று!

பிறகு பக்ஷம் சென்ற கமலு பேறுநாள் நெருங்கியதும் மறுபடியும் தமையன் ரங்க



ராஜனின் வீட்டுக்கு வந்தாள். கோமளாவோ தன் பிறந்தகம் போக இருந்தாள். அப்போது தான் ரங்கராஜன், "கோமளா! எல்லா விஷயத்திலும் போல் உங்கள் பிரசவமும் இங்கேயே ஒன்றாக ஆகட்டுமே. நீ ஏன் பிறந்தகம் போக வேணும்? ஒரு மருத்துவச்சியை அமர்த்தினால் இருவரையும் பார்த்துக் கொள்கிறாள்!" என்று கூறினான்.

கமலுவும், சாரநாதனும் இதை ஆமோதித்தார்கள்; அவர்கள் விருப்பப்படியே கோமளா புக்ககத்திலேயே தங்கி விட்டாள்!

தொடர்ந்து பத்து நாட்களுக்கு முன்பு ரங்கராஜன் எதிர்பார்த்தபடியே கோமளா அழகிய ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அது பிறந்த பன்னிரண்டு மணி நேரத்துக்குள்ளாகவே கமலுவுக்கும் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. என்ன ஒற்றுமை! பெற்றோர்கள் பூரித்துப் போனார்கள்.

ஆனால் மறுநாள் நடந்ததென்ன? திடீரென்று கோமளாவின் குழந்தை தன் மூச்சை நிறுத்திக் கொண்டு விட்டது! அறைக் குழந்தைக்குக் காரணமா வேண்டும்? இவ் வருத்தம் கோமளாவின் மெலிந்த உடலை வேதனையாக அரிக்க ஆரம்பித்து விட்டது. எல்லா விஷயங்களிலும் ஜோடியாக இருந்த கோமளா, கமலு இவர்களுக்குள் இதில் மட்டும் ஏன் வித்தியாசம்? அவள் குழந்தை தங்குகையில் கோமளா மட்டும் என்ன பாவம் செய்தாள்! அவளுக்கு மட்டும் ஏன் இந்தச் சோதனை? ஏன்..?..ஏன்?....

படுத்தபடியே கோமளா இவ்விதம் மனம் புழுங்கிக் கொண்டிருக்கையில் வெளியே அறைக் கதவு 'கிரீச்'சிட்டது. அடுத்த வீட்டுச் சானுப் பாட்டி உள்ளே நுழைந்தாள்.

"கோமளா! நீ அரும்பாடு பட்டதற்கு இப்படிப் பலனில்லாமல் போய்விட்டதே! உனக்கு இப்படி வரவேண்டுமா?" என்று துக்கம் விசாரித்தாள் பாட்டி. அதைக் கேட்டுக் கோமளா 'பொல பொல' வென்று கண்ணீர் உகுத்து அழுதே விட்டாள்.

"என்ன செய்வது பாட்டி? என் பாவம் அப்படி!" என்றாள் கோமளா.

"நல்ல பாவம், போ! கமலுவுக்குப் பிறந்தது உயிரோடு இருக்க வில்லையா! என்னமோ அம்மா, நான் அன்றைக்கே நினைத்தேன்..?"

"என்றைக்கு என்ன நினைத்தீர்கள், பாட்டி?" என்று கேட்டாள் கோமளா.

"தோஷம் பார்க்காமல் நீ சீமந்தத்தின் போது வைரம் வாங்க வில்லையா? அதைத் தான் சொல்லுகிறேன்!"

இதைக் கேட்டுக் கொண்டே உள்ளே வந்து விட்ட கோமளாவின் சமையற்கார அம்மாள் சானுப் பாட்டியை எரித்து விடுபவள்போல் பார்த்தாள். பிறகு, "பாட்டி! மனசு ஒடிந்து படுத்திருக்கும் பச்சை உடம்புக்காரி கோமளா. அவள் மனசை மேலும் நீங்கள் கலக்கிப் புண்படுத்த வேண்டாம்! போய் விட்டு அவள் தலைக்குத் தண்ணீர் விட்டதும் வாருங்கள்!" என்றாள்.

பாட்டிக்குக் கோபம் வந்து விட்டது. விறு விறு என்று வெளியேறி விட்டாள்.

உடனே, "என்ன! நீங்கள் இப்படிப் பேசிக் கிழவியை விரட்டி விட்டீர்களே!" என்றாள் கோமளா.

"கோமளா! உனக்கு விஷயம் தெரியாது. இது ஒரு வம்புப் பிசாசு! உன்னிடம் 'தோஷம்' என்று அளந்தாளா? கமலுவிடம் என்ன சொன்னாள் தெரியுமா?"

"சொல்லுங்கள்!"

"கோமளா பிறந்ததைப் பறி கொடுத்து விட்டு ஏங்கிக்கிடக்கிறாள். கொஞ்ச நாட்களுக்காவது உன் குழந்தையை அவள் கண்களிலே காட்டாதே; கையிலே கொடுக்காதே. திருஷ்டி விழும் என்று சொன்னாள்!"

"ஐயையோ!" என்று அழுதாள் கோமளா.

"அது கிடக்கு, வாழும் பாம்பு! நீ இதையெல்லாம் மறந்து விட்டுத் தூங்கு. உடம்பை அலட்டிக் கொள்ளாதே.." என்று கூறிவிட்டு வெளியே போனாள் சமையற்கார அம்மாள்.

ஆனால் கோமளாவின் மனசு சமாதானமடைந்ததா? வேதனையுற்ற அவள் உள்ளம், 'பாட்டி சொல்வது ஏன் நிஜமாக இருக்கக் கூடாது' என்று புலம்பித் தவித்தது. இல்லாவிடில் அவர்களுக்குள் கோமளா மட்டும் ஏன் மகனைப் பறி கொடுக்க வேண்டும்?

அன்று கமலுவின் குழந்தைக்குப் புண்யாகவசனம். ஊரிலிருந்து சாரநாதன் வந்திருந்தான். வீட்டில் ரங்கராஜனுக்குக் குழந்தை இறந்த துக்கமிருந்ததால், ஆர்ப்பாட்டமில்லாமல் விசேஷத்தை நடத்தி விடுவதென முடிவு செய்திருந்தார்கள்.


T.A. அப்துல் ரஹீம், தஞ்சாவூர்

சேவல் மார்க்கு ரிஜிஸ்டர்ட்



சிறந்த ஊதுபத்திகள், வாசனைகள்

கஸ்தூரி பத்தி (சேர், தபால் செலவுடன் ரூ. 9-0-0). சந்தண முகப் பவுடர் செலவுடன் ரூ. 4-8-0
அம்பர் புனுகு பத்தி, சம்பகா பத்தி, ப்ளவர் டஸ்டு (பெட்டியில் வைத்து ஆடைகளைக் காக்க)
சோல் ஏஜண்டுகள்: யுனைடெட் கன்ஸர்ன், 54, பந்தர் தெரு, சென்னை-1 (மதுரை, கோவை) பம்பாய்-19

இருவருக்குமே குழந்தைகள் பிறந்து பதினொரு நாட்களாகி விட்டபடியால், கமலுவும் கோமளாவும் ஸ்நானம் செய்துவிட்டு வந்தார்கள். மனையில், சாரநாதன் அருகில் கையில் குழந்தையுடன் கமலு உட்கார்ந்தாள்.

புண்யாகவசனம் முடிந்ததும் கமலு தன் அறைக்குப் புறப்பட்டாள். இடையில் வழியில் அமர்ந்திருந்த கோமளா "குழந்தையை இப்படிக் கொடு!" என்று கைகளை நீட்டினாள்.

"இரு மன்னி! குழந்தைக்கு நாக்கு வறண்டு கிடக்கிறது. கொஞ்சம் சர்க்கரைத் தண்ணீர் புகட்டி விட்டு வருகிறேன்!" என்று உள்ளே போனாள் கமலு.

கோமளாவின் ஏங்கிய உள்ளம் குமுறியது. "என்ன கர்வம் கமலுவுக்கு? தன் குழந்தை தங்கிவிட்டதென்ற ஆணவம் தானே அப்படிப் போகிறாள்?" என்ற பொறாமையும், குரோதமும் தீயாக எரிந்தன அவள் மனதிலே.

அன்றிரவு வெகு நேரமாகியும் கோமளாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. கமலுவின் மீது கனிந்த ஆத்திரம் அவளை அலட்டியது. "தோஷமுள்ள வைரம் என் குழந்தையைக் கொண்டு போய் விட்டது. அதனால்தானே கமலு துள்ளுகிறாள்? அவளுக்கும்—" என்று நினைத்த கோமளாவின் மனதில் ஒரு குரூர எண்ணம் தலை தூக்கியது.

உடனே படுக்கையை விட்டு எழுந்தாள். நடுநிசியாகி விட்டிருந்ததால் எல்லோரும் உறங்கிக் கொண்டிருந்தனர். தட்டுத்தடுமாறி மெதுவாக 'காமிரா' அறைக்குள் நுழைந்தாள். அங்கேதான் கமலு, கோமளா இவர்களது பெட்டிகள் இருந்தன. அவற்றின் சாவிகளும் அங்கேயே சுவரில் தொங்கின.

இரண்டே நிமிஷங்களில் தன் 'தோஷமுள்ள' வைரங்களைக் கமலுவின் பெட்டிக்கு மாற்றினாள்; அவளுடைய நல்ல வைரங்களைத் தன் பெட்டியில் வைத்துக் கொண்டாள். பிறகு, "தோஷ வைரங்களை எடுத்துக் கொண்டு கமலு ஊருக்குப் போகட்டும்; அப்போது நடக்கப் போவதில் அவள் ஆணவம் குறைகிறதா இல்லையா பார்க்கிறேன்!" என்று மனத்துக்குள் திருப்திப்பட்டவாறு கோமளா தன் இடத்துக்குத் திரும்பினாள்.

பலஹீனமான நிலையில் இப்படி எழுந்து போனது அவளுக்குத் தாங்கவில்லை. தள்ளாடியவாறே படுக்கையில் சாய்கையில் அருகிலிருந்த தண்ணீர்க் கூஜா சாய்ந்து கீழே விழுந்து ஓசை செய்தது.

உடனே விழித்துக் கொண்ட ரங்கராஜன் "என்ன கோமளா?" என்று வினவினான்.

"ஒன்றுமில்லை; கூஜாதான் விழுந்தது!"

"அது சரி: இன்னமும் நீ தூங்கவில்லையா?"

"தூங்குகிறேன். ஆனால், நீங்கள் வைரம் வாங்கினீர்களே, அதில் தோஷமிருக்கிறதோ என்னவோ? கமலு வீட்டுக்காரர் மட்டும் நல்லதாக வாங்கி விட்டார் போலும்!"

"சரியாய்ப் போயிற்று! கோமளா! வைர தோஷம்தான் குழந்தையைத் தங்க விடவில்லையென்று நினைக்கிறாயாக்கும்! அசடு.. ..தோஷம் பொருள்களில் இல்லை; இப்போது உன் மனசில் தான்! பேசாமல் தூங்கு.."

'என் மனசில் தோஷமா? என்ன தோஷம்?' என்று தன்னையே கேட்டுக் கொண்டாள் கோமளா.

'என்ன தோஷமா? உனக்கு வந்தது போதாதென்று கமலுவுக்கும் துக்கம் வர வேண்டுமென்று தானே, தோஷமிருப்பதாக நீ நினைக்கும் வைரத்தை மாற்றி வந்தாய்? அவள் குழந்தைக்கு ஆபத்து வந்து, அவளது பெற்ற வயிறு சாபமிட்டால், அச்சாபம் உன்னைப் பாதிக்காதா? இனியும் பெற்று நீ வாழ வேண்டாமா? துரோகி!' என்று அவள் அடிமனம் எச்சரித்தது.

கோமளா வெலவெலத்துப் போனாள். எல்லாமே மனப் பிராந்திதான். உடல் பலஹீனமடைந்தால் உள்ளமும் பலஹீனமடைந்து பிதற்றுகிறது. அத்துடன் சானுப் பாட்டியைப் போன்றவர்கள் கிளறிவிடும் நம்பிக்கைக் கலக்கமும் சேர்ந்து கொண்டால், பெண்கள் இப்படித்தானே தானும் தவித்துப் பிறரையும் வேதனைக்குள்ளாக்குகிறார்கள்?

மறுநிமிஷம், "என்ன காரியம் செய்து விட்டேன்? ஐயோ கமலு! உனக்கு ஒன்றும் நேரக் கூடாது!" என்று தனக்குள் புலம்பியது, தெளிவடைந்த அவள் நினைவு. அவ்வளவுதான்; மறுபடியும் ஒருபுதுத் தெம்புடன் எழுந்து போய், பெட்டிகளைத் திறந்து மறுபடியும் வைரங்களை எடுத்து உரிய இடத்திலே வைத்துவிட்டு வந்தாள் ஒரு அசுர வேகத்தில்.

பிறகு படுக்கையில் படுத்ததும்தான் அவளுக்கு நிம்மதி பிறந்தது; தூக்கமும் வந்தது.

இரவு வெகு நேரம் வரை கண் விழித்ததால், விடிந்து ஏழரை மணியாகியும் கோமளா எழுந்திருக்கவில்லை. "கோமளா!" என்று கூவிக்கொண்டு தினப் பத்திரிகையுடன் ரங்கராஜன் வந்ததும்தான் கண் விழித்தாள்.

"கோமளா! சாரநாதன் தோஷமில்லாத வைரமாக வாங்கி விட்டான், என்றாயே. இதோ பார்; சென்ற ஆறு மாசங்களாக அவன் வைரம் வாங்கிய கடைக்காரர் பொப்பிலி செட்டியார் விற்றதெல்லாம் இருநூற்றைம்பது கூடப் பெறாத சாதாரண புஷ்பராகமாம்! மலிவு என்று வாங்கி ஏமாந்தவர்கள் விழித்துக் கொண்டதன் பலனாக, விஷயம் புரிந்து, அவரைக் கைது செய்திருக்கிறார்கள்! அவருக்குச் சிறைவாசம் கிடைக்கும்; ஆனால் சாரநாதனைப் போல் ஏமாந்தவர்களுக்குப் பணம் கிடைக்காதாம்! ஏனெனில் செட்டியார் மஞ்சள் கடுதாசிப் பேர்வழியாம்!"

"நிஜமாகவா..?"

"பின்னே? சாரநாதனுக்குப் பாவம், முழுப் பணமும் நஷ்டம்; நமது வைரங்களில் தோஷமிருந்தால்கூட முக்காலாவது தேறும். ஆனால் நான் வாங்கின கடைக்காரர், தோஷமிருப்பதாகச் சந்தேகப்பட்டாலும் முழுப் பணமும் வாபஸ் செய்வதாகச் சொல்லியிருக்கிறார்!" என்று கூறிச் சென்றான் ரங்கராஜன்.

சுவாமி படத்தை வணங்கிய படியே, "பகவானே! நேற்று நான் வைரங்களை மாற்றியிருந்தால் எனக்கு எத்தனை நஷ்டம் வந்திருக்கும்? நல்ல வேளை, தப்பினேன்! குற்றமுள்ள நெஞ்சுடன் கெடுதல் செய்ய முனைந்த எனக்குத் தண்டனையும் பக்கத்திலேயே இருந்திருக்கிறது. நல்ல வேளையாக செய்த தவறை அழித்தேன்; கிடைக்க இருந்த தண்டனையையும் நீ அகற்றிவிட்டாய். உன் கருணையை என்னென்பேன்!" என்று ஆனந்தக் கண்ணீர் வடித்தாள் கோமளா.

# NEW ARRIVALS FROM THE SOVIET UNION

## ON POLITICS & PHILOSOPHY

| | | | Rs. | As. |
|---|---|---|---|---|
| Poverty of Philosophy | ... | *by K. Marx* | 0 | 15 |
| On Britain | ... | *by K. Marx & F. Engels* | 2 | 4 |
| Anti-Duhring, Herr Eugen Duhring's Revolution in Science | ... | *by F. Engels* | 1 | 5 |
| Dialectics of Nature | ... | *by F. Engels* | 1 | 4 |
| Marx-Engels: Selected Correspondence | | | 1 | 14 |
| Capital Vol. I | ... | *by K. Marx* | 2 | 15 |
| V.I. Lenin Selected Works (in 2 Volumes) | ... | *each* | 3 | 12 |
| J. V. Stalin Collected Works Vol. 1 to 7 | ... | *each* | 1 | 8 |
| J. V. Stalin Collected Works Vol. 8 to 13 | ... | *each* | 1 | 4 |
| Recollections of Lenin | ... | | 0 | 6 |

## NOVELS AND SHORT STORIES

| | | | | |
|---|---|---|---|---|
| Childhood, Boyhood and Youth | ... | *by L. Tolstoy* | 3 | 0 |
| Towns First Born | ... | *by Y. Uspenskaya* | 0 | 2 |
| A Hunter's Sketches | ... | *by Ivan Turgenev* | 2 | 13 |
| Foma Gordeyev | ... | *by Maxim Gorky* | 2 | 10 |
| Short Stories of O. Henry | ... | | 1 | 5 |

## BOOKS ON SOVIET ART

| | | | | |
|---|---|---|---|---|
| Ilya Efimovich Repin | ... | *by D. Sarabyaney* | 2 | 0 |
| Indian Art in Soviet Collection | ... | | 9 | 2 |
| Tretyakov Gallery ... A Short Guide | ... | | 1 | 0 |
| Russian Museum ... A Short Guide | ... | | 1 | 0 |
| The Hermitage Museum A Short Guide | ... | | 1 | 4 |

## AMUSING AND INSTRUCTIVE BOOKS FOR CHILDREN

| | | | | |
|---|---|---|---|---|
| Ukrainian Folk Tales | ... | | 1 | 8 |
| Russian Folk Tales | ... | | 1 | 10 |
| Two Stories about Paints and Pencils (Illustrated in Colour) | ... | *by V. Suteyev* | 0 | 5 |
| Lenin's Boyhood and Adolescence | ... | *by A. Ulyanova* | 0 | 6 |
| Little Verses for Little Folks | ... | *by A. Barto* | 0 | 5 |
| Stories by I. Efremov | ... | | 1 | 15 |
| Three Bears (Illustrated in Colour) | ... | *by L. Tolstoy* | 0 | 6 |
| Little Cock-Feather Frock (Illustrated in Colour) | | | 0 | 6 |
| Fox in a Fix (Illustrated in Colour) | ... | | 0 | 5 |

POSTAGE EXTRA

*Available with:* **NEW CENTURY BOOK HOUSE, 199, Mount Road, Madras-2**



**V/O MEZDUNARODNAYA KNIGA, Moscow 200, U.S.S.R.**

*adcrafts*

# ரகுபதி ராகவ

## 38

**[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]**

பிற மதங்களைப் பற்றி நாம் நடந்து கொள்ள வேண்டிய முறையை எடுத்துச் சொல்லுகிறவர்கள், ''சகிப்புத் தன்மை'' இருக்க வேண்டும் என்று சொல்லுவார்கள். ''சகிப்பு'' என்கிற சொல் எனக்குப் பிடிக்கவில்லை. ஆனால் அதைவிட நல்ல சொல்லும் நான் காண முடியவில்லை.

'பிற சமயங்கள் நம்முடைய சொந்த மதாசாரத்தை விடக் குறைந்தனவாகக் கருதி, ஆனாலும் அவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும், வெறுக்கக் கூடாது' என்பது ''சகித்தல்'' என்ற சொல்லுக்குப் பொருள். பிற சமயங்கள் தவறான சமயங்கள் என்று எண்ணுவதே குற்றம். அந்தக் குற்றமான எண்ணத்துடன் கலந்த சகிப்புத் தன்மை உதவாது. நம்முடைய சமயாசாரங்களைப் போலவே பிறருடைய சமயாசாரங்களையும் கௌரவிக்க வேண்டும் என்பது அஹிம்சா முறையின் தர்மம்.

நம்முடைய சமயம், நம்முடைய ஆசாரம் என்று சொல்லுகிறோமே அவற்றிலும் குறைகள் உண்டு என்பதை யுணர்ந்து பிறருடைய சமயாசாரங்களில் குற்றங்களைக் கண்டாலும் அந்தச் சமயாசாரங்களைப் பற்றிக் கௌரவமாக நடந்து கொள்ள வேண்டும். அன்பு நெறியில் உண்மையை நாடுபவனுக்கு இது கஷ்டமாக இராது. எளிதே ஆகும். உண்மையின் முழு தரிசனம் நாம் பெறவில்லை. பெற்று விட்டால் நாம் ஆண்டவனுடன் ஒன்றுபட்டுவிட்டவர்களாவோம். அதன்மேல் தேடும் வேலை என்ன, நாடும் வேலை என்ன? சத்தியமும் கடவுளும் ஒன்றேயல்லவா! உண்மையை உணர்ந்து விட்டேன் என்று ஒருவன் சொல்லிக் கொண்டால் நான் முக்தி யடைந்து விட்டேன் என்று சொல்லுவது போலாகும். நாம் ஜீவன் முக்தர்களல்ல. பக்தர்கள். ஆண்டவனுடைய பாத கமலங்களை அடைய முயற்சி செய்கின்றோம். நம்முடைய ஞானத்திலும் பக்தியிலும் உள்ள குறைகளை யுணர்ந்தே அவன் அடிகளை நாடுகிறோம். குற்றம் குறைகள் நிறைந்த நாம், எப்படிக்குறைவற்ற முறையில் சமய உண்மையை உணர்ந்துவிட முடியும்? பாத்திரத்தின் அழுக்கு அதில் தங்கும் ஜலத்தையும் கெடுக்கும் அல்லவா? கடவுளின் தரிசனமும் பெறவில்லை; தர்மத்தையும் பூரணமாகக் கண்டோமில்லை. அப்படியிருக்க, 'நான் கண்ட சமயமே சரி' என்று பிடிவாதம் செய்வது தவறாகும். நாம் அறிந்த சமய உண்மைகளைத் திரும்பத் திரும்பத் திருத்திக் கொள்ள வேண்டியதாகும். கண்டு விட்டேன் என்று அகம்பாவம் கொள்வதற்கில்லை. உண்மையை மெள்ள மெள்ளத் தான் அணுக முடியும்.

ஆனபடியால் இந்தச் சமயம் உயர்ந்தது; அந்தச் சமயம் தாழ்ந்தது என்று பேசுவதற்கு இடமில்லை. எல்லாச் சமயங்களிலுமே மெய்ப்பொருளின் தரிசனம் ஓரளவு பெறலாம். எல்லாவற்றிலுமே குறையும் குற்றமும் உண்டு. சமயங்களைப் பக்தியோடு பின்பற்றலாம். கௌரவமும் அளித்து வரலாம். ஆனால் குறைகளில்லை என்று கண்ணை மூடிக் கொள்ள வேண்டியதில்லை. நாம் அனுசரித்து வரும் சமயத்திலும் குறைகளைக் காணலாம். அதற்காக அதை விட்டுவிட வேண்டியதில்லை. நம்முடைய அறிவைச் சீர்ப்படுத்திக் கொண்டு வெற்றி பெறலாம். எல்லாச் சமயங்களையும் கௌரவித்து அந்தச் சமயங்களிலுள்ள நல்ல அம்சங்களை நாமும் எடுத்துக் கொள்ளலாம். அவற்றை நம்முடைய சமயத்திலேயே கூட்டிக் கொள்ளலாம். அப்படிச் செய்வதே கடமை யாகும்.

உலகத்தில் ஏன் வெவ்வேறு மதங்களும் ஆசாரங்களும் இருக்க வேண்டும் என்று கேட்கலாம். ஆன்மா ஒரு பான்மையதாயினும் சரீரங்கள் பல வேறு வடிவங்கள் கொண்டிருக்கின்றன. சரீரங்கள் பலவாயினும் ஆன்மா ஒன்றே. ஒரு மரத்தில் பல கிளைகள் இருப்பது போல் தர்மம் என்பது ஒரே மரம். சமயங்கள் கிளைகளையும் இலைகளையும் போல, வேறுபட்டிருந்தாலும் மரம் ஒன்றே. எல்லா மதங்களுமே கடவுளின் பிரசாதம். மக்களுடைய குற்றங் குறைகள் கலந்தபின் அவை பல வடிவங்கள் அடைகின்றன. ஆண்டவனுடைய வரப் பிரசாதமானது சொல்லுக்கு அடங்காது. சொற்களில் அமைக்கப் பார்க்கிறோம். அவரவர்களுக்கு எட்டும் அளவில்சொற்களைத்தேடி அமைக்கிறார்கள். அதில் குற்றம் குறை இருப்பதில் வியப்

பில்லே. முனிவர்களுடைய மொழிகளேயும் பலவிதமாக வியாக்யானம் செய்கிறோம். இந்த வியாக்யானமே சரி அந்த வியாக்கியானமே சரி என்று பிடிவாதம் செய்வது மூர்க்கமாகும். அவனவனுடைய அறிவின்படி அவனவன் காண்பது சரியே யாகும். ஆனபடியால் பொறுமை வேண்டும். பிற மதங்களேச் சகிப்பது கடமையாகும். பிற மதங்களேயும் கௌரவிக்க வேண்டும். அப்படிப் பொறுப்பதும் மதிப்பதும் பழக்கப் படுவதினுல் தன்னுடைய சொந்த சமயத்தில் பக்தியோ அக்கறையோ குறைய வேண்டியதில்லே. தத்தம் சமயங்களில் அதிக சிரத்தையே உண்டாகும். பிற மதங்களே மதிப்பதனுல் நம்முடைய ஞானம் பெருகும்; குறையாது. ஞானம் என்பது பிடிவாத மூர்க்கத்தனமல்ல. அதற்கு நேர் விரோதம். நல்ல ஞானம் அடைந்தோமானுல் சமய பேதங்கள் கரைந்து போகும். சகிப்புத்தன்மை தானுகவே உண்டாகும். நம்முடைய மதத்தை நாம் சரியாக உணரவேண்டுமானுல் பிறமதங்களேப் பொறுத்துக் கொள்ளும் வழக்கம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

நான் இதுவரையில் சொன்னதிலிருந்து ஒரு தவருன எண்ணம் ஏற்படுத்திக் கொள்ளக் கூடாது. நீதி அநீதி, தர்மம் அதர்மம், நன்மை தீமை இவைகளுக்கு இடையிலுள்ள வித்தியாசத்தை மறந்துவிடும்படி நான் சொல்லவில்லே. மறந்து விடலாகாது. உலகத்தில் மக்கள் கொண்டிருக்கும் முக்கியமான சமயங்கள் எல்லாம் நன்மைக்கும் தீமைக்கும் தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் இடையிலுள்ள வித்தியாசத்தை ஒரே விதமாக ஒப்புக்கொண்டிருக்கின்றன. அதைப் பற்றி அபிப்பிராய பேதமே இடையாது. எல்லாச் சமயங்களிலுமே பக்தர்கள் அதர்மத்தை வெறுத்து தர்மத்தைக் கடைப்பிடித்திருக்கிறுர்கள். நன்மைக்கும் தீமைக்குமுள்ள பேதத்தை நன்ருகக் கண்டு அடிப்படைக் கொள்கையாக வைத்துக் கொண்டிருக்கும் சமயங்களேப் பற்றித்தான் நான் இதுவரையில் சொன்னது.

தீமையை வெறுக்க வேண்டும். குற்றத்தையும் பாபத்தையும் வெறுத்தாலும் குற்றம் செய்து விட்டவனே அன்போடு நடத்தப் பயில வேண்டும். பாபிகளிடம் அன்பு செலுத்துவதினுல் பாபத்தின் பேரில் நமக்குள்ள வெறுப்புக் குறையக் கூடாது.

**[யங் இந்தியா, 2-10-30]**

மெய்ப்பொருளே நாம் பூரணமாகக் காண முடியாது. ஒவ்வொரு மூலேயிலிருந்து ஒவ்வொரு பாகம்தான் காண முடியும். மக்கள் அனேவரும் ஒரே விதமாகச் சிந்தனேயைச் செலுத்த முடியாது. ஆனபடியால் சமய விஷயங்களில் பரஸ்பரம் நாம் பொறுமையோடு நடந்து கொள்ள வேண்டும். சகிப்புத்தன்மையே தர்ம மார்க்கமாகும். அவனவனுக்குத் தன்னுடைய மனச்சாட்சியே சட்டம். ஆனுல் தன்னுடைய மனச்சாட்சியைப் பிறர் பேரில் புகுத்துவது அநீதியான அட்டகாசமாகும். மற்றவர்களுக்கும் அவரவர்களுடைய மனச்சாட்சி உண்டு என்பதை உணர்ந்து நினேவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

**[யங் இந்தியா, 23-9-26]**


## "கல்கி" ஆகஸ்டு மாதச் சிறு கதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். தமிழ் நாட்டின் சூழ்நிலேயை வைத்துச் சொந்தமாகவே கதைகள் புனேந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனே கதைகள் வேண்டுமானுலும் அனுப்பலாம்.

கதைகள் "கல்கி"யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்ருவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகளும் "கல்கி"யில் பிரசுரமாகும்.

கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர்ந்து விடவேண்டும்.

கதைகளேத் திரும்பப்பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால் தலேகள் வைத்து அனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

# புதுமை பெறுக!

## இதம் பெறுக! நளினமாய் இருங்கள்!

*நாள்முழுதும்!*

சிறந்த, இன்பகரமான மண முள்ள சார்மிஸ் டால்கம் பவுட ரால் ஏற்படும் உணர்ச்சிகள் இவை. குளித்தபின் மேனிமுழுதும் சார்மிஸ் டால்கம்பவுடரைத்தூவுக. எத்தகைய புதுமை, குளுமை - தெய்வீகக்குளு மை ஏற்படுகிறது! அரிப்பு வராமல் அதன்பட்டுப் படலம் பாதுகாக் கிறது. சிக்கனமான. அத்யா வசியப் பொருள் சார்மிஸ் டால்கம் பவுடர். இன்பம், அழகின் இரகசியம் அது.






# சார்மிஸ்

## டால்கம்பவுடர்

*மிகவும்*

## சிறந்த இன்ப மணமுள்ளது

---

கால்கேட் சார்மிஸ் வாசனைத்திரவியங்கள் சகல-உபயோககிரீமும் ஸ்னேவும் உள்ளன-எல்லாவித சருமங்களுக்கும் ஏற்ற இரு பிரபல வதன கிரீம்கள்.

---

# கடல் கண்ட கனவு

## சோமு

ஐந்தாம் அத்தியாயம்

### வீர விக்கிரமன்

"என்ன காரியம் செய்வதற்கு முனைந்து நிற்கிறீர்கள்! தயவுசெய்து இங்கே வந்து விடுங்கள்!"

இந்தக் குரல் கேட்டுத் திரும்பினான் பூபதி. படியின் மேல் யாழ் நங்கை நின்று கொண்டிருந்தாள். அவள் பேசிய வார்த்தைகளில் பதற்றம் இருந்தது. பூபதிக்கு அப்பொழுது தான் சரியான சுயநினைவே வந்தது என்று சொல்ல வேண்டும். அதுவரை சூழ்ச்சிக் கூட்டத்தாரின் பேச்சும், அடுத்த அறையிலே கேட்ட 'பளார் பளார்' என்ற அடியோசையும் அவனுக்கு ஒரு வெறியை ஊட்டி விருந்தன. அந்த ஆவேசத்தில் "நிறுத்துங்கள்" என்று கதறிக் கொண்டு அந்தச் சுவரையே ஊடுருவி விடுவதுபோல் கைகளைக் கோத்து நின்றான் பூபதி! நல்ல வேளை! அவன் அப்படிக் கதறுவதற்கு முன்பு நங்கை அங்கே வந்து விட்டாள்.

"தயவுசெய்து இங்கே வந்து விடுங்கள்!" என்று நங்கை கூப்பிட்டதும், பூபதி சுய நினைவோடு நடக்க ஆரம்பித்தான். நடந்து நங்கை நின்று கொண்டிருந்த படியின் முகப்புக்கு வந்தான்.

"தங்களிடம் சில அவசரமான செய்திகள் தெரிவித்துப் போகவே வந்தேன். இந்தப் படியோடு நடந்து வந்து நிலாமுற்றத்துக்கு அருகேயுள்ள சிறிய அறைக்குச் செல்லுங்கள். மிகவும் அவசரம்!" என்றாள் அவள்.

சித்திராங்க பூபதிக்கு உடம்பெல்லாம் நடுங்கியது. பதறி நடுங்குகிற நடுக்கம் இல்லை இது. ஏதேதோ குழப்பமான உணர்ச்சிகள் கட்டுப்பாட்டையும் மீறி உள்ளத்துக்குள்ளே பொங்கிப் பெருக ஆரம்பித்து விட்டால், உடம்பில் ஒரு நடுக்கம் ஏற்படுமல்லவா, அந்த நடுக்கம் இது!

பூபதி அந்தச் சிறிய அறைக்குச் சென்ற நொடி நேரத்தில், நங்கையும் அங்கே வந்து சேர்ந்தாள்.

"இங்கே உங்களோடு பேசுவதற்கு' எனக்குக் கிடைத்துள்ள நேரம் மிகவும் குறைவு. அதற்குள் சொல்ல வேண்டிய செய்திகளையெல்லாம் சொல்லி முடித்துவிட வேண்டும். ஆகையினால் என்னுடைய பேச்சை இடைமறிக்காமல் கேளுங்கள். முடிவில் நான் சொல்லுகிற யோசனைப்படி உடனே நடந்து விடுங்கள். விவாதிப்பதற்கோ, ஆராய்வதற்கோ நேரம் இல்லை!" என்றாள் நங்கை.





அவளுடைய குரலில் தொனித்த கவலையும், அளவு கடந்த அன்பும் பூபதியை ஆட்கொண்டன. ''சரி'' என்றான் அவன்.

யாழ் நங்கை பேச ஆரம்பித்தாள். அவளுடைய குரல் மெதுவாக இழைந்தாலும் வார்த்தைகள் வேகமாக வந்தன. பிறருடைய காதில் விழக் கூடாது என்ற கவலையோடு, அத்தனை விஷயங்களையும் அத்தனை சிறிய நேரத்துக்குள் சொல்லி முடித்துவிட வேண்டும் என்ற ஆர்வமும் சேர்ந்து அவளுடைய பேச்சை இயக்கின. அவள் சொன்ன செய்திகளை யெல்லாம் கூர்மையாகக் கேட்க ஆரம்பித்தான் பூபதி. நங்கை சொன்னாள் :

''எதிர்பாராத பெரிய இடையூறு இப்பொழுது உங்களுக்கு நேர இருக்கிறது. பதற்றம் அடையாதீர்கள். இன்னும் முப்பது நாழிகை நேரந்தான் நீங்கள் இந்தக் குங்கும மாளிகையில் இருக்கப் போகிறீர்கள். இதன் பிறகு, ஒன்று நீங்கள் இங்கிருந்து தூக்கிச் செல்லப்படுவீர்கள்; அல்லது நீங்களே இங்கிருந்து மறைந்து விடுவீர்கள். இந்த இரண்டில் ஒன்று கட்டாயம் நடக்கப் போகிறது. நான் உங்களுக்குச் சொல்லுவது என்னவென்றால், நீங்கள் உறங்கிக் கொண்டிருக்கும் போது உங்களை நாலைந்து முரடர்கள் வந்து தாக்கி எங்கோ கண்காணாத இடத்துக்குத் தூக்கிச் செல்லுவதற்கு முன்னால், நீங்களே யாருக்கும் தெரியாமல் இங்கிருந்து மறைந்து விடவேண்டும். இதுதான் நான் உங்களுக்குச் சொல்லும் யோசனை.''

நங்கை இப்படிப் பேச ஆரம்பித்ததும், பூபதிக்குத் தலை சுழல ஆரம்பித்தது. பூமியைச் சந்திரன் சுற்றி வருவது போலவும், சந்திரன் சூரியனைச் சுற்றி வருவது போலவும் இதையெல்லாம் தான் பார்த்துக் கொண்டே தானும் தன் தலையும் சுற்றுவது போலவும் இருந்தன பூபதிக்கு. இத்தனை சுழற்சிகளுக்கும் மத்தியில் அந்த யாழ் நங்கையின் சந்திர வதனம் மட்டும் நிதானத்தோடு நின்று தன்னிடம் அமைதியோடு ஆலோசனை சொல்வது போன்றிருந்தது நங்கையின் பேச்சு.

''வலம்புரித் தீவின் இளவரசரே! உங்களை இப்படி அழைப்பதற்காக என்னை மன்னிக்க வேண்டும். ஏனென்றால், நீங்கள் இளவரசர் என்பதையும், ஒரு நாட்டையே காப்பாற்ற வேண்டிய பெரும் பொறுப்பு உங்களுக்கு இருக்கிறது என்பதையும், இந்தத் தருணத்தில் உங்களிடம் நினைவூட்ட வேண்டியது என்னுடைய கடமை. அந்தக் கடமையை உணர்ந்துதான் இப்படிப் பேசுகிறேன். என்னைத் தவறாக எண்ணாதீர்கள்.

அன்றொரு நாள் இன்ப இரவிலே உங்களை நான் சந்தித்த போது என்னிடம் என்ன கூறினீர்கள்? நினைவிருக்கிறதா? வலம்புரித் தீவுக்குப் பெரியாரோடு மீண்டு சென்று உங்களுடைய அன்னையின் பாதத்தில் இந்தப் பேடகத்தை வைப்பதாகச் சொன்னீர்கள் அல்லவா? அப்படி ஒரு மகத்தான சாதனையை இப்பொழுதே நீங்கள் உடனடியாகச் செய்து விடுவீர்களோ என்று அஞ்சி அதைத் தடுப்பதற்காக இங்கே பல சூழ்ச்சிகள் நடந்து விட்டன. அமைதியாகக் கேளுங்கள்.

மாமல்லபுரத்து விடுதித் தலைவன் எப்படியும் நந்திவர்மனைச் சிம்மாசனத்திலிருந்து இறக்கிவிட வேண்டும் என்பதற்காகக் கங்கணம் கட்டி நிற்கிறான். சித்திரமாயனை அரியணையில் அமர்த்தினால் ஒழிய அவன் தன் கண் இமைகளை மூடமாட்டான். ஆனால் இந்த விஷயத்தைப் பல்லவ சாம்ராஜ்யத்தின் மதிசூகி உதயசந்திரர் கண்டு பிடித்து விட்டார். தம்முடைய யோசனைகளுக்கும் திட்டங்களுக்கும் எதிராக, இந்த மாமல்லபுரத்து விடுதித் தலைவன் வஞ்சகமான பல சூழ்ச்சிகளைச் செய்கிறான் என்பதைப் பல நாட்களுக்கு முன்பே கண்டு பிடித்து, அந்தச் சூழ்ச்சிகளைக் குலைப்பதற்கு வேண்டிய காரியங்களில் உதய சந்திரரும் தீவிரமாக ஈடுபட்டு விட்டார். இந்தக் குங்கும மாளிகையிலே நடக்கிற இரகசியச் சதியாலோசனைகளைப் பற்றிக்கூட அவர் ஒற்றர்கள் மூலம் கேள்விப்பட்டுத்தான், அன்று முன்னேற்றமாக இங்கே வந்து




யாழிசையின் போது அத்தனை நேரம் அமர்ந்திருந்தார். அது மட்டுமில்லை, காஞ்சிமா நகரம் எங்கும் ஏதேதோ பல புதிய விசித்திர வேஷங்களில் எல்லாம் பல ஒற்றர்களை நியமித்திருக்கிறார். மாமல்லபுரத்து விடுதியில் தினந்தோறும் வந்து தங்குகிற யாத்திரிகர்களையும், அவர்களுடைய நடவடிக்கைகளையும் கவனிப்பதற்கு என்று, விசேஷமான நிபுணர்களைத் தேடிப் பிடித்து ஒற்றர்களாக அமர்த்தியிருக்கிறார். நீங்கள் உங்களுடைய தீவிலிருந்து வந்து சேருவதற்கு முன்பே, மாமல்லபுரத்து விடுதியில் ஒற்றர்களின் நடமாட்டம் மிகவும் மும்முரமாக இருந்திருக்கிறது. இந்த நிலையில் உங்களைப் பற்றிய விவரங்களும் உதயசந்திரருக்குத் தெரிந்திருக்கின்றன. நீங்களோ விடுதித் தலைவனின் வலையிலே விழுந்தீர்கள். விழுந்து வேறெங்காவது செல்

வாமல் இந்த மர்ம மாளிகைக்கு வந்து சேர்ந்தீர்கள். ஒரு வகையில் அது என்னுடைய பாக்கியம் என்றாலும், உங்களுடைய அநுபவங்களை எண்ணிப் பார்க்கும்போது அதைப் பற்றி வருத்தப்படாமல் இருக்க முடியவில்லை.

உங்களைப்போலவே ஆதிரையனையும் எப்படியாவது ஆசை காட்டி இந்தக் குங்கும மாளிகைக்குக் கொண்டு வருவதற்கு ஏதேதோ சூழ்ச்சிகள் செய்தார்கள். ஆனால் அவர் வருவதாகச் சொல்லியிருந்த தினத்தில் வரவில்லை. அவருக்குச் சித்திர சாலையிலே இடம் அமைத்து அவரைத் தூக்கிச் செல்வதற்குத் திட்டம் போட்டிருந்தார்கள். ஆனால் பாவம், அன்று அவர் வராமல் போனதோடு, நீங்கள் அந்த நேரத்தில் சித்திர சாலைக்குள்ளே இருந்தீர்கள். ஆதிரையன் என்று நினைத்து உங்களைத் தூக்கிச் சென்று விட்டார்கள் முரடர்கள்!

இத்தனையும் நடந்த பிறகுதான் எனக்கு இந்தச் செய்திகள் தெரிய வந்துள்ளன. எப்படித் தெரிய வந்தன என்பதைப் பற்றி இப்பொழுது மூளையைக் குழப்பிக் கொள்ளாதீர்கள். இத்தனை வேதனைகளுக்கும் கஷ்டங்களுக்கும் மத்தியில் எனக்கு ஏதோ ஒரு சிறு அதிர்ஷ்டம் இருக்கிறது என்றுதான் தோன்றுகிறது. இல்லையென்றால் சாத்தன் என்ற பணியாளன் இத்தனை தூரம் எனக்கு உண்மையாக இருக்க வேண்டியதில்லை! ஆமாம். சூழ்ச்சியும் வஞ்சகமும் நிரம்பிய இந்தச் சூழலில் அவன் ஒருவன் மட்டும் எனக்கு உண்மையாக இருக்கிறான். அவனை ஒரு செவிடன் என்று நினைக்காதீர்கள். அவன் ஒரு காரியச் செவிடு. செவிடனாக நடித்துக் கொண்டே எல்லாப் பேச்சுக்களையும் நடப்புக்களையும் மனத்தில் நன்றாக வாங்கிக் கொள்ளுகிற புத்திசாலி அவன்! என்னுடைய தாயார் அவளுடைய திட்டங்களுக்குச் சாதகமாக இவனை இப்படி ஒரு கைதேர்ந்த நடிகனாகப் பயிற்சி செய்து விட்டிருக்கிறாள். ஆனால் அந்த நடிகனுக்கும் இதயம் என்று ஒன்று இருக்கிறதல்லவா? அந்த இதயத்தில் நடிப்புக்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட உண்மையான உணர்ச்சிகள் நிச்சயம் இருக்கத்தானே செய்யும்? அத்தகைய உண்மையான உணர்ச்சிகளோடு பூரணமான விசுவாசத்தோடு எனக்கு உதவிசெய்கிறான். அவன் இன்று இப்பொழுது, சற்று நேரத்துக்கு முன்பு வந்து சொன்ன செய்திதான் இத்தனை அவசரமாக உங்களிடம் நான் ஓடிவரும்படி செய்தது. அது காரணமாகத்தான் உங்களை இந்த மாளிகையிலிருந்து வெளியேறி விடும்படி சொன்னேன்.''

இப்படிக் கூறிவிட்டு நங்கை படிகளைக் கடந்து கீழே பார்த்தாள். அங்கே சாத்தன் நின்று கொண்டு காவல் காத்துக் கொண்டிருந்தான் போலும்!

அவன் கீழே யிருந்து தைரியமாக இருக்கும்படி சமிக்ஞை செய்திருக்க வேண்டும். அதன் பேரில் நங்கை மீண்டும் தன் பேச்சைத் தொடர்ந்தாள்.

''விடுதித் தலைவனுக்கு வீர விக்கிரமன் என்றுபெயர். அவன் வீரமும் விக்கிரமமும் இல்லாதவனானாலும், குயுக்தியான வேலைகள் செய்வதில் நிபுணன். உங்களை இந்த மாளிகைக்கு அனுப்பும்போது வலம்புரித் தீவையே தன்னுடைய கைக்குள் அமைத்துக் கொள்வதாக எண்ணினான். பல்லவர்களுக்கு எதிராக ஒரு சேனையை ஆயத்தப்படுத்துவதற்கு உங்களுடைய தீவைத்தான் சேனைத் தளமாக அமைத்துக் கொள்ளத் திட்டம் இட்டிருந்தான். அதன்படியேதான் உங்களை மிகவும் நயமாகப் பேசி நட்பு முறையிலேயே காரியத்தைச் சாதித்துக் கொள்ளச் சூழ்ச்சி செய்தான். ஆனால் உதயசந்திரனுடைய தீர்க்கதரிசனமோ, வீர விக்கிரமனை இப்பொழுது திக்குமுக்காடச் செய்கிறது. தெற்கு மண்டலத்திலுள்ள தலைவர்களை வளைத்து ஒன்று திரட்டுவதற்கு ஏதோ முயற்சி செய்தானாம். ஆனால் உதயசந்திரன் கானகக் கோவிலில் இவர்களைத் தாக்கி, வல்லத்து அரசரை இவர்களிட மிருந்து பிரித்துக் கொண்டு சென்று விட்டாராம். அதோடு நிற்கவில்லை அவர். முத்தரையர்களோடு கலந்து ஆலோசித்து உங்களுடைய நாட்டுக்கு ஒரு தூதுவரை அனுப்பியிருக்கிறாராம் உதயசந்திரன். இந்தத் தூதுவரிடம் என்ன சொல்லியனுப்பியிருக்கிறார் என்று விடுதித் தலைவனுக்கு, அந்த வீர விக்கிரமனுக்கு, இன்னும் முழு விவரமும் தெரியாதாம். ஆனாலும் விட்டானா இவன்! இவன் சித்திரமாயனைப் பாண்டியனிடம் அனுப்பி அந்த அரசனுடைய காலிலே போய் விழும்படி சொல்லியிருக்கிறானாம். ஏற்கனவே பாண்டியனுக்கும் சித்திரமாயனுடைய முன்னோர்களுக்கும் நெருங்கிய உறவு. இதனால் இப்பொழுது சித்திரமாயன் கட்சிக்குப் பாண்டியர்களுடைய உதவி கிடைத்திருக்கிறது. நந்திவர்ம பல்லவருக்கு உதவியாக உதய சந்திரனோடு முத்தரையர்கள் நிற்கிறார்கள். சித்திரமாயனுக்கு உதவியாக விடுதித் தலைவனோடு பாண்டியர்கள் நிற்கிறார்கள். இருவருக்குமே வலம்புரித் தீவில் ஒரு கண் விழுந்து விட்டது. உதயசந்திரன் உங்களுடைய வலம்புரித் தீவுக்குத் தூதுவரை அனுப்பியிருக்கிறார் என்று தெரிந்ததும், இப்பொழுது சித்திரமாயன் கட்சியில் இந்த விடுதித் தலைவனும் ஏதோ ஒரு படைக் கூட்டத்தை உங்கள் தீவுக்கு அனுப்பியிருக்கிறானாம். அதோடு அந்தப் படை திரும்பி வந்து செய்தி தெரிவிக்கும்வரை உங்களுடைய இருப்பிடத்தை இரகசியமாக வைத்திருக்க வேண்டும் என்று கருதி, நாளை இரவே உங்களை இந்த மாளிகையிலிருந்து வெளியேற்றிக்கொண்டு போவதற்காக ஏற்பாடுகள் நடக்கின்றன. இந்தச் செய்தியைச் சாத்தன் மூலம் சற்று நேரத்துக்கு முன்புதான் கேள்விப்பட்டேன். நீங்கள் இவர்கள் கையில் அகப்பட்டு விட்டால் பிறகு என்ன நேரும் என்று சொல்வதற்கில்லை. நீங்கள் எப்படியாவது இங்கிருந்து தப்பிச் சென்றுவிட வேண்டுமே என்றுதான் கவலைப்படுகிறேன்—''

இப்படிச் சொல்லும்போது நங்கையின் குரல் தளர்ந்தது. கஷ்டப்பட்டுக் கண்ணீரை அடக்கிக் கொள்ள முயற்சித்தாள். இது கண்டு பூபதி ஏதோ பேச ஆரம்பித்தான். அவனைப் பேச விடாமல் இடைமறித்தாள் நங்கை.

''இப்பொழுது என்னோடு தர்க்கம் செய்ய வேண்டாம். இத்தனை சூழ்ச்சிகளுக்கு மத்தியில் வீரத்தோடு எதிர்த்து நிற்கப் போவதாகச் சொல்ல வருகிறீர்கள். வேண்டாம்.

# க்ளுகோவிட்டா மீண்டும் சக்தி அளிக்கிறது

அன்றாடம் உங்கள் அலுவல்களில் அபரிமிதமான சக்தியைச் செலவழிக்கிறீர்கள்—இந்த சக்தியை ஈடுசெய்தாக வேண்டுவது அவசியம்.

வியாதியை எதிர்த்துப் போராட நீங்கள் ஆரோக்கியமாயும், உடல் வலிமையுடனும் இருக்கவேண்டியதவசியம். உங்கள் தேகத்தில் சக்தி குறைந்திருந்தால், வியாதியை எதிர்த்துநிற்கும் சக்தியும் குறைந்திருக்கும். நீங்கள் களைப்பும் தெம்பற்றதுமான உணர்ச்சி அடைகிறீர்கள். சக்தியை மீண்டும் அடைய மிகச் சிறந்த வழி க்ளுக்கோவிட்டா சாப்பிடுவதேயாகும்.






சூடான அல்லது குளிர்ந்த பானத்துடன் இரண்டு தேக்கரண்டி க்ளுக்கோவிட்டா சேர்த்துப் பருகுவதால், நாள் முழுவதும் விரயமாகும் சக்தியைத் திரும்ப அடைவதுடன், ஓய்வு நேரத்தை உற்சாகமாய் அனுபவிக்க உதவுகிறது. மேலும் ரத்த புஷ்டியை அதிகரிப்பதுடன், தசைகளை வலிவுறுத்தி எப்பொழுதும் உங்களை ஆரோக்கியமாக இருக்கவும் செய்கிறது. க்ளுக்கோவிட்டா ஒரு மருந்தல்ல - உங்கள் ஆகாரத்துடன் உட்கொள்ளும் ஒரு சேர்க்கைப் பொருள்.



காரன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) லிட்.

பம்பாய் 1 கல்கத்தா 1

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

**85% கிருமிகளை ஒழிக்கிறது சொத்தையும்**

**மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள்**

**அவை**




---

## உங்களுடைய பாதுகாப்பிற்கு

இன்ஷ்யூர் செய்யுங்கள்




## பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

# நெருப்பு - கப்பல் - விபத்து

ஆஸ்திகள் : ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங் : மதுரை

கிளைகள் : பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்,
6 பெங்களூர், திருவனந்தபுரம், கோயம்புத்தூர், கொச்சி

உங்களுடைய இலட்சியத்தைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள். பேரியாமோடு வலம் புரித் தீவுக்குச் செல்ல வேண்டிய இள வரசர் நீங்கள். அந்தக் கடமையை மறந்து விடாதீர்கள். மற்றச் சண்டைகளுக்கும் உங்கள் இலட்சியத்துக்கும் சம்பந்தம் இல்லை. பேரியாமோடு நீங்கள் இந்த மாளிகையி லிருந்து நாளை இரவுக்கு முன்னதாகவே மறைந்து விடுவதற்கான ஏற்பாட்டைச் செய் யுங்கள். ஏற்பாடு என்ன? சாத்தன் வந்து உங்களை நாளை இரவு முன்னேரத்தில் கூப்பிடு வான். அப்பொழுது நீங்கள் பேரியாமோடு புறப்பட்டுவிட வேண்டும். மற்றக் காரியங் களை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.''

இவ்வாறு நங்கை சொல்லிக் கொண்டிருக் கும்போதே மாடிப் படிகளில் 'தட தட' என்று சத்தம் கேட்டது. சாத்தன் ஏதோ சமிக்ஞை செய்கிறான் என்று உணர்ந்து கொண்ட நங்கை 'பளீர்' என்று அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள்.

## ஆறும் அத்தியாயம்

# பூபதி புறப்படுகிறான்!

**யா**ழ் நங்கை சென்ற பிறகு சித்திராங்க பூபதி படிம விலாசத்துக்குள்ளே போய் நீண்ட நேரம் மூளையைக் குழப்பிக் கொண்டே யிருந்தான். இரவு நகர்ந்ததும் பொழுது விடிந்ததும் அவனுடைய விழித்த கண்களுக்கு முன்னால் நடந்த நிகழ்ச்சிகள்.

மறுநாட் காலை பூபதி மாடிப் படிகளில் இறங்கிச் சென்று தனது மூளையின் கொதிப் பெல்லாம் தணியும்படியாகப் 'பொங்கு புன லிலே' நீராடி விட்டு மறுபடியும் படிம விலா சத்திலே நுழைந்தபோது, அங்கே யிருந்த சாய்மானத்தில் பிரம்பு சாத்தியிருந்தது. சற்றுத் தொலைவில் ஒரு வட்டமான இருக்கை யில் அமர்ந்திருந்தார் சித்தர்!

பூபதிக்குத் திகைப்பு நீங்கி அவன் தன்னு டைய இரண்டு கைகளையும் கூப்பி வணங்கு வதற்குள், சித்தர் எழுந்து வந்து அவனுக்கு எதிரே நின்று கொண்டார்.

''என்ன ராஜகுமாரா! உன்னிடம் ஒரு முக்கியமான கேள்வி கேட்கவேண்டும். அதற் காகத்தான் இப்பொழுது வந்தேன். குழம் பாமல் பதில் சொல்கிறாயா?'' என்றார் சித்தர். பூபதி அவருடைய முகத்தையே பார்த்தான்.

''நீ சிவபக்தனா? விஷ்ணு பக்தனா? அல்லது சமண சமயத்தில் நாட்டம் கொண்டவனா? அதைச் சொல் முதலில்!''

குளித்து விட்டு நெற்றியில் எந்தவிதமான சின்னமும் இல்லாமல் வருவதால் சித்தர் இப் படி ஒரு போடு போடுகிறாரோ என்று நினைத் தான் பூபதி. கேள்விக்குப் பதில் சொல் வதற்கு வேண்டிய மன உறுதி இல்லை. சொன்னான் :

''ஐயா! எப்பொழுது பார்த்தாலும் கேள்விமேல் கேள்வியாகப் போட்டு என்னைக் குழப்பியடிக்கிறீர்களே! தயவு செய்து..''

''பார்த்தாயா? மறுபடியும் குழம்ப ஆரம் பித்து விட்டாய் என்றல்லவா தெரிகிறது. குழம்பாதே தம்பி, குழம்பாதே! குழப்பம் எல்லாம் இன்னும் ஒன்றும் நடந்துவிட வில்லையே! அதற்குள் குழம்புகிறாயே! குழம் பாதே. நான் எதற்குக் கேட்டேன் என்றால், நீ சிவபக்தனானால் உனக்கு நரவாகனம் பிடிக் கும். விஷ்ணு பக்தனானால் பறவையிலே பறக்க வேண்டும் என்பாய். இரண்டும் இல் லாமல் சமண பக்தனானால் என்ன சொல்லு வாய் என்று யோசித்தேன்!''

''ஐயா, எதற்காக இந்த ஆராய்ச்சியில் இப்பொழுது இறங்கினீர்கள்? புரிய வில்லையே!'' என்றான் பூபதி.

''சரி; ஆராய்ச்சி உனக்குப் பிடிக்கவில்லை என்று தெரிகிறது. அப்படியானால் ஒன்று கேட்கிறேன் சொல். நீ என்றைக்காவது சிவிகையிலே ஏறிப் பிரயாணம் செய்த துண்டா?'' என்று கேட்டார் சித்தர்.

''சிவிகையிலா? இல்லை. பொதுவாக மனிதனை மனிதன் தூக்கிச் சுமப்பது எனக்குப் பிடிக்காது!''—இப்படி ஒரு போடு போட் டான் பூபதி, சித்தரிடம். அவனுக்குப் பொறுமையில்லை. அந்த ஆத்திரத்தை இப் படித் தீர்த்துக் கொண்டான்!

''ஓகோ! மனிதனை மனிதன் சுமக்கக் கூடாதோ! நன்றாயிருக்கிறதே நீ சொல்வது! வாயுள்ள மனிதனை வாயில்லாத மிருகம் தூக்கிச் சுமக்கலாம், வாயுள்ள மனிதன் சுமக்கக் கூடாதோ? இது என்ன நியாயம் தம்பி, நீ சொல்வது? வாயில்லாத மிருகத்தை ஏமாற்றி வதைத்து அதன் பேரில் ஏறினால் அது வாயை மூடிக் கொண்டு இருக்கிறது! ஏறிச் செல்லுகிறவனுக்கு மிகவும் சௌகரி யம்! சிவிகை என்றால் அப்படியில்லை அல்லவா? தூக்கிச் சுமப்பதற்குப் பணமும் வாங்கிக் கொண்டு வாயையும் திறந்து வசவுகள் பொழிவான் அல்லவா மனிதன்! தனது கஷ் டத்தை எடுத்துச் சொல்ல அவனுக்கு வாய் இருக்கிறதல்லவா! அதனால் மனிதன் மனித னைச் சுமக்கக் கூடாது. தூக்கிச் சுமக்க வேண் டிய ஜீவன் வாயில்லாப் பிராணிதான்! அது தான் நல்லது! சௌகரியம்! வம்பு இடை யாது! கிளர்ச்சி இராது!''

சித்தர் இந்த மாதிரிப் பேசிக் கொண்டே படிம விலாசத்திலிருந்து பிரம்பை எடுத்துக் கொண்டு நகர்ந்து விட்டார்!

பூபதிக்குத் தலையெல்லாம் சுழன்றது. சிவிகை, நரவாகனம் என்றெல்லாம் இந்த நேரத்தில் இப்படிச் சில வார்த்தைகளை உதிர்த்து விட்டுச் செல்லுகிறாரே சித்தர்! இவர் ஏன் இப்பொழுது இங்கே வரவேண்டும்? ஒரு வேளை தான் மாளிகையிலிருந்து வெளி யேறுவதற்குச் சிவிகை வரப்போகிறதோ?

இப்படி எண்ணிக் கொண்டிருக்கும்போதே பூபதிக்கு நேற்றிரவு நடந்த சம்பவம் உள்ளத் தில் திடீரென்று புயல் வீசிற்று. பக்கத்து அறையில் 'பளீர் பளீர்' என்று அடியோசை

கேட்டதே! அந்த வீரன் தன்னை எத்தனை வேண்டுமானாலும் அடிக்கலாம் என்று கலங்காமல் சொன்னானே. அந்தக் குரல் இதற்கு முன்பு கேட்ட குரலாக இருந்ததே! அது யாராக இருக்கும்! இன்னொரு முறை அந்தக் குரல் கேட்டிருக்குமானால் அது யாரென்று கண்டு பிடித்திருக்க முடியும்! ஆனால் அதற்குள் யாழ் நங்கை அங்கு வந்து விட்டாளே! என்றாலும் அவள் வந்ததினால் எத்தனை விஷயங்கள் தெரிந்து கொள்ள முடிந்தது! வலம்புரித் தீவில் இரண்டு கட்சியின் சேனைகளும் கண்ணாக இருக்கிறார்களே! தன் அன்னையும் மந்திரநாயகமும் மனம் குழம்பாமல் ஸ்திரமான ஒரு முடிவுக்கு வரவேண்டுமே! இத்தனை முக்கியமான நெருக்கடியில் தான் வலம்புரித் தீவில் இல்லாமல் போனது எத்தனை பெரிய துர்ப்பாக்கியம்!

இப்படி ஏதேதோ நினைப்புக்கள். இடையிடையே சித்தரைப் பற்றிய விமர்சனங்கள். அவருடைய பிரவேசமும், பேச்சும் பற்றிய சிந்தனைகள். உதய சந்திரன் மிகவும் ஆற்றலோடு ஏதேதோ புதிய வேஷங்களில் ஒற்றர்களை அமர்த்தியிருப்பதாக யாழ்நங்கை கூறினாளே. அப்படி இந்த விசித்திர சித்தரும் ஒரு நிபுண ஒற்றராக இருக்கக் கூடுமோ? இவருந்தான் மாமல்லபுரத்திலிருந்து தன்னைப் பின் தொடருகிறாரே!

இவ்வாறு எண்ணமிட்டான் பூபதி. மேற்கொண்டு எண்ண எண்ண இந்த நினைப்பு உறுதியாயிற்று. 'ஆமாம்; இந்தச் சித்தர் நிச்சயம் ஒரு பெரிய அரசாங்க ஒற்றராகத்தான் இருக்க வேண்டும்!' என்று நினைத்தான் சித்திராங்கன். அதே சமயம் இன்னொரு முக்கியமான சந்தேகம் அவனுடைய மனத்தில் எழுந்தது. அன்றொரு நாள் நங்கையுடன் பேசிக் கொண்டிருந்த போது, அவள் இந்தச் சித்தரைப் பற்றி எத்தனை பக்தி சிரத்தையோடு குறிப்பிட்டாள். புண்ணிய புருஷர் என்றும் அவருடைய பாதங்கள் இந்த மாளிகையில் படுவதே ஒரு பாக்கியம் என்றும் அல்லவா அவள் சொன்னாள். அதை நினைக்கும் போது இவர் ஒரு மகானாகத்தான் இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது! ஆனால் அப்படி ஒரு மகான் என்றால் அவர் ஏன் இந்த மாதிரியான ஓர் இடத்துக்கு வருகிறார்?

இப்படி நினைத்ததும் பூபதிக்குச் சிரிப்பு வந்தது! 'மகானாவது ஒன்றாவது' என்று ஒரு கணம் நினைத்தான். அப்படி நினைக்கும் போதே அந்தக் குமிழ்க் கட்டையின் நினைப்பும் பிரம்பின் வீச்சும் நினைவு உலகிலே வட்டம் சுற்றி ஒரு கணம் உள்ளத்தை என்னவோ செய்தன! அவருடைய சிரிப்பையும், அந்தக் கூர்மையான கண்களையும் கற்பனையிலே ஒரு தரம் பார்த்தான்! 'அப்பப்பா! அவரை நினைத்துப் பார்த்தாலே உடம்பை என்னவோ செய்கிறதே! மகான் என்றால் இப்படித்தானே இருக்க வேண்டும்? வேறு எப்படி யிருப்பாராம் மகான்? மகானுக்கு இரண்டு கொம்பா முளைத்திருக்கும்!''

இந்த மாதிரி ஓர் எண்ணம் எழுந்ததும், பூபதி சிந்தனை செய்வதை நிறுத்திவிட்டான். 'சித்தன் போக்கு சிவன் போக்கு' என்று முன்னொரு முறை விடுதித் தலைவன் சொன்னது பூபதியின் மனத்தில் நன்றாகப் பதிந்து போயிருந்தது. 'இவர் மகானோ, ஒற்ற நிபுணனோ! எப்படி யிருந்தாலும் இருக்கட்டும்! நம்மை வந்து இப்படிக் குழப்பியடிக்க வேண்டியதே யில்லை!' என்று எண்ணியவனாக இருக்கையை விட்டு எழுந்து, படிம விலாசத்துக்கு வெளியே பார்த்தான். சித்தர் போய் விட்டாரா அல்லது இப்பொழுதுங் கூட அங்கேதான் எங்கேயும் நின்று கொண்டிருக்கிறாரா என்று பார்ப்பது போல!

பூபதி சுற்று முற்றும் பார்த்தான். பிரம்போ, குமிழ்க் கட்டையோ அவற்றின் சப்தமோ ஒன்றும் இல்லை. பூனைபோல் சென்று விட்டார் என்று தீர்மானித்து நிற்பதற்குள், படிக்கட்டில் யாரோ நடந்து வரும் ஓசை கேட்டது. 'தட தட' என்று கேட்கவில்லை. மெதுவாக இரகசியமாக அடிமேல் அடிவைத்து வருவதுபோல் கேட்டது! எத்தனை மெதுவாக நடந்தாலும் அந்த மரப் படிக்கட்டில் பாதம் படுகிற ஓசை கேட்கவே செய்தது. யாரென்று ஆவலோடு நின்று கவனித்தான் பூபதி. பணியாளன் சாத்தன் பதுங்கிப் பதுங்கி வந்து கொண்டிருந்தான்.

பணியாளன் சாத்தன் என்றதும், பூபதிக்கு மீண்டும் உடம்பு பதற' ஆரம்பித்தது. அவனால் கேடோ தீமையோ எதுவும் ஏற்படாது என்று நன்றாக இப்பொழுது தெரிந்து போய் விட்டது. யாழ் நங்கை சாத்தனைப் பற்றிக் கூறிய விவரங்கள் பூபதியின் மனத்தில் அத்தனை நம்பிக்கையை ஊட்டியிருந்தன. என்றாலும், அதே சமயம் ஒரு பயமும் புதிதாக முளைத்திருந்தது. யாழ் நங்கையின் நம்பிக்கைக்குப் பாத்திரமான பணியாளனும், அவளுக்கு உண்மையான அன்போடு உதவி செய்கிற உத்தமத் தொண்டனுமான அந்த மனிதன் இப்பொழுது இத்தனை தூரம் பதுங்கிப் பதுங்கி வரவேண்டும் என்றால் எத்தனையோ முக்கியமான காரியமாகத்தான் இருக்க வேண்டும். அதிலும் இரவுக்குள் அந்த மாளிகையை விட்டு வெளியேறுவதற்குச் சித்தமாக இருக்கும்படி நேற்று நங்கை தன்னிடம் சொல்லிப் போயிருக்கிறாள் அல்லவா? தானே ஏதோ ஏற்பாடுகள் செய்வதாகவும் கூறினாள் அல்லவா? அந்த ஏற்பாடுகளுக்கெல்லாம் அவளுக்குத் துணையாக இருக்கக் கூடியவன் அந்தக் குங்கும மாளிகையில் சாத்தனைத் தவிர வேறு யார் இருக்க முடியும்? —இவ்வாறெல்லாம் நினைத்து ஒரு கண நேரத்துக்குள் ஓராயிரம் கேள்விகள் எழுப்பிக் கொண்டு மனம் குழம்பினான் பூபதி! இதைப் புரிந்து கொண்ட அந்தச் சாத்தன் நடந்து வரும்போதே கையினால் சமிக்ஞை செய்தான். நேற்றுச் சென்ற அந்தச் சிறிய அறைக்கு உடனே செல்லும்படியாகக் கையினால் ஜாடை காட்டினான் சாத்தன். பதறுகிற கால்களை நன்றாக அழுக்கிக் கொண்டு வேகமாக நடந்தான் பூபதி. நடந்து அந்த அறைக்குள்ளே நுழைந்தான். அங்கே யாரும் இல்லை. ஒரு சிறிய துணி மூட்டை மட்டும் இருந்தது. இதற்குள் பூபதியின் பின்னோடு நடந்து வந்த சாத்தன் அந்தத் துணி மூட்டையை அவிழ்க்கும்படி கையினால் ஜாடை காட்டிக்கொண்டே அறைக்கு வெளியே நின்று, அறையின் கதவைச் சாத்தி மூடினான். அறைக்குள்ளே தனியாகப் பூட்டப்பட்ட பூபதி அந்தத் துணி மூட்டையை எடுத்து அதில் என்ன இருக்கிறது என்று உலைத்துப் பார்த்தான். **(தொடரும்)**

## எங்கப்பா எவ்வளவு நல்லவர்!

எவ்வளவு பாக்யசாலி குழந்தை! அவன் தகப்பனுர் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் வாங்கி வருகிருர். என்ன மென்மை! என்ன குளுமை! அந்தக் குழந்தையின் சருமத்திற்கு எவ்வளவு இனிமையானது!

Johnson's

ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்




**இலவசம்:** குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு வேண்டிய அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. சுலபமாகப்படித்து புரிந்து கொள்ளும்படியான இங்கிலீஷ் பாஷையில் எழுதப்பட்டுள்ளது.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்
பி.ஓ. பாக்ஸ் 1976 டிபார்ட்மெண்ட் 20L
பம்பாய்

JB 3024



# தங்க மோதிரம்

"இன்று ராவுக்குள்ளே தீர்த்து விடறேன்" என்று கூறிய வண்ணம் கையில் பிடித்திருந்த கூர்மையான கத்தியை உயரத் தூக்கிப் பிடித்தான் முத்தையன்.

"முத்தையனுக்கு ஜே!" என்று பக்கத்திலிருந்த நான்கு நண்பர்களும் கோஷம் செய்தனர்.

பளபளவென்று மின்னிய அந்தக் கத்தியிடம் முத்தையன் "இன்று ராவிலே உனக்கு நல்ல இரை யிருக்கு" என்று நகைத்தபடியே சொன்னான்.

"நானுங்கூட வரட்டுமா அண்ணே?" என்று நண்பர்களில் ஒருவன் முத்தையனிடம் கேட்டான்.

"சே" என்று அழுத்தி அலட்சியமாகக் கத்திவிட்டு, "இந்தக் கொசுவை நசுக்கறதுக்குத் துணை வேறு? போங்கடா" என்றான் முத்தையன்.

களத்துமேட்டுக்குப் பக்கத்தில் முத்தையன் இப்படிச் சத்தம் செய்ததை ஒரு பெண் உருவம் கேட்டுக் கொண்டிருந்தது. அந்த உருவம் இவர்கள் பின்புறம் இருந்த ஒரு புதருக்கு மறு பக்கத்தில் வெடவெடக்க ஒளிந்து கொண்டிருந்தது.

முத்தையனும் அவன் சகாக்களும் அந்த இடத்தை விட்டுப் போய்ச் சிறிது நேரங் கழித்து அவ்வுருவம் மெள்ள வெளியே வந்து ஓடிவிட்டது.

அந்தப் பெண் உருவம்தான் முத்தையனின் சொந்தத் தங்கை கண்ணம்மா.

ஆறு மாதங்கள் முன்பு வரையில் "கண்ணு! கண்ணு!" என்று தங்கையிடம் உயிராயிருந்த முத்தையன் இன்று அதே தங்கையை விதவையாக்கச் சபதம் செய்தான். கண்ணம்மாவின் கணவனை மாணிக்கத்தை அன்றிரவு தன் கூர்மையான கத்திக்கு இரையாக்கத் தீர்மானித்தான்.

இந்த வெறுப்புக்கு ஆதி காரணம் வெறும் ஒரு பித்தளை மோதிரந்தான்!

* * *

இடைச்சி மருதத்துக்கு இரண்டு குழந்தைகள். அவள் கணவன் இறந்தபோது மூத்த குழந்தை முத்தையனுக்கு ஐந்து வயது. இளைய குழந்தை கண்ணம்மாவுக்கு இரண்டு வயது. கணவன் விட்டுப் போன சொத்து இரண்டு எருமை மாடுகள்தான். அவைகளைக் கொண்டு மருதம் தனது குடும்பத்தை நடத்தி வந்தாள். இரண்டும் நல்ல கறவை மாடுகள். தினம்



இரண்டு வேளேயும் சேர்த்து ஐந்துபடி பால் கொடுக்கும். அதில் நான்கு படிகளேப் பக்கத்து டவுனில் உள்ள சிற்றுண்டிச் சாலேயில் விற்று விடுவாள்.

முத்தையனுக்குப் பன்னிரண்டு வயது வந்ததும் தானே பால் கறக்க ஆரம்பித்து விட்டான். ஒன்பது வயது கண்ணம்மாளும் சும்மாயிருக்க மாட்டாள். மாடுகளுக்குத் தன் கையால் தீனி போடுவாள். பருத்திக் கொட்டை அரைப்பாள். வறட்டி தட்டுவாள்.

கால வெள்ளத்தின் வேகத்திலே முத்தையன் கிடுகிடுவென்று வளர்ந்து விட்டான். முத்தையனுக்கு இருபது வயது ஆகும் போது அவன் தாயார் மருதம் இறந்து விட்டாள். தங்கை கண்ணம்மாவுக்குப் பதினேழு வயது. கண்ணம்மாவின் மேல் உயிராயிருந்த முத்தையன் அவளே நல்ல கணவனுகப் பார்த்துக் கட்டிக் கொடுத்துவிட வேண்டும் என்றிருந்தான். அதற்காக அனுவசியமாகச் செலவு செய்யாமல் கொஞ்சம் காசு சேர்த்தான். அவன் கையில் இருநூறு ரூபாய் வரை சேர்ந்திருந்தது.

அப்போதுதான் அந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்தான் மாணிக்கம் என்ற இருபத்து ஐந்து வயதுள்ள வாலிபன். நான்கு எருமை, ஐந்து பசுக்கள் அவனுடைய சொத்து. பக்கத்து டவுனில் "யூனியன் டெய்ரி" என்று பலகை மாட்டிப் பால் டிப்போ வைத்தான். பால் வியாபாரம் நன்ருக நடந்தது. கையிலும் ரொக்கமாக ஆயிரம் ரூபாய் சேர்த்து விட்டான். கிராமத்தில் எல்லாருக்கும் குடிசை வீடுதான். ஆனல் மாணிக்கம் மாத்திரம் ஓட்டுக் கூரை போட்ட செங்கல் சுவர் வீட்டைக் கட்டி விட்டான்.

பணக்காரனுன மாணிக்கமும், ஏழையான கண்ணம்மாவும் பரஸ்பரம் ஒருவரை யொருவர் காதலித்தனர். இந்தக் காதல் முத்தையனுக்கும் தெரிந்தது. அவனுக்கு மகிழ்ச்சிதான். தன் அருமைத் தங்கையை 'யூனியன் டெய்ரி' முதலாளிக்குக் கொடுப்பது என்ருல் பெருமையில்லேயா?

அவனே ஏழை. மாணிக்கமோ பணக்காரன். பணக்காரப் பிள்ளேக்குப் பெண்ணேக் கொடுப்பது என்ருல் அதற்குத் தக்கபடி கலியாணம் செய்து கொடுக்க வேண்டாமா? கையிலோ இருநூறு ரூபாய்தான் இருக்கிறது. இதில் எப்படிக் கலியாணம் செய்கிறது?





பம்பாய் எவரெஸ்ட் அட்வர்டைஸிங் பிரைவேட் லிமிடெட்டைச் சார்ந்த ஸ்ரீ சி. ஆர். எம். ஸ்வாமி அவர்களின் சகோதரர் குமாரன் சிரஞ்சீவி எம். என். சுப்ரமணியன், பி.ஏ.க்கும் டாடாபுரம், டாடா ஆயில் மில்ஸ் இன்ஜினீர்-இன்-சார்ஜ் ஸ்ரீ சீதாராம அய்யர் அவர்கள் குமாரி சௌ. கங்காவுக்கும் கனியூரில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க, சுப்ரமணியன் - கங்கா!

ஆனால் மாணிக்கத்துக்குக் கண்ணம்மாவின்மேல் ஆசையிருந்ததால் எளிமையாகக் கல்யாணம் நடத்தினால் போதும் என்று சொல்லி விட்டான். இருந்தாலும் தன் கௌரவத்துக்குத் தகுந்தபடி ஒரு பவுனில் தங்க மோதிரம் மாத்திரம் செய்து சபையில் போட வேண்டுமென்று நிபந்தனை போட்டான். பவுன் விலை அறுபத்தைந்து ரூபாய் விற்றது. 'அதற்கென்ன, சமாளித்துக் கொள்ளலாம்' என்று கருதி முத்தையன் அதற்கு ஒப்புக் கொண்டு விட்டான்.

அவன் ஒப்புக்கொண்டபடியே பக்கத்துப் பட்டணத்தில் உள்ள கிருஷ்ணபத்தரிடம் போய், பவுனுக்காக அறுபத்தைந்து ரூபாயும் கூலிக்காக ஐந்து ரூபாயும் கொடுத்து மோதிரம் செய்யும்படி கூறினான். கலியாணம் நடைபெற்றது. சபையில் மோதிரத்தை மாணிக்கம் விரலில் மாட்டிவிட்டான் முத்தையன் பெருமையுடன். கலியாணம் முடிந்த பிறகுதான் அது பித்தளை மோதிரமென்று மாணிக்கத்துக்குத் தெரிந்தது.

கிருஷ்ணபத்தர் முத்தையனை ஏமாற்றி விட்டார். எழுபது ரூபாயைச் சுளையாக வாங்கிக் கொண்டு தங்க மோதிரத்துக்குப் பதிலாகப் பித்தளை மோதிரத்தைக் கொடுத்து விட்டு ஓடி விட்டார்!

'மச்சான் பித்தளை மோதிரத்தைக் கொடுத்துத் தங்க மோதிரம் என்று ஏமாற்றி விட்டான்; தன் கௌரவமே போய்விட்டது' என்று மாணிக்கத்துக்கு முத்தையன் மேல் வெகு கோபம் வந்து விட்டது. முத்தையனைக் கண்டபடி நிந்தித்துப் பேசி, அந்தப் பித்தளை மோதிரத்தை அவன்மேல் வீசியெறிந்து விட்டான். மனச்சாட்சிக்கு விரோதமாகத் தான் நடந்து கொள்ளவில்லையென்றும், உண்மையாகவே கிருஷ்ணபத்தர் ஏமாற்றி விட்டாரென்றும் முத்தையன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். ஒன்றும் பயன் படவில்லை. வீண் வார்த்தைகள்தான் மிஞ்சின.

இந்த அற்ப விஷயத்திலிருந்து இருவரும் தீராப் பகை கொண்டனர். நாளுக்கு நாள் வெறுப்பு முற்றிக் கொண்டே போய்க் கடைசியில் முத்தையன் தன் அருமைத் தங்கையை விதவையாக்கி விடுவது என்ற தீர்மானத்துக்கு வந்து விட்டான். அன்றிரவே தன் காரியத்தைப் பூர்த்தி செய்வதற்கு முடிவு கட்டினான்.

* * *

தமையனின் சபதத்தை மறைவிலிருந்து கேட்ட கண்ணம்மா மனம் பதறிப் போய்த் தன் கணவனுக்கு முன்னெச்சரிக்கை செய்து காப்பாற்ற வீட்டுக்கு ஓடோடி வந்தாள். அவள் வீடு சேருவதற்கு முன்பே, பட்டணத்திலிருந்து சீக்கிரம் வீடு திரும்பித் தனக்காகக் காத்திருக்கும் கணவனைக் கண்டதும், அவளுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. தமையனின் சபதத்தைச் சொல்ல வாயெடுத்தாள். அதற்குள் மாணிக்கமே ஆரம்பித்து விட்டான்.

''கண்ணம்மா! நமக்குப் பயல் பொறக்கப் போறானு?'' என்று மகிழ்ச்சியுடனும் ஆச்சரியத்துடனும்கேட்டான்.

கண்ணம்மாளின் கன்னங்கள் சிவந்து விட்டன. அவளுக்கு வெட்கம் ரொம்பவும் வந்துவிட்டது.

''எப்படித் தெரியும் அத்தான் உங்களுக்கு?'' என்று ஆசையுடன் கேட்டாள்.

''இன்னைக்குக் காலை நேரத்திலேயிருந்து எல்லாம் மகிழ்ச்சியான செய்தியா வருது. கடைக்குப் போனேனா! அங்கு அந்தக் கிழவி,— அதுதான் லோகம்மாக் கிழவி இல்லே, அவள்— வந்தாள். என் கன்னத்திலே தட்டி, 'தம்பி! உன குடும்பத்துக்கு அதிர்ஷ்டம் அடிக்கப் போகிறது!' என்றாள். எனக்கு ஒன்றுமே புரியவில்லே. 'என்ன சொல்லறே கிழவி!' ன்னு கேட்டேன். கிழவி பொக்கை வாயைத் திறந்து

சிரித்தாள். 'அட பயலே! கண்ணம்மா குளிக்க அஞ்சு மாசமாகிறது' என்றாள். எனக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லே. கிழவி கிட்டே ஒரு ரூபாய் கொடுத்து உடனே கோயில் உண்டியிலே போடச் சொன்னேன்'' என்று கூறி முடித்து விட்டு, கண்ணம்மாளின் கரத்தைப் பிடித்தவாறு உள்ளே சென்றான் மாணிக்கம்.

அவளே அணைத்துக்கொண்டே ''ஏன் கண்ணம்மா, நீ என்னிடம் சொல்லவேயில்லே? அஞ்சு மாசமா ஆச்சு? ஏன் கண்ணம்மா, அஞ்சாம் மாசத்திலே பொறந்த வீட்டுக்குப் போய்க் காப்பு கட்ட வேண்டுமென்று சொல்லுவார்களே?'' என்றான்.

இதைக் கேட்ட கண்ணம்மாவின் கண்களில் நீர் வந்து விட்டது. பதில் பேச முடியாமல் நின்றாள். இதைப் பார்த்த மாணிக்கம், ''வருந்தாதே கண்ணம்மா. இப்பொழுதுதான் நானே முத்தையன் வீட்டுக்கு அவனேப் பார்க்கப்போனேன். அவன் வீட்டில் இல்லே. நேரே இங்கு வந்தேன். நாளேக் காலேயிலே நானே உன்னே மச்சான் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போகிறேன்'' என்றான்.

ஆச்சரியம் தாங்காமல் கண்ணம்மா ''என்ன அத்தான்! நீங்களா உங்க மச்சான் வீட்டுக்குப் போயிருந்தீங்க?'' என்று கேட்டாள்.

''ஆமாம் கண்ணு. நான்தான் சொன்னேனே முதல்லே. இன்றைக்கு என்னவோ எல்லாம் சந்தோஷ சமாசாரமா வருகிறது. கிழவி சொல்லிவிட்டுப் போன பிறகு அந்த ஹோட்டல்கார ஐயா வந்தார். கொஞ்ச நேரம் பேசினரு. எனக்கும் மச்சானுக்கும் இருக்கிற சண்டை அவருக்குத் தெரியும்போல இருக்கு. உங்க அம்மாளைப் பற்றி ரொம்பச் சொன்னரு. முத்தையனேப் பற்றியும் சொன்னரு. 'கலியாணம்னு அப்படித்தான் நாலு பொய்யைச் சொல்லித் தாலி கட்டு வாங்க. போனல் போகிறான் பையன். மன்னித்து விடு' என்று சொன்னரு. நானும் யோசனேசெய்து பார்த்தேன். அற்பப் பொருளான இந்த மோதிரத்துக்காக மச்சான் மேல் மனஸ்தாபப்பட்டு என்ன பிரயோசனம்னு அப்படியே விட்டு விட்டேன். அதை நினேத்து நினேத்து எனக்கு ரொம்பவும் வருத்தம் வந்து விட்டது. அதனுலே தான் வலுவில் நானே முத்தையன் வீட்டுக்குப் போனேன். அவன் இல்லே'' என்று கூறி முடித்தான் மாணிக்கம்.

கண்ணம்மாளின் மனம் தத்தளித்தது. 'கணவனே தன் தமையனே மன்னித்து விட்டார். மறுநாட் காலேயில் தன்னேயும் அழைத்துக் கொண்டு முத்தையன் வீட்டுக்குப் போவதாகச் சொல்லுகிறார். ஆனல் தமையனே அன்றிரவுக்குள் தன் கணவனேத் தீர்த்துவிடுவதாகச் சபதம் செய்திருக்கிறான். அதனல் இரவு அந்த ஆபத்து வருவதற்குள் எப்படியாவது தான் கணவனே அழைத்துக் கொண்டு தமையன் வீட்டுக்குச் சென்று சண்டையை நீக்கிச் சமாதானம் செய்துவிடவேண்டும்' என்று தீர்மானித்தாள்.

அதனுல் கணவனேப் பார்த்து, ''அத்தான்! இந்த சந்தோஷ சமாசாரத்தை இப்பொழுதே அண்ணனிடம் சொல்ல ஆசையாயிருக்கிறது. மறுபடி வருகிறீர்களா என்னுடன்? இருவரும் அண்ணன் வீட்டுக்குப் போகலாம்'' என்றாள்.

அவளுடைய விருப்பத்துக்கு ஒப்புக் கொண்டான் மாணிக்கம். ஆனல் ''எனக்கு ரொம்பப் பசிக்குது, கண்ணம்மா. சீக்கிரம் உணவு செய்துபோடு. சாப்பிட்டு விட்டு இருவரும் போகலாம்'' என்றான்.

உடனே உணவு தயாரிக்கலானள் கண்ணம்மா. உணவு தயாரான



தும் இருவரும் சேர்ந்து சாப்பிட ஆரம்பித்தனர்.

அப்போது சிலு சிலுவென்று காற்று அடிக்க ஆரம்பித்தது. சிறிது சிறிதாக ஆரம்பித்த காற்று கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக் கொண்டே போயிற்று.

''காற்று வீசுவதைப் பார்த்தால், புயல் காற்று வரும்போல் இருக்குது, கண்ணம்மா! சீக்கிரம் சாப்பிடு'' என்றான் அவன். அவர்கள் சாப்பிடுவதற்குள் புயற் காற்றே வந்து விட்டது. விளக்கு அணைந்து விட்டது. கதவுகளையும், ஜன்னல்களையும் மூடித் தாழ்ப்பாள் போட முடியவில்லை. வெகு கோரத்துடன் பேய்க் காற்று சுழன்று அடித்தது.

ஒன்று பாக்கி வைக்காமல் கிராமத்தில் உள்ள அத்தனை குடிசைகளும் காற்றில் பறந்து போய் விட்டன. பெரிய பெரிய மரங்கள் வேரோடு சாய்ந்தன. கிராமத்து ஜனங்கள் கரிய இருட்டில் கண்டபடி ஓடினார்கள்.

மாணிக்கம் வீட்டின் ஓட்டுக்கூரை அப்படியே பிய்த்துக் கொண்டு போய் விட்டது. நான்கு சுவர்கள் மாத்திரம் நின்று கொண்டிருந்தன. எந்தக் கணம் அவைகளும் விழுந்து விடுமோ? கரிய இருளில் நடந்தது ஒன்றும் தெரியாமல், மாணிக்கமும் கண்ணம்மாவும் ஒரு சுவர் ஓரத்தில் பதுங்கிக் கிடந்தனர்.

முத்தையனின் குடிசையும் அடியோடு பிய்த்துக் கொண்டு போய்விட்டது. உயிருக்கு அஞ்சிக் கண் தெரியாமல் ஓடினான் முத்தையன். கீழே விழுந்து கிடந்த ஒரு மரத்தில் இடறி விழுந்தான். தட்டுத் தடுமாறி எழுந்து மெள்ள ஊர்ந்து கொண்டே சென்றான். கடைசியில் எப்படியோ தங்கை கண்ணம்மாவின் வீட்டின் அருகில் வந்து அதன் சுவரின்மேல் முட்டிக் கொண்டான். கைகளால் தடவிப் பார்த்தான். சுவர் என்று தெரிந்தது. அந்த வட்டாரத்தில் சுவர் உள்ளது தன் தங்கை வீடு ஒன்று தான் என்று அவனுக்குத் தெரியுமாதலால் தான் தங்கை வீட்டை அடைந்து விட்டோம் என்று தெரிந்து விட்டது.

பற்பல எண்ணங்கள் மனத்தில் மாறி மாறி வந்தன. இடுப்பில் கையை வைத்துப் பார்த்தான். கூரிய கத்தி இடுப்பிலே இருந்தது. அப்போது 'பளிச்' என்று ஒரு பெரிய மின்னல் வானத்தில் வெட்டிப்பாய்ந்தது. அந்த வெளிச்சத்தில் தலையைத் தூக்கி நோக்கினான். சுவரின்மேல் ஓட்டுக் கூரை இல்லை! எல்லாக் குடிசைகளைப் போலவே அந்த ஓட்டுக் கூரையும் பேய்க் காற்றில் பறந்து போய் விட்டது.

'ஆ' வென்று அவன் மனம் ஒரு கணத்தில் உடைந்து விட்டது. அந்த அதிர்ச்சியில் அவனுடைய வெறுப்புக் கொண்ட மனம் பறந்தே போய் விட்டது. தங்கை கண்ணம்மாவின் பேரிலும் அவள் கணவன் பேரிலும் என்றுமில்லாத வாஞ்சை வந்து விட்டது.

''ஏ, கடவுளே, மாலையில் என்ன சபதம் செய்தேன்?'' என்று தன் தவறை எண்ணித் தலையில் அடித்துக் கொண்டான். பாசத்தினால், அவன் ''கண்ணம்மா, மச்சான்'' என்று உரக்க அலறினான்.

சுவருக்கு மறு புறத்தில் ஒண்டிக் கிடந்த மாணிக்கத்தின் காதிலும் கண்ணம்மாவின் காதிலும் முத்தையன் அலறியது கேட்டது. உடனே மாணிக்கம் உரத்த குரலில் ''முத்தையா, பயப்படாதே. நாங்கள் இங்கே பத்திரமாக இருக்கிறோம். எப்படியாவது தட்டுத் தடவிச் சுவருக்கு இந்தப்புறம் வந்து விடு'' என்று கத்தினான்.

இது முத்தையன் காதில் விழுந்தது. மெள்ள, சுவரைப் பிடித்துக் கொண்டு தடவித் தடவி ஊர்ந்து கொண்டே வந்து அவர்களுடன் சேர்ந்து கொண்டு விட்டான். மூவரும் ஒரே இடத்தில் இரவு முழுதும் அப்படியே இருந்தனர்.

அதிகாலையில் புயல்காற்று நின்றது. வெளிச்சம் வந்ததும்தான் மூவருக்கும் உயிர் வந்தது. சுற்றும் முற்றும் பார்த்தார்கள். அவர்கள் இருந்த அந்த ஒரு சுவரைத் தவிர, வீடு என்று சொல்ல முடியாமல் பாக்கி எல்லாம் தரையோடு தரையாகப் போய்விட்டன.

மெள்ள வீட்டைச் சுற்றி வந்தனர். ஒரு இடத்தில் ஒரு மனித உடல் கீழே விழுந்த மரத்துக்கு அருகில் கிடப்பதைக் கண்டனர். கஷ்டப்பட்டு மரத்தை அகற்றி அப்பால் கிடத்தினார்கள். நல்ல வேளை, அந்த மனிதன் சாகவில்லை. உயிர் இருந்தது. அந்த மனிதனின் முகத்தைப் பார்த்ததும் ''ஆ''வென்று மூவரும் சேர்ந்து அலறி விட்டார்கள். இவர்களை ஏமாற்றிய கிருஷ்ணபத்தர் தான் அப்படிக் கிடந்தான்!

மூவரும் உடனே அவனுக்கு மூர்ச்சை தெளிவித்தனர். தெளிவடைந்ததும், கண்ணைத் திறந்து பார்த்து மிரள மிரள விழித்தான் கிருஷ்ண பத்தர். முத்தையனின் முகத்தைப் பார்த்து அறிந்து கொண்டு விட்டான். வாய் பேச முடியவில்லை. துவண்டு கிடந்த தன் வலது கையை மெள்ளத் தூக்கி விரல்களை விரித்துக் காண்பித்தான். அவன் விரலில் பளபளவென்று மின்னிக் கொண்டு ஒரு தங்கமோதிரம் இருந்தது!

# ப்ளிட் வீட்டிலுள்ள பூச்சிகள் எல்லாவற்றையும் கொல்லுகிறது!

ப்ளிட்டில் அடங்கியுள்ள சக்தி வாய்ந்த ஆறு சேர்க்கைப் பொருள்கள் ஒன்றோடொன்று இணங்கி வேலை செய்து, எல்லாவித வீட்டுப் பூச்சிகளையும் கொல்லுகின்றன. ஆகவே வியாதிகளைப் பரப்பும் பூச்சிகளை உங்கள் வீடுகளிலிருந்து ஒழிக்க ப்ளிட்டை உபயோகியுங்கள். பூச்சிகளைக் கொல்லக்கூடிய சேர்க்கைப் பொருள்கள் மட்டுமே விஞ்ஞான முறையில் ப்ளிட்டில் சேர்ந்திருப்பதால் மனிதர்களுக்கோ, வீட்டு மிருகங்களுக்கோ இதனால் ஒருவித தீங்கும் விளையாது. சிவப்பு, வெள்ளை மற்றும் நீல நிற டின்னில் கிடைக்கும் ப்ளிட் இன்றே வாங்கி அதற்கு செலவாகும் ஒவ்வொரு அணாவிற்கும் ஏராளமான பூச்சிகளைக் கொல்லுங்கள்.

ப்ளிட் உபயோகிப்பது பற்றிய சில குறிப்புகள்:

பூச்சிகள் நடமாடும் மூலை முடுக்குகளை பிரத்தியேகமாகக் கவனித்து, அங்கெல்லாம் ப்ளிட்டை தாராளமாகத் தெளியுங்கள்

ஆகாரப் பொருள்களுக்குச் சமீபத்தில் ப்ளிட்டை தெளிக்காதீர்கள். அது கெடுதலொன்றும் விளைவிக்காதெனினும், ஆகாரத்தின் ருசியை ஒருவேளை பாதிக்கக் கூடும்

ப்ளிட் தெளிப்பதற்குமுன் கதவுகளையும், ஜன்னல்களையும் சாத்துவதால், அது அதி தீவிரமாக வேலை செய்ய இயலும்

பூச்சிகள் கூடிப் பெருகும் அலமாரிகளிலும் டிராயர்களிலும் ப்ளிட்டை நன்றாகத் தெளியுங்கள்

FLIT
"D.D.T" KILLS
ESSO

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(யு.எஸ்.ஏ.யில் இணைக்கப் பெற்றது.
கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V. 3353

# இப்போது இந்தியாவில் உங்களுக்கு கிடைக்கிறது

# பாமாலிவ்

## டால்கம் டீ-லக்ஸ்



நீங்கள் எதிர்பார்த்துக்
காத்திருந்த டால்கம் பவுடர்!
உண்மையிலேயே நேர்த்தியான
டால்கின் சகலகுணங்களுடன், ஒரு
புதியரம்மிய வாசனேயும்சேர்ந்தது!
வெறியூட்டும் 17 ஸென்டுகளின்
அற்புதக்கலவைசேர்ந்த பாமாலிவ்
டால்கம் டீ-லக்ஸின் நறுமணம்
உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம்
அடையச் செய்யும் ... மணிக்
கணக்காக உங்களுக்குக் குளுமை
யும் புத்துணர்ச்சியும் அளிக்கும்!



அன்னையில் சுத்தமும்
சௌகர்யமும்



குழந்தைக்கு இதம்
அளிக்க அதைத்
தாராளமாகப் பூசுங்கள்



எரிச்சலைத்தடுக்க
மேலெங்கும் அதை
உபயோகியுங்கள்



சோர்ந்த பாதங்களுக்கு
இதமும் புத்துணர்ச்
சியும் அளிக்க




# பாமாலிவ்

## டால்கம் டீ—லக்ஸ்




**கா**ரியாலயத்தில் அமர்ந்து மும்முரமாக வேலை செய்துகொண்டிருந்த ரகுவை "ஸார், தந்தி!" என்ற குரல் சுய நினைவுக்குக் கொண்டு வந்தது.

எதிர்பாராமல் சிவப்பு சைக்கிளையும், எதிரே நின்று கொண்டிருந்த தந்திச் சேவகனையும் பார்த்ததும் ரகுவுக்கு உடலில் ஒரு படபடப்பு ஏற்பட்டது. உள்ளம் நடுங்கியது. 'நமக்கு யாரிடமிருந்து தந்தி வந்திருக்கும்? ஜானகியைத் தவிர வேறு யார் நமக்கு இருக்கிறார்கள்? ஐயோ, கடவுளே! சீனிவாசா! நல்ல செய்தியாக இருக்க வேண்டுமே!' என்று பிரார்த்தித்தவாறு கையெழுத்திட்டுத் தந்தியை வாங்கி நடுங்கும் கரங்களுடன் பிரித்துப் பார்த்தான்.

"ஜானகிக்கு அபாயம். உடனே புறப்பட்டு வரவும்" என்ற வரிகளைப் படித்ததும் அவனுக்குக் கண்கள் இருண்டன. கண் முன்னால் இருந்த மேஜை, நாற்காலி எல்லாம் ஒன்று ஒன்றாகத் தட்டாமாலை ஆடியது. கண்களில் நீர்முட்டி நின்றது.

"என்ன ரகு! என்ன விஷயம்?" என்று கேட்டார் தலைமைக் குமாஸ்தா சர்மா. வயதிலும், உலக அனுபவத்திலும் பெரியவரானதினால் ரகுவுக்கு என்றுமே அவரிடம்மதிப்பு உண்டு. சர்மாவும் அவனிடம் பிரியமாக இருந்தார்.

ரகு மௌனமாகத் தந்தியை அவரிடம் கொடுத்தான். தந்தியைப் படித்த அவருடைய முகத்திலும் வருத்தத்தின் சாயை படர்ந்தது. ரகுவும், ஜானகியும் எப்பேர்ப்பட்ட அன்னியோன்னிய தம்பதிகள் என்பது அவருக்கு நன்கு தெரியும். அதனால் மெதுவாக முதலில் தம்மைச் சமாளித்துக் கொண்டார். பிறகு அமைதியான குரலில், "ரகு! வீணாக நீ கவலைப்படாதே! எல்லாம் 'அவனுடைய அருளால்' நல்லபடியாகவே நடக்கும். சுவாமியின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டுத் தைரியமாகப் புறப்படு, அப்பா!" என்று துரிதப்படுத்தி, தைரியமும் சொல்லி அனுப்பினார். உடனடியாக ரகுவுக்கு இருபத்தைந்து நாட்களுக்கு லீவையும் கொடுத்து, பாஸையும் வாங்கிக் கொடுத்தார்.

ரகுவின் உள்ளம் பட்ட பாட்டை வர்ணிக்கவே இயலாது! 'கடவுள்! அவர் உண்மையாகவே என்னை மன்னிப்பாரா? நான் செய்த குற்றத்துக்கு எனக்கு மன்னிப்பு கிடைக்குமா? அல்லது குற்றத்துக்காக என் அன்பின் வடிவான ஜானகியின் மூலம் எனக்குத் தண்டனை அளித்து விடுவாரா? வேண்டாம் ஏழுமலையானே! என் உள்ளத்தை உடைத்துவிடாதே! என் ஜானகியை என்னிடமே கொடுத்து விடு!" என்று அவன் உள்ளம் கதறிக் கொண்டிருந்தது.

ஹௌராவில் ரயிலில் ஏறி அமர்ந்த ரகு, ஒரு நிலையில் உட்கார முடியாமல் தவித்தான். இதேபோல் ஏறக்குறைய ஒரு மாதத்துக்கு முன்பு ரகு இந்த ஸ்டேஷனுக்கே வந்திருந்தான். அப்பொழுதும் அவனுடைய உள்ளத்தில் வருத்தமே மேலோங்கி யிருந்தது. ஜானகியும் ரகுவை விட்டுப் பிரிவதில் வருத்தமாகத்தான் இருந்தாள். ஆனால் அவள் ரகுவைப் போல அவ்வளவு வருத்தமாக இல்லை. பிறந்தகம் செல்வதனால், அதிலே மகிழ்ச்சியும் கலந்திருந்தது. ரகு ஜானகியை ரயில் ஏற்றிவிட்டு, வெறிச்சோடி இருந்த அந்தப் பிளாட்பாரத்தில் பிரமை பிடித்தவன் போல் எவ்வளவு நேரம் நின்று கொண்டிருந்தானோ, அது அவனுக்கே தெரியாது! ஜானகியின் ஒரு மாதப் பிரிவையே தாங்குவது கடினம் என்பவனுக்கு, நிரந்தரமாகவே ஜானகியிடமிருந்து பிரிவா? முடியாது; முடியாது!

ரகுவுக்கும் ஜானகிக்கும் விவாகம் நடந்து இரண்டு வருடங்களாகி இருந்தன. ரகு தாய் தந்தை அற்றவன். கல்கத்தாவில் ரயில்வேயில் குமாஸ்தாவாக இருந்தான். வரும்படி குறைவுதான். ஆனால் அதற்குள் ஜானகி ரொம்பச் சாமர்த்தியமாகக் குடும்பம் நடத்தி வந்தாள். வருடம் இரண்டும் இரண்டு நிமிஷங்களாக வெகு விரைவில் சென்றுவிட்டன.

வழக்கம்போல் அன்று மாலை ஐந்து மணிக்கு ரகு காரியாலயத்திலிருந்து வீடு திரும்பினான். முகத்தில் குதூகலம் பொங்க ஜானகி காப்பி, சிற்றுண்டியைக் கொண்டு வந்து மேஜையின் மேல் வைத்தாள். ஜானகியின் முகத்தை ரகு கவனித்து விட்டான்.

"என்ன! தேவியார் முகத்தில் ஒரே மகிழ்ச்சி தாண்டவமாடுகிறதே? விசேஷம் உண்டோ?" என்று கேட்டான் குறும்பாக.



பிரசண்ட விகடன் பத்திரிகையின் ஆசிரியர் திரு நாரண துரைக்கண்ணன் அவர்களின் மூத்த குமாரி செல்வி விஜயலக்ஷ்மிக்கும் பெரம்பூர் ரயில்வே ஒர்க்ஷாப் சூபர்வைசர் திரு மா. பொ. பாலசுந்தரம் அவர்களின் குமாரர் செல்வன் ஜெயசீலனுக்கும் திருமணம் ராயபுரத்தில் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

---

''விசேஷம் இருக்கிறது! பலகாரம் சாப்பிடுங்கள். பிறகு உங்களுக்குச் சொல்கிறேன்!'' என்றாள் ஜானகி.

''இல்லை, இல்லை! இப்பொழுது சொன்னால்தான் ஆயிற்று!'' என்று ரகு பிடிவாதம் பிடித்தான்.

வேறு வழி இல்லாமல் ஜானகி உள்ளே சென்று ஒரு கடிதத்தை எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தாள். கடிதத்தில் உள்ள செய்தி உண்மையில் மகிழ்ச்சியளிக்கக் கூடியதுதான்.

**அன்புள்ள ஜானகிக்கு,**

**அநேக ஆசீர்வாதம். நம் ராதாவுக்கு விவாகம் நிச்சயம் ஆகி யிருக்கிறது. நீயும் மாப்பிள்ளையும் திருமணத்துக்குப் பதினைந்து தினங்கள் முன்பே வந்துவிடுங்கள். எல்லோரும் உங்களுடைய வரவை வெகு ஆவலுடன் எதிர்பார்க்கிறோம். —ராஜம்.**

டிபனைச் சாப்பிட்டுவிட்டு, ரகு தட்டிலேயே செட்டாகக் கையைக் கழுவிக் கொண்டான். துண்டில் கையைத் துடைத்துக் கொண்டு, ''ஜானகி! இப்படி உட்கார்!'' என்று தன் அருகில் இருந்த நாற்காலியில் உட்காரச் சொன்னான். பிறகு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்: ''ஜானகி! ராதாவுக்குக் கலியாணம் நிச்சயம் ஆகி யிருக்கிறது என்று கேட்க மிகவும் சந்தோஷமாக இருக்கிறது. அவசியம் நீ விவாகத்துக்கு முன்னாலே போய்த்தான் ஆக வேண்டும். இரண்டு வருடங்களாக உன்னை விட்டு விட்டு நான் ஒரு நிமிடம் கூடப் பிரிந்ததில்லை. இப்பொழுது உன்னைப் பிரிய வேண்டும் என்று நினைக்கும்போது எனக்கு வருத்தமாக இருக்கிறது. அதற்காக நீ தங்கையின் கலியாணத்துக்குப் போகாமல் இருந்தால் நன்றாக இருக்குமா? நீயும் உன் அம்மாவையும் அப்பாவையும் பார்த்து இரண்டு வருடங்கள் ஆகிவிட்டன. நீ கிளம்புவதுதான் சரி!'' என்று சொன்னான்.

ஜானகியின் முகம் வாடிவிட்டது.

''என்ன! நீங்கள் வரவில்லையா? அப்படியானால் நானும் போகவில்லை!'' என்றாள் அவள் வருத்தத்துடன்.

''ஜானகி! எனக்கு மாத்திரம் உன்னுடன் சென்னைக்கு வரவேண்டுமென்று ஆசை இல்லையா? இப்பொழுது ஆபீசுக்கு 'ஆடிட்டர்கள்' வரப்போகிறார்கள். ஆகையினால் எனக்கு மாதக் கணக்கில் கண்டிப்பாக லீவு கொடுக்க மாட்டார்கள். அதனால் நீ முன்னால் போ! கலியாணத்துக்கு நானும் வருகிறேன். அப்படியே உன்னை அழைத்துக் கொண்டு வந்து விடுகிறேன்!'' என்றான்.

ஜானகி தானும் செல்லவில்லை என்றே முதலில் மறுத்து விட்டாள். ரகு அவளுக்குப் பலவிதமாக எடுத்துச் சொல்லி, அவளைச் சென்னைக்குக் கிளம்பச் சம்மதிக்க வைத்தான்.

''ஜானகி! நாளைக்கு மறுநாள் என் நண்பன் ஒருவன் தன் குடும்பத்துடன் சென்னை செல்கிறான். நீயும் அவர்களுடனே போய் விடலாம். நல்ல துணையாக இருக்கும். சாமான்களை எல்லாம் எடுத்து வைத்துக் கொள். பணத்துக்கு நான் எப்படியாவது ஏற்பாடு செய்கிறேன்!'' என்றான் ரகு.

அதேபோல் தன் சிநேகிதனிடம், ஜானகியை அழைத்துச் செல்லும்படி கூறி விட்டான். ஜானகியும் தன் வரையில் ஊருக்குப் புறப்படத் தயாராகி விட்டாள். ஆனால் ரகுவுக்குப் பணம்தான் கிடைக்கவில்லை. அவனுடைய வாட்டமடைந்த முகத்தைப் பார்க்க ஜானகியின் மனசுக்கு வருத்தமாக இருந்தது. அவனுக்குப் பக்கத்தில் வந்து அமர்ந்து கொண்டு, ''ஏன் வீணாக மனசை அலட்டிக் கொள்கிறீர்கள்? பணம் கிடைக்காவிட்டால் இன்றையப் பிரயாணத்தை நிறுத்தி விடுவோம். நாம் இருவரும் சேர்ந்தே விவாகத்துக்குச் செல்வது தான் கடவுள் விருப்பம் போலிருக்கிறது!'' என்றாள்.

இதுவரை சிந்தனை ரேகையுடன் இருந்த அவன் முகத்தில் 'கடவுள் விருப்பம்' என்ற வாக்கியத்தைக் கேட்டதும் ஒரு பிரகாசம் தோன்றியது. அதற்குள் ஒரு யோசனையும் அவன் மனத்தில் உருவாகி விட்டது. ஆனந்தத்துடன் ஜானகியின் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''ஜானகி! எனக்குத் தெரிந்த இடத்தில் எல்லாம் பணம் கேட்டு விட்டேன். கிடைக்கவில்லை. பணமோ இப்பொழுது நமக்கு அவசியமாக வேண்டும். நாம் வெகு நாட்களாகத் திருப்பதி ஏழுமலையானுக்கு ஒரு உண்டியில் மாதாமாதம் காணிக்கை செலுத்தி வருகிறோம் அல்லவா? அதிலிருந்து இப்பொழுது பணம் எடுத்துக் கொள்வோம். பிறகு கையில் கிடைக்கும்பொழுது போட்டு விடலாம்!'' என்றான்.

ஜானகிக்கு இதில் விருப்பமே இல்லை.

''ஏழுமலையான் பொல்லாதவர். அவரிடம் தவறி நடந்தால் வட்டிக்கு வட்டி அவர் வசூலித்து விடுவார்!'' என்றாள் ஜானகி பயந்த குரலில்.

''நல்லவராவது, பொல்லாதவராவது? எல்லாம் நாம் நடந்து கொள்கிறபடி நடந்து

ஹத்திபாயின்

தராசு மார்க்

உத்திரவாதமான

# ஸ்டெய்ன்லஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

உயர்ந்த ரகம்-நேர்த்தியான தயாரிப்பு

ஹத்திபாய் துள்ஸிதாஸ் அண்டு ஸண்ஸ், பம்பாய்-2





# உங்கள் கூந்தலில் அமைந்திருக்கும் சுருள்களை

# எழிலோங்கச் செய்யுங்கள்

யாவரும், சுருண்டு வளைவுகளோடிருக்கும் கூந்தலைக் கண்டு போற்றுகின்றனர். எதாவதொரு கெட்டியான எண்ணெயை உபயோகித்து சிக்குப் பிடிக்கும் விதத்தில் கூந்தலை படிய வைக்கக் கூடாது. கூந்தலுக்கான டாம்கோ வாசனைத் தேங்காய் எண்ணெயை உபயோகித்து உங்கள் கூந்தலின் இயற்கையான வளைவுகளை நிலைக்கச் செய்யுங்கள். உயர்ந்த பாணியில் பரிசுத்தப்படுத்திய இந்த லேசான எண்ணெய், மல்லிகை, ரோஜா, லெவண்டர் ஆகிய மூன்று தேர்ந்தியான வாசனைகளில் கிடைக்கிறது.




25 வருஷங்களாக இந்தியாவின் மிகவும் விரும்பப்பட்ட கூந்தல் தைலம்.



வாரத்திற்கொருமுறை கூந்தலுக்கு டாம்கோ வின் தேங்காய் எண்ணெய் ஷாம்பூவை உபயோகித்து ஸ்நானம் செய்யுங்கள். இதனால் உங்கள் கூந்தல் மிருதுவாயும் இயற்கையான சுருள்களுடனும் இருக்க உதவும்.

## டாம்கோ

### கூந்தலுக்காக வாசனைத் தேங்காய் எண்ணெயும் ஷாம்பூவும்

டாடா ஆயில் மில்ஸ்

கொண்டால், பொல்லாதவர்களும் நல்லவராகி விடுவார்கள்'' என்றான் ரகு.

அதற்குமேல் மறுத்துப் பேச விரும்பாத ஜானகி, பணத்தை வாங்கிக் கொண்டாள்.

ஜானகியிடம் ராதாவின் விவாக சமயத்தில் லீவு எடுத்துக் கொண்டு வருவதாக ரகு கூறினானே தவிர, அந்தச் சமயத்தில் அவனுக்கு லீவு கிடைக்கவில்லை; அவனும் ராதாவின் விவாகத்துக்குப் போக முடியவில்லை.

விவாகம் முடிந்த பிறகு, ஜானகி ஒரு கடிதம் எழுதி யிருந்தாள்.

ஜானகியிடமிருந்து வந்த கடைசிக் கடிதம் அதுதான். ஆனால் அதுவே நிரந்தரமாகக் கடைசிக் கடிதமாகி விடுமோ?

சடாரென்று வண்டி ஒரு குலுக்கலுடன் நின்றது. சிந்தனையிலிருந்து விடுபட்ட ரகு, தன்னைச் சுற்றி ஒரு முறை பார்த்தான். நிலைமையைப் புரிந்து கொள்ளவே, சிறிது நேரம் ஆகியது. மாலைக் கதிரவனின் மஞ்சள் வெய்யில் மெதுவாக மறைந்து எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. இருட்டி வெகு நேரம் ஆகி யிருந்ததுபோல் தோன்றவே, கைக் கடிகாரத்தைப் பார்த்தான். மணி ஒன்பதுக்கு மேல் ஆகி இருந்தது. வண்டி கல்கத்தாவை விட்டு, கரக்பூர் ஜங்ஷனைத் தாண்டி, பலாசோரில் நின்று கொண்டிருந்தது. குறைந்தது இருபது நிமிடங்களுக்கு மேல் வண்டி அங்கு நிற்கும். ரகுவுக்கு ஒரே களைப்பாக இருந்தது. காலையிலிருந்து ஒரு நிமிடம்கூட உட்காராமல் சுற்றிய களைப்பு, மன உளைச்சல், இரண்டும் சேர்ந்து ஒரே அலுப்பாக, படுக்கையில் தலை சாய்த்தால் போதும் என்று தோன்றியது. தலை சாய்த்த சில நிமிஷங்களில் நித்திராதேவி ரகுவைத் தன் அன்புக் கையால் அணைத்தாள்.

★

ரகு தன் கண்களைத் திறந்த பொழுது, சூரியனின் கிரணங்கள் தங்க நிறமாகப் பிரகாசிப்பதை உணர்ந்தான். 'நாளைக்கு இதே நேரத்தில் கிட்டத்தட்ட சென்னைக்கருகே சென்று கொண்டிருப்போம். அடுத்த அரை மணி நேரத்தில் ஜானகியிடம் போய்விடுவேன். ஜானகிக்குச் சாதாரண ஜுரமாக இருந்திருக்கும். இவர்ள் பயந்து கொண்டு தந்தி அடித்திருப்பார்கள். நாளைக்கு என்னைப் பார்த்தால் அவளுக்கு ஆனந்தம் தாங்காது. எவ்வளவு விஷயங்கள் என்னுடன் பேசத் துடித்துக் கொண்டிருக்கிறாளோ?' என்று எண்ண அலைகள் வீசின.

மனசு சிறிது தெளிவாகவும் சமாதானமாகவும் இருந்தது. ரகு படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து, கையால் முகத்தைத் துடைத்துக் கொண்டு, தலையையும் சிறிது சரி செய்து கொண்டான். பிறகு பெட்டியைத் திறந்து, பற்பசையையும் பிரஷ்ஷையும் எடுத்துக் கொண்டு கீழே இறங்கினான். காலில் செருப்பை மாட்டிக் கொண்டான். அப்பொழுதுதான் ஜன்னலுக்கு வெளியே ஸ்டேஷனைக் கவனித்தான். வெளியில் ஏதோ குழப்பம் என்று தோன்றியது. 'என்ன ஸ்டேஷன்?' என்று வெளியே எட்டிப் பார்த்தான். போர்டைப் பார்த்ததும், அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'என்ன! பலாசோர் ஸ்டேஷனா? இரவு முழுவதும் வண்டி இங்கேயே நிற்கிறதா? என்ன காரணம்? இதுகூடத் தெரியாமல் நான் எப்படித் தூங்கினேன்?'

காரணத்தை அறிய வண்டியை விட்டுக் கீழே இறங்கினான். அந்த வண்டியில் இருந்தவர்களில் பெரும்பாலானவர் வண்டியை விட்டுக் கீழே இறங்கி, ஸ்டேஷனில் கும்பல் கும்பலாக நின்று பேசிக் கொண்டிருந்தனர். காரணத்தை அறிந்ததும், ரகுவுக்கு ஏமாற்றத்தினால் உள்ளம் உடைந்து விட்டது போலிருந்தது.

'' என்னத்தைச் சொல்கிறது! இவர்களுடைய ராஜ்யப் பிரிவினைத் தகராறுக்கு, நம் ரயில் வண்டிதான் அகப்பட்டதா? அதனால் எவ்வளவு மக்கள் சிரமப்படுகிறார்கள் என்று இவர்களுக்கு எங்கே தெரிகிறது? எதற்கெடுத்தாலும் நல்ல வேலை நிறுத்தம்! இனிமேல் எப்பொழுது இது சமரசம் ஆகி எப்பொழுது வண்டி கிளம்பப்போகிறதோ?'' என்று கூறிவிட்டு ஒரு பெரியவர் அங்கிருந்த சிமென்டு பெஞ்சியில் உட்கார்ந்து விட்டார்.





# இருமலை நிறுத்த பெப்ஸ் உபயோகியுங்கள்

ஜலதோஷம், இருமல், தொண்டைப்புண் பிராங்கைடிஸ், இன்ப்ளுயன்ஸா இவைகள் அபாயத்திற்கிடமான உபாதைகள், பெப்ஸ் மூலம் சுவாச அடைசலை அகற்றுங்கள். பெப்ஸிலுள்ள குணமளிக்கும், மருந்து சத்துகள், இருமலை உடனே நிறுத்தி, ரணத்தை ஆற்றுகின்றன. மேலும் தீங்கிழைக்கும் கிருமிகளை நாசம் செய்து, உங்கள் சுவாசப்பைகள், தொண்டை இவைகளுக்கு இதமளிக்கின்றன. டாக்டர்கள் பெப்ஸை சிபாரிசு செய்கின்றனர். குழந்தைகளும், வயோதிகர்களும் உபயோகிக்கலாம். தீங்கு விளைவிக்கும் மருந்துகள் இதில் இல்லை.



**PEPS**

பெப்ஸ் தொண்டை மார்பு உபாதைகளுக்கு சமனமூட்டும் வில்லைகள்.

FPY-42-TAM

ஸோல் ஏஜண்டுகள் :

தாதா & கம்பெனி

86, நைனியப்ப நாயக்கன் தெரு

சென்னை - 3


இதைக் கேட்கக் கேட்க ரகுவுக்குத் தன்னை யாரோ சம்மட்டியால் ஓங்கி அடிப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

ரகு கைக்கடிகாரத்தைப் பார்த்தான். மணி பதினொன்றுக்கு மேல் ஆகி இருந்தது. ஒவ்வொரு நிமிடமும் ஒவ்வொரு யுகமாக அவனுக்கு நரக வேதனை அளித்தது. ரகுவுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. அப்படியே மனம் குழம்பி வண்டியில் ஏறி, தன் இடத்தில் அமர்ந்து விட்டான். ''ஜானகி! நீ அப்பொழுதே சொன்னாய்! உன் வாக்கை மீறி அந்தப் பணத்தைச் செலவழித்ததற்காக இவ்வளவு மனக் கஷ்டமா? ஜானகி! நான் ரொம்பப் பாவி. உன்னுடைய கடைசி முகத்தைப் பார்க்கக் கூட எனக்குக் கொடுத்து வைக்கவில்லை!'' என்று எண்ணி வருந்தினான். கண்களில் மெதுவாக நீர் துளித்தது.

கடைசியில் ஒருமாதிரி மாலை நாலு மணிக்கு வண்டி அந்த ஸ்டேஷனை விட்டுக் கிளம்பியது. ஆனால் சென்னையை நோக்கி அல்ல; கல்கத்தாவை நோக்கி-வந்த வழியே பின்னோக்கிச் சென்றது! சாதாரணமாகக் கல்கத்தாவிலிருந்து மதராஸ் மெயில் புறப்பட்டால், அதற்கு அடுத்தாற்போல் கரக்பூரில் நிற்கும். பிறகு அடுத்த ஜங்ஷன் பலாசோரில்தான் நிற்கும். கரக்பூரிலிருந்து பலாசோர் செல்ல இரண்டு மணி நேரமே பிடிக்கும். அதே மைல்களை இன்று கடக்க எவ்வளவு நேரம் பிடித்தது! இரவு கிட்டத்தட்ட ஒன்பது மணிக்கு ரயில் கரக்பூரை அடைந்தது.

ரகு வண்டியை விட்டு இறங்கினான். அவனுடைய அவசரம் அவனுக்கல்லவா தெரியும்? ஒரு பெரிய ஸ்டேஷன் அதிகாரியிடம் போய், ''எப்பொழுது ஸார் இந்த வண்டி திரும்பியும் சென்னைக்குக் கிளம்பும்?'' என்று மெதுவாக விசாரித்தான்.

அந்த மேலதிகாரி என்னவோ, ஓர் அதிசயப் பிராணியைப் பார்ப்பதுபோல் பார்த்து விட்டு, ''பலாசோரிலிருந்து இவ்வளவு கஷ்டப்பட்டு இப்பொழுதுதான் வண்டி இங்கே ஜாக்கிரதையாக வந்திருக்கிறது. இங்கே யிருந்து இன்று ராத்திரி வண்டி கிளம்பாது. நாளைக்குத்தான் கிளம்பும். அதுவும் எப்பொழுது, எந்த வழியாகச் செல்லும் என்று நிச்சயமாகத் தெரியாது!'' என்று கூறினார்.

ரகுவுக்கு அந்தப் பதிலைக் கேட்டதும், அடியோடு நம்பிக்கை போய் விட்டது.

கடைசியில் மதராஸ் மெயிலுக்கு விமோசனம் ஏற்பட்டது. வண்டி மாலை ஐந்து மணிக்கு மேல் புறப்பட்டு, பலாசோர் வழியாகச் செல்லாமல், வேறு மார்க்கமான டாடா நகர் வழியாகச் சென்றது. ''இந்த வண்டி எப்பொழுது வேண்டுமானாலும் மதராஸ் போகட்டும். என் ஜானகி போன பிறகு நான் எப்பொழுது சென்னை போனால் என்ன?'' என்று ரகுவுக்கு விரக்தியாக இருந்தது. ஆனால் எவ்வளவோ தடங்கல்களினால், பலபல இடங்களில் நின்று ஆடி அசைந்து கொண்டு வண்டி மூன்று நாட்களுக்குப் பிறகு இரவு ஒன்பது மணிக்குச் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனை அடைந்தது. இதுவரையில் இருந்த மனக் குழப்பமெல்லாம் ஒன்று சேர்ந்து, அவன் உடம்பில் ஒரு விதப் படபடப்பு ஏற்

பட்டது. ஒரு ஆட்டோ ரிக்ஷாவைப் பிடித்துக் கொண்டு வீட்டை அடைந்தான். வீட்டு வாசலில் இருந்து கொண்டு யாராவது துக்க சமாசாரம் சொல்வார்களோ என்று பயந்தான். ஒருவரையும் காணவில்லை. வாசல் வெறிச்சோடிக் கிடந்தது. அவனுக்கு மனத்தைக் கலக்கியது. நடுங்கும் கால்களுடன் உள்ளே சென்றான். ஹாலில் பெட்டி, படுக்கையை வைத்தான். ஹாலில் ஒருவரையும் காணவில்லை. ஹாலில் ஜானகி இல்லாத ரகுவுக்குத் 'திக்' என்று இருந்தது. "ஐயோ! அந்த அறையிலாவது ஜானகி இருக்க வேண்டுமே!" என்று எண்ணி ஹாலின் ஒரு மூலையில் இருந்த அறைக்குச் சென்றான்.

அந்த அறையில் உடம்பெல்லாம் வெளுத்துப் போய், முகம் 'ஜிவ்ஜிவ்' என்று சிவந்து கண் துவண்டு கட்டிலில் படுத்திருந்த ஜானகியைப் பார்த்தான். தன்னை மறந்து, "ஜானகி!" என வாய் விட்டு அலறிக் கொண்டே கட்டிலுக்கு அருகில் ஓடினான் ரகு.

சிறிது நேரம்வரை ரகு சிறு குழந்தைபோல் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தான். இரண்டு நாட்களாக அவன் பட்ட மன வேதனையும், உடல் வேதனையும் அத்துடன் சேர்ந்து கொண்டன.

ஆனால் ஜானகியோ ரகு வந்ததைக்கூட அறியாமல் தன் நினைவு இழந்து படுத்துக் கொண்டிருந்தாள். ரகுவுக்கு "ஜானகி பிழைப்பாள்!" என்று இதுவரையில் இருந்த சிறு நம்பிக்கையும் இப்பொழுது பறந்து போய் விட்டது.

பிறகு ஜானகியின் தந்தையை நோக்கி, "ஜானகிக்கு எதனால் இப்படி உடம்புக்கு வந்தது? டாக்டர் என்ன சொல்கிறார்?" என்று கேட்டான் ரகு வறட்சியான குரலில்.

"ராதாவினுடைய கல்யாணத்தில் ஜானகி தன் சக்திக்கு மீறி அதிகமாக அலைந்து விட்டாள். ஒரு வாரத்துக்கு முன்னால் ஒரு நாள் காலையில் கண்கள் எரிகிறது, உடம்பு அலுப்பாக இருக்கிறது என்று படுக்கையில் படுத்தாள். முதலில் சாதாரண ஜுரமாக இருந்தது. விஷம் ஏறுவதுபோல் ஏறிக் கடைசியில் ஜன்னி பிறந்து விட்டது. டாக்டர் வந்து பார்த்தார். என்ன காரணம் என்று அவருக்கே புரியவில்லை. 'இன்று இரவு தாண்டின பிறகுதான் சொல்லலாம். ஒன்றும் நிச்சயமாகச் சொல்ல முடியாது. மதில் மேல் பூனை போல்தான்!' என்று கூறி விட்டார். ஏழு மணிக்கு வந்து ஊசி போட்டார். திரும்பவும் டாக்டர் பத்து மணிக்கு வருவார்!" என்று வருத்தம் தோய்ந்த குரலில் கூறினார் ஜானகியின் தந்தை.

ரகு ஜானகியின் முகத்தைப் பார்த்தவாறு உட்கார்ந் திருந்தான். ஏதோ மூச்சு ஒரு மயிரிழையில் ஓடிக்கொண்டிருந்தது. அதே போல் ரகுவுக்கும் ஜானகி பிழைத்து எழுந்திருப்பது பற்றி மயிரிழை நம்பிக்கைதான் இருந்தது.

"ஜானகி! நீ சொன்ன வார்த்தையை நான் கேட்டிருந்தால் இந்த விபரீதமே நடந்திருக்காது. உண்மையில் ஏழுமலையான் நீ சொன்னது போல் பொல்லாதவர்தான். அவருடன் நான் விளையாடியது தப்பிதம்தான். அதை எல்லாம் இப்பொழுது எண்ணி என்ன


# உங்கள் நரம்புகள்!

வலுவுள்ளதாக உறுதியுடன் இருக்க வேண்டும் — அதுவும் ஓய்வில்லாத உழைப்பும் ஒழியாத கவலையும் நிறைந்த தற்கால வாழ்க்கையில்

# அஸ்வான்

நீண்ட காலமாய் மனோ பலமும் தேக திடனும் வியர்த்தமாகியிருந்தாலும் ஈடு கொடுத்து போஷாக்கு அளிக்கக் கூடிய ஒரு உயர்ந்த டானிக்

**இன்றே ஒரு பாட்டில் வாங்குங்கள். எப்போதும் கைவிருப்பாக வைத்திருங்கள்**




**சிறியோர்**

•

**முதியோர்**

•

**நோயாளிகள்**

**யாவருக்கும்**

**உகந்தது**

# பெங்கால் கெமிகல்

**கல்கத்தா : பம்பாய் : கான்பூர்**

•

சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்

**ஆர். எல். கௌடர் & கோ.**

**59, பந்தர் தெரு - சென்னை**

ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்

**சத்ய நாராயண பார்மஸி**

**குமரி தெரு, விஜயவாடா-1 & விஜயநகரம்**

பயன்? கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் செய்வது போல்தான்!''

இந்தச் சமயத்தில் அடுத்த வீட்டிலிருந்து காமுப்பாட்டி ஜானகியைப் பார்க்க வந்தாள். ''மங்களம்! எனக்கு என்னவோ இது தெய்வ குற்றம் மாதிரி படுகிறது. டாக்டர் மருந்து கொடுப்பது ஒருபுறம் இருக்கட்டும். 'ஜானகி பிழைத்து எழுந்தால் பெண்ணையும் மாப்பிள்ளையையும் திருப்பதிக்கு அழைத்துக் கொண்டு வந்து, ஒரு கருடசேவை செய்து வைக்கிறேன்!' என்று ஏழுமலையானை நினைத்து வேண்டிக் கொண்டு, மஞ்சள் துணியில் ஒரு ரூபாயை வேண்டுமானால் உன் மாப்பிள்ளை கையால் முடிந்து வைக்கச் சொல்லேன், பார்க்கலாம்!'' என்றாள்.

''சரி, பாட்டி!'' என்று கண்களைத் துடைத்துக் கொண்ட அவள் ரகுவிடம் விஷயத்தைக் கூறினாள். ரகுவும் மனப்பூர்வமாக வேண்டிக் கொண்டு முடிந்து வைத்தான். அத்துடன், ''உன் பணத்திலிருந்து எடுத்த நாற்பது ரூபாயுடன் இன்னும் நாற்பது ரூபாய் வட்டியாகச் சேர்த்து உன் உண்டியலில் சேர்த்து விடுகிறேன். என் ஜானகியைக் காப்பாற்றி விடு!'' என்று மனம் உருக வேண்டிக் கொண்டான்.

ரகுவுக்கு ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு யுகமாகச் சென்றது. டாக்டரும் பன்னிரண்டு மணி வரை இருந்து ஏதோ இன்செக்ஷன் செய்தவண்ணம் இருந்தார். பிறகு 'மிக்ஸர்' ஒன்றைக் கொடுத்துவிட்டு, 'ஒரு மணிக்கு ஒரு முறை இதைக் கொடுங்கள்' என்று கூறிச் சென்றார். ரகுதான் ஜானகி அருகில் உட்கார்ந்து, இரவு முழுவதும் கண் விழித்து, பலாத்காரமாக அவள் வாயைத் திறந்து மணிக்கு மணி மருந்து கொடுத்துக் கொண்டிருந்தான்.

விடியற்காலத்தின் குளிர்ந்த காற்று ஜில்லென்று உள்ளே வீசியது. ஜானகியின் தந்தை டாக்டரின் வீட்டுக்குச் சென்று நிலைமையைச் சொல்லி டாக்டரை அழைத்துக் கொண்டு வந்தார். ரகு டாக்டரைப் பார்த்தான். டாக்டரின் முகத்தைப் பார்த்து ஒரு முடிவுக்கும் வரவில்லை. மறுமுறை ஒரு ஊசியை ஏற்றினார். அப்பொழுதுதான் அந்த ஆச்சரியம் நிகழ்ந்தது. டாக்டருடைய மருந்தினாலோ, அல்லது குளிர்ந்த காற்றினாலோ தெய்வ அருளினாலோ ஜானகியின் முகத்தில் மாறுதல் ஏற்பட்டது. மெதுவாகக் கண்களைத் திறந்தாள். தன்னைச் சுற்றி எல்லோரையும் ஒரு முறை பார்த்தாள். ரகுவைக் கண்டதும் அவள் முகத்தில் இலேசாக மகிழ்ச்சி ரேகை ஓடியது.

முதலில் டாக்டருடைய முகமே அதைப் பார்த்தும் பிரகாசமடைந்தது. எல்லோருக்கும் மகிழ்ச்சி கட்டுக்கு அடங்கவில்லை. வாசல் வரையில் அவரைப் பின்தொடர்ந்த ரகுவினிடமும், அவன் மாமனாரிடமும் அவர் சொன்னார். ''என்னுடைய மருந்தினால் ஜானகிக்கு உடம்பு குணமாகியது என்று நான் சொல்லமாட்டேன். ஏதோ 'அவனுடைய' அருளால்தான் அவள் கண் திறந்திருக்கிறாள். அது நான் கை கழுவிவிட்ட கேஸ். இனிமேல் பயம் ஒன்றுமில்லை. இந்த மிக்ஸரையே விடாமல் கொடுங்கள்!'' என்று கூறிச் சென்றுவிட்டார்.

இதைக் கேட்ட ரகு தன் நன்றியைக் கடவுளுக்கு எவ்விதம் தெரிவிப்பது என்றே தெரியாமல் நெஞ்சுருகித் தவித்தான்.

ரகு சென்னைக்கு வந்து பதினைந்து தினங்களுக்கு மேல் ஆகிவிட்டன. ஜானகியின் உடலிலும் இந்தப் பதினைந்து நாட்களில் நல்ல குணம் தெரிந்தது. அந்த நாட்களில் ரகு ஜானகியை விட்டு ஒரு கணம்கூட அகலவில்லை.

''ஜானகி! ஊரிலிருந்து வந்த அன்று உன்னைப் பார்த்ததும், நான் பயந்தேபோய் விட்டேன். உன் விருப்பத்துக்கு மாறாக நான் உண்டியிலிருந்து பணம் எடுத்ததும் போதும், இந்த இருபது நாட்களாக என் மனம் படும் பாடும் போதும். அதற்குத் தண்டனையாக உன்னையே என்னிடமிருந்து எடுத்துக் கொண்டு விடுவாரோ என்று துடித்துப் போய்விட்டேன். நல்ல வேளையாக அந்தப் பாட்டி வந்து ஏழுமலையானுக்குக் கருட சேவை செய்வதாக வேண்டிக் கொள்ளச் சொன்னாள். அதனால் தான் நீ பிழைத்து எழுந்தாய்!'' என்றான் உருக்கமான குரலில்.

''எந்தப் பணத்தைச் சொல்கிறீர்கள்?'' என்றாள் ஜானகி யோசனை செய்தவாறு.

''என்ன, ஜானகி! நீயே மறந்துவிட்டாயா? சரிதான் போ!'' என்று ஆச்சரியத்துடன் கேட்டு விட்டு, ''அதுதான்; ஏழுமலையான் உண்டியிலிருந்து எடுத்து ராதாவுக்கு விவாகப் பரிசு அளிக்க நாற்பது ரூபாய் கொடுத்தேனே, அதைத்தான் சொல்கிறேன்!'' என்றான்.

''நான் அந்தப் பணத்தைச் செலவழிக்கவே இல்லை! என் கையில் உள்ள நெளி மோதிரம் மாதிரி வேண்டு மென்று ராதா ஆசைப்பட்டாள். அதனால் அதையே புது மெருகு கொடுத்து விவாகப் பரிசாக அவளுக்குக் கொடுத்து விட்டேன்!'' என்றாள் சர்வ சாதாரணமாக.

''என்ன ஜானகி இது? தெரியாமல் 'அவர்' பணத்தை எடுத்துச் செலவழித்ததால்தான் உனக்கு உடம்புக்கு வந்தது. நான் வந்த ரயிலிலும் தடங்கல் ஏற்பட்டது என்று எண்ணி நான் பட்டபாடு எனக்கும் அவருக்கும் தான் தெரியும்!'' என்று கூறிப் பெருமூச்சு விட்டான் ரகு.

ஜானகி இலேசாகச் சிரித்துவிட்டு, ''என்ன! கடவுளையும் மனிதனையும் ஒன்றாக எண்ணி விட்டீர்களா? மனிதன் தான் ஒரு காரியம் சிறு தவறுதலாக நடந்து விட்டாலும் அதையே பெரிதாக எண்ணிப் பழிக்குப் பழி வாங்கத் துடித்துக் கொண்டிருப்பான். கடவுளோ கருணைக் கடல்! மனிதன் ஒரே ஆனந்தத்தில் இருந்தால் கடவுளையே மறந்து விடுகிறான். அதனால் அவனுக்குக் கஷ்டம் கொடுப்பதுபோல் காண்பித்து, தான் ஒருவர் இருப்பதை நினைவுபடுத்துகிறார்!'' என்றாள்.

''ஜானகி! நீ பெரிய வேதாந்தி ஆகி விடுவாய்போலிருக்கிறது!'' என்று கேலியாகக் கூறி விட்டு, ''நாம் கல்கத்தாவுக்குச் செல்வதற்கு முன்னால் திருப்பதி போய் விட்டு வந்துவிட வேண்டும்!'' என்றான் ரகு பக்தி சிரத்தையுடன். ஜானகிக்குத் திருப்பதியை நினைக்கும்பொழுதே உடம்பு சிலிர்த்தது.

அதை ஆமோதிப்பதுபோல் தூரத்தே இருந்த கோவில் மணி மங்களகரமாக இனிமையுடன் 'டாண், டாண்' என ஒலித்தது.

# திருட இயலாத குடும்ப சைஸ் பாக்கில்

# 'அனஸின்'

## வாங்குங்கள்

'அனஸின்' 32 வில்லைகள் கொண்ட டப்பா ஒவ்வொரு முறையும் நீங்கள் வாங்கும்பொழுது 4 அணாக்கள் மிச்சமாகின்றன. அனஸினை எப்பொழுதும் கையோடு வைத்துக்கொள்ளும் குடும்பங்களுக்காகவே இந்த டப்பாவை பிரத்தியேகமான முறையில் அமைத்திருக்கிறோம். அனஸினை அவர்கள் சதா வைத்திருப்பதற்கு காரணம் அதில் வலி நிவாரணத்தை விரைவில் அளிக்கும் 4 மருந்துகள் அடங்கியிருப்பதே:

1. கொயினா : ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின் : பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின் : ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட் : தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினில் அடங்கியிருக்கும் இந்த நான்கு மருந்துகள் நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து, பத்திரமாகவும், நிச்சயமாய், விரைவில் நிவாரணமும், தலைவலி, ஜுரம், ஜலதோஷம், பல்வலி மற்றும் தசை நார்களில் நோவு முதலியவற்றை போக்குகின்றது.




அனஸின்' 2 …
லைகள் கொண்…
பாக்கெட்டுகளி…
கிடைக்கும்.

எப்பொழுதும் **அனஸின்** வில்லைகள் வேண்டுமென்றே கேளுங்கள்

A.

# ஏன் இந்தக் கொடுமை?

சா. ரா.

இரவு பத்து மணி ஆகி விட்டதைக் குறிக்கக் கடிகாரம் பத்து முறை அடித்து விட்டு, 'டிக் டிக்' என்று தன் வேலையைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தது. ஏழு மணிக்கே 'சாப்பாட்டுக் கடையை' முடித்துக் கொண்டு, படுக்கச் சென்றும் எனக்குத் தூக்கம் வரவில்லை. என் கணவரும் ஊரில் இல்லை; வேலை சம்பந்தமாக வெளியூர் சென்றிருந்தார். தன்னந்தனியே விழித்திருப்பதே சற்றுப் பயமாயிருந்தது. அத்துடன் வெளியே இயற்கை வேறு கோர தாண்டவம் புரிந்து கொண்டிருந்தது. பலமான மழை இடைவிடாமல் பெய்தவண்ண மிருந்தது. இடையிடையே இடியும் மின்னலும் கண்களைப் பறித்து, காதுகளைச் செவிடாக்கி விடுவதைப் போல் தங்கள் வேலைத்தனத்தைக் காட்டின.

உள்ளேயோ மூட்டைப் பூச்சிகளின் உபத்திரவம். தூக்கம் எப்படி வரும்? சிறிது நேரம் மூட்டைப் பூச்சிகளுடன் போராடினேன். ராமாயணத்தில் வரும் 'மூல பலம்' போல் எவ்வளவு 'மூட்டை'களைக் கொன்றாலும், அவை மேலும் மேலும் வந்து கொண்டேயிருந்தன. கடைசியில் படுக்கையைச் சுற்றி வைத்து விட்டு, வெறும் தரையில் ஒரு துணியை விரித்து, தலைக்கு ஒரு மணையை வைத்துப் படுத்தேன். தூக்கம் சற்று வர ஆரம்பித்த சமயம்.



'தடார்!' என்று எங்கேயோ கதவு திறக்கப்படும் ஓசை; அதைத் தொடர்ந்து 'தப் திப்' பென்று யாரையோ அடிக்கும் சத்தம்; கூடவே, "போ, வெளியே! நீ உள்ளே வரத் தேவையில்லை" என்ற கூச்சலிடும் குரல்ஒலி! குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தேன். எதிர்த்த அறையிலிருந்த ஜகந்நாதன் குரல் அல்லவா அது? யாரை இந்த வேளையில் அடித்துத் துரத்துகிறார்? ஜன்னலை மட்டும் திறந்து பார்த்தேன். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. என்ன அநியாயம்! தம் மனைவியை — என் ஆருயிர்ச் சிநேகிதி —மீனாக்ஷியை அல்லவா அடிக்கிறார்? உள்ளே வரக் கூடாது என்று கூறிக் கதவையு மல்லவா சாத்திக் கொள்ளப் போகிறார்?

அவர் கதவைச் சாத்து முன், மீனாக்ஷி உள்ளே போக முயன்றாள். ஆனால் அவர் அவளை விடாமல் கைகளைப் பற்றிக் கர கர வென்று மறுபடியும் வெளியே கொண்டு போய்நிறுத்தினார். "மரியாதையாக வெளியே போய் விடு. உள்ளே வராதே. வந்தாயோ கொலை விழுந்து விடும்" என்று கத்தினார்.

அதற்குள் கதவருகே வந்த அவருடைய அக்கா மீனாக்ஷியைப் பார்த்து, "ஏன் அம்மா! அவன்தான் கோபக்காரன் என்று தெரியுமே, நீ தான் கொஞ்சம் விட்டுக் கொடுத்தால் என்ன?" என்றாள்.

மீனாக்ஷி வாயையே திறக்கவில்லை. தலையைக் குனிந்தபடி நின்றாள், கொட்டும் மழையில். ஜகந்நாதன் தன் அக்காவை நோக்கி, "நீ உள்ளே போ, அக்கா! இவளுக்கு ரொம்பத் துளிர்த்து விட்டது. இனியும் சும்மாயிருந்தால் சரிப்படாது. போனால் போகட்டுமென்று பணம், காசு, செலவு வைக்காமல் இவளைக் கல்யாணம் செய்து கொண்டது என்னுடைய தப்பு!" என்றார்.

அவருடைய அக்கா உள்ளே போகவில்லை. மீனாக்ஷியையும் உள்ளே அழைத்துச் செல்லவில்லை. "அதை இப்போது சொல்லி என்னடா பிரயோசனம்? நான் அப்பொழுதே முட்டிக் கொண்டேன். நீதான் ஒரே அவசரமாய், ஒற்றைக் காலில் நின்று கல்யாணம் செய்து கொண்டாய்...ஹூம்! அதற்காக வாசலில் வந்து ஏன் கூச்சல் போடுகிறாய்? நாலு பேர்கள் கேட்டுச் சிரிக்கப் போகிறார்கள். பேசாமல் உள்ளே வா!" என்றாள் தம்பியிடம்.

அவர் உள்ளே போனார். கதவு சாத்தப் படாததால் மீனாக்ஷியும் உள்ளே நுழைந்தாள். உள்ளே நடந்ததெல்லாம் எனக்கு நன்றாகத் தெரிந்தது.

உள்ளே வந்த மீனாக்ஷியிடம், "ஏன் மறுபடியும் வந்தாய்? நான்தான் வரக்கூடாது என்றேனே!" என்று சொல்லிக்கொண்டே அவள் முதுகில் ஒரு குத்து வைத்தார் ஜகந்நாதன். அந்த வேகத்தில் அவள் அப்படியே உட்கார்ந்து விட்டாள். நான் பயத்துடன் சற்றுக் கண்களை மூடிக்கொண்டேன். மறுபடியும் நான் கண்களைத் திறந்து பார்த்தபோது அவர் அவளை வெளியே இழுத்துச் செல்ல முயன்று கொண்டிருந்தார். அவருடைய அக்காவுக்கு அப்பொழுதுதான் கருணைபிறந்ததோ என்னமோ! "விடுடா, போதும்! அவள்தான் சிறியவள்,

ஏதோ பிடிவாதம் பிடித்தாள் என்றால், நீயும் பிரமாதப்படுத்துகிறாயே ... பத்து மணிக்கு மேலாகிறது. அவள் போய் நாளைக்குச் சிராத்தத்துக்கு ஆகவேண்டிய காரியங்களைப் பார்க்கட்டும்!'' என்றாள்.

''இவள் இல்லாவிட்டால் சிராத்தம் நடக்காதோ? அல்லது சிராத்த காரியத்துக்காக இவளைக் கல்யாணம் செய்து கொண்டேனா? நாய் போகட்டும் வெளியே !'' என்று இரைந்தார் ஜகந்நாதன்.

'' சரிதான் விடு! நான்தான் சொன்னேனே! இனி அவள் ஒழுங்காயிருப்பாள். மீனா! நீ சமையல் அறைக்குள் போய் விடு !'' என்றாள்.

மீனாக்ஷி எழுந்து சமையலறைக்குப் போகப் போனாள். அவர் மறுபடியும் குறுக்கிட்டார். ஆனால் அவர் அக்கா எழுந்து வந்து அவர் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''போதும் இந்த ரகளை. வெளியார் யாராவது பார்த்து, நான்தான் ஏதோ உங்களுக்குள் சண்டையைக் கிளப்பி விட்டதாகச் சொல்வார்கள். எனக்கு ஏன் இந்த வம்பு ! நாளைக்குச் சிராத்தம் ஆனதும் போய் விடுகிறேன். பிறகு எப்படியாவது மண்டையை உடைத்துக் கொள்ளுங்கள்'' என்றாள்.

பிறகு அந்த வீட்டில் சத்தம் அடங்கி விட்டது. அவர் வாசல் கதவையும் சாத்திக் கொண்டு போனார். வெளியிலும் மழை, இடி, மின்னல் யாவும் ஓய்ந்து விட்டன.




ஆனால் என் மனத்தில்தான் பெரும் புயல் வீசத் தொடங்கி விட்டது.

* * *

**நா**னும் மீனாக்ஷியும் முதல் வகுப்பிலிருந்து ஒன்றாகப் படித்தோம். அவள் மூன்றாவது பாரத்தோடு நிறுத்தி விட்டாள். அவர்கள் சக்திக்கு அதற்குமேல் படிக்கவைக்க முடியவில்லையோ, அல்லது அதுவே போதும் என்று எண்ணினார்களோ தெரியவில்லை. பள்ளிக்கூடத்திலிருந்து நின்றாலும் என் சிநேகிதத்தை அவள் விடவில்லை. நானும் அவளை விடவில்லை. எங்கள் வீட்டுக்குச் சமீபத்தில்தான் அவர்கள் வசித்து வந்தார்கள். ஆகவே அடிக்கடி சந்தித்து அளவளாவுவோம்.

பள்ளிப் படிப்பு முடிந்ததும் எனக்குக் கல்யாணம் ஆயிற்று. திருமணமான மூன்றாம் மாதமே என் கணவர் என்னை அழைத்து வந்துவிட்டார். திருவல்லிக்கேணியில் ஒரு பெரிய வீட்டு மாடியில் நாங்கள் இரண்டு அறைகள் வைத்துக் கொண்டிருந்தோம். ஒண்டுக் குடித்தனம்தான் என்றாலும் மற்றக் குடித்தனக்காரர்களுக்கும் எங்களுக்கும் சம்பந்தம் இன்றி இருக்க வசதியாயிருந்தது.

நான் ஊரை விட்டு வந்ததில், பாவம், மீனாக்ஷிக்குத்தான் அதிக வருத்தம். ''சரசு! நீயும் உன் கணவருடன் போகப் போகிறாய். இனி எனக்கு எப்படிப் பொழுது போகப் போகிறதோ?'' என்று நான் சென்னைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த அன்று என்னிடம் கண்ணீர் விட்டாள்.

''மீனாக்ஷி! நீ ஏன் வருத்தப்படுகிறாய்? உனக்கும் நல்ல இடத்தில் கல்யாணம் நடக்கும். நீயும் கணவனுடன் போக வேண்டியவள் தானே!'' என்று உற்சாகப்படுத்தினேன்.

அவள் பெருமூச்சு விட்டுக் கொண்டே, ''ஹூம்! எனக்கு யார் வரப் போகிறார்களோ? இரண்டாம் தாரமோ, மூன்றாம்



லோக சபையின் சபாநாயகர் ஸ்ரீ எம். அனந்தசயனம் ஐயங்கார் சென்னை எழும்பூரில் உள்ள வேத சபைக்கு விஜயம் செய்து, ''வேதங்களின் மகிமை'' என்பது பற்றி ஓர் அரிய பிரசங்கம் செய்தார். அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்ட சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கடராமய்யர், ஸ்ரீ கே. எஸ். ராமசாமி சாஸ்திரி, ஸ்ரீ வி. பாஷ்யம் ஐயங்கார், ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய ஐயர் முதலிய பிரமுகர்களைப் படத்தில் காணலாம்.

தாரமோ!'' என்றாள். என்றால் அவளுக்கு வேறு விதமான ஆறுதல் சொல்ல முடியவில்லை. அவர்களுடைய ஏழைமை நிலைமையைக் குறித்தே அவள் வருந்தினாள்.

''சரி, மீனாக்ஷி! நான் வருகிறேன். கல்யாணக் கடிதம் போடு. கட்டாயம் வருகிறேன்'' என்று கூறி விட்டு வந்தேன். அவள் கல்யாணக் கடிதம் போடவில்லை. சாதாரணக் கடிதமும் எழுதவில்லை. அதற்குப் பதிலாக என் அருகிலேயே வந்து விட்டாள்!

ஒரு நாள்மாலை நான் என் கணவரின் வருகையை எதிர் நோக்கி எங்கள் அறையின் வாசலில் நின்று கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு ஜட்கா வண்டிக்காரன் ஒரு பெட்டியையும் படுக்கையையும் கொண்டு வந்து, பூட்டியிருந்த எதிர்த்த அறையின் கதவருகே வைத்தான். அவனைத் தொடர்ந்து இன்னொரு சிறு பையன் சாமான்கள் நிறைந்த ஒரு கோணிப் பையைக் கொண்டு வந்தான். அடுத்த விநாடி கையில் கூஜாவுடன் எதிர்த்த வீட்டுக்காரரைப் பின்பற்றி மீனாக்ஷி வந்தாள். அவளுக்குப் பின் சில சாமான்களுடன் அவளுடைய தந்தை வந்தார். எனக்கு விஷயம் சிறிது விளங்கியது.

அவளுக்கு விவாகம் ஆகியிருக்கிறது. எதிர்த்த அறைக்காரர்தான் அவளைக் கைப் பிடித்து மணந்திருக்கிறார்.

இதற்குள் என்னைப் பார்த்துவிட்ட மீனாக்ஷி, ''சரசு! நீ இங்கேயா இருக்கிறாய்?'' என்று ஓடி வந்தாள். நானும், ''மீனு!'' என்று அவளை வரவேற்று அணைத்துக் கொண்டேன்.

கதவைத் திறந்து விட்டுத் திரும்பிய அவள் கணவர், ''மீனாக்ஷி!'' என்று கூப்பிட்டார். நான் சமாளித்துக் கொண்டு, ''கொஞ்சம் இரு!'' என்று கூறி உள்ளே சென்று ஆரத்தி கரைத்து வந்தேன். தைரியத்தை யெல்லாம் வரவழைத்துக் கொண்டு, ''இரண்டு பேருமாகச் சற்றுச் சேர்ந்து நில்லுங்கள். புதிதாக விவாகமாகி வருகிறீர்கள். ஆரத்தியில்லாமல் உள்ளே போக வேண்டாம்'' என்று கூறி, ஆரத்தி எடுத்தேன். மீனாக்ஷியின் கணவர் வியப்புடன் என்னை நோக்கினார்.

மீனாக்ஷி புன்னகை புரிந்தபடியே தன் கணவரிடம், ''நாங்கள் இருவரும் உயிர்த் தோழிகள். எங்களூரில் நாங்கள் ஒன்றாய்ப் படித்தோம்'' என்றாள்.

அப்பொழுது என் கணவரும் வந்து விட்டார். மீனாக்ஷியின் கணவரைப் பார்த்து, ''என்ன ஜகந்நாதா! காதும் காதும் வைத்தாற் போல் திருமணம் செய்து கொண்டு வந்துவிட்டாயா? பேஷ்!'' என்று கூறிச் சிரித்தார். அனைவரும் அதில் கலந்து கொண்டோம்.

அன்றிரவு என் கணவர் ஜகந்நாதனைப் பற்றிச் சில தகவல்களை எனக்குச் சொன்னார். தன் அக்காவின் பெண்ணைத்தான் அவர் விவாகம் செய்து கொண்டாராம். ஏழெட்டு மாதங்களுக்கு முன் அவள் காலமாகி விட்டாளாம். அவருக்கு வயது முப்பத்தி ஏழு, முப்பத்தி எட்டு ஆகியிருந்தாலும் முதல் மனைவி மூலம் குழந்தைகள் இல்லையாம்.

மறுபடியும் அவர் விவாகம் செய்துகொள்ள விரும்பியதை அவருடைய உறவினர்கள் தடை செய்ய முயன்றனர். அவருடைய அக்காவான பட்டுவே அதை எதிர்த்து அவரிடம் சண்டையிட்டாள். ஆனால் அவர் யாரையும் லட்சியம் செய்யவில்லை.

''என் சிரமம் இவர்களுக்கு எப்படித் தெரியப் போகிறது? நான் தனி மரமாய் நிற்பது இவர்களுக்கு ஏன் படப் போகிறது?'' என்று கூறி ரகசியமாய் விவாகத்தை முடித்துக் கொண்டு வந்து விட்டார். இனி ஒருவரும் ஒன்றும் சொல்ல முடியாதல்லவா?''

''கடைசியில் மீனாக்ஷி இரண்டாந்தாரம் தானா?'' என்று நான் சிறிது வருத்தப்படத்தான் செய்தேன். நாளடைவில் அந்த வருத்தம் மறைந்தது. ஜகந்நாதன் அவளுக்கு எல்லாவிதமான சௌகரியங்களும் அளித்திருந்தார். 'இரண்டாம் தாரம்' என்று ஒருவரும் சொல்ல முடியாதபடி அவர்கள் வாழ்க்கை அமைந்திருந்தது. சினிமா என்ன, பாட்டுக் கச்சேரி என்ன, நாடகம், கோயில், கடற்கரை என்று 'ஜோடி'யாக இருவரும் போய் வந்தார்கள்.

தன் பழைய சிநேகிதத்தை மறக்காமல் மீனாக்ஷி என்னிடம் மிகவும் ஒட்டுதலாயிருந்தாள். ஆனால் அவர்கள் குடித்தனம் தொடங்கி நான்கு மாதங்கள் வரை அவருடைய மனிதர்கள் என்று ஒருவரும் அவர்களை வந்து பார்க்கவில்லை. இரண்டு நாட்களுக்கு முன் அவருடைய அக்கா வந்து சேர்ந்தாள். கூடவே புயலும், மழையும் வந்தன. அவர் அக்கா பட்டு வந்த பின் மீனாக்ஷி என்னைப் பார்க்க வரவே யில்லை.

# உங்கள் கேசத்தை அதிக கருமையுடனும் பகட்டுடனும் வைக்க குளிர்ச்சியான வெண்ணிற ப்ரீல்க்ரீம் உபயோகியுங்கள்



கீர்த்திபெற்ற மற்றவர்களைப்போல் விநு மான்காடும் ப்ரீல்க்ரீம் உபயோகிக்கிறார்

BRYLCREEM

* ப்ரீல்க்ரீமின் சுத்தமான க்ரீமாக்கப்பட்ட எண்ணெய்கள் உங்கள் கேசத்தின் இயற்கை கருமை நிறத்தை சோபிக்கச் செய்கின்றன. சுத்தமான வெண்ணிற ப்ரீல்க்ரீமை உங்கள் தலையில் தினந்தோறும் அழுத்தித் தேயுங்கள். பொடுகுகள் ஏற்படுவதை இது தடுத்து உங்கள் கேசத்தை சுத்தமாயும் ஆரோக்கியத்துடனும் வைக்கிறது.

* சிறிதளவு ப்ரீல்க்ரீம் நீடித்த உபயோகத்திற்கு வருகிறது! இன்றே ஒரு ப்ரீல்க்ரீம் ஜாடியை வாங்கி எவ்வளவு காலம் அது நீடித்த உபயோகத்திற்கு வருகிறதென்று பாருங்கள்.

வாழ்க்கையில் வெற்றிபெற்றவர்கள்

# ப்ரீல்க்ரீம் BRYLCREEM

உபயோகிக்கிறார்கள்

BRL. 2968 (a) Tam.

'நாளைக்கு அவருடைய முதல் மனைவியின் சிராத்த தினமா யிருக்கும். அதுதான் அவருடைய அக்கா வந்திருக்கிறாள். இறந்து போனவளின் நினைவு மனுஷருக்கு வந்து விட்டதோ? அல்லது அக்காதான் ஏதாவது வத்தி வைத்து விட்டாளோ? நான்கு மாதங்களாக ஒரு தகராறும் இல்லாமல் இன்று மட்டும் ஏன் இந்த மாறுதல்?....சட்! இப்படியா மனைவியை அடிப்பது? சற்றும் இரக்கமில்லாமல் மழையில் வெளியே தள்ளிக் கதவைத் தாளிடுவது? இப்படியும் ஒரு மனித ஜன்மமா....?' என்று என் மனம் என் சிநேகிதிக்காக—ஒரு ஆதரவற்ற பெண்ணுக்காக—கொந்தளித்தது.

அவளுக்கும் நல்வாழ்வு ஏற்பட்டது என்று பெருமைப்பட்டுக் கொண்டிருந்தேனே, அதற்குக் கேடு வந்து விட்டதா?

அன்று இரவு வெகு நேரம் வரையில் எனக்குத் தூக்கம் வரவில்லை. அவளுடைய பிற்காலத்தை எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தேன்.

*

அடுத்த இரண்டு நாட்களும் மீனாக்ஷியை என்னால் சந்திக்க முடியவில்லை. மூன்றாம் நாள் காலைதான் ஜகந்நாதனின் அக்கா ஊருக்குக் கிளம்பினாள். அவள் இருந்தவரை ஒரே இடியும் புயலுமாக இருந்த வீடு, அவள் புறப்பட்டுச் சென்றவுடன் மறுபடியும் களையுடன் விளங்குவது போல் எனக்குத் தோன்றியது.

அக்காவை ரயிலேற்றி விட்டுத் திரும்பிய ஜகந்நாதனின் முகத்திலும் பழைய சிரிப்பு திரும்பியிருந்தது போல் காணப்பட்டது. மீனாக்ஷியுடன் எப்பொழுதும் போல் பேசினார். இருப்பினும் எனக்கு அவரிடம் ஏற்பட்ட வெறுப்பு சற்றும் குறைய வில்லை. மனைவியை—அதிலும் இரண்டாம் மனைவியை—மிருகம் போல் தாக்கக் கூடியவரும் மனிதர்தானா என்ற எண்ணமே மேலோங்கி நின்றது.

அன்று வழக்கம் போல் மீனாக்ஷி வந்தாள். என்னுடன் கலகலப்பாகப் பேசினாள். என்னால் தான் சரியாகப் பேச முடிய வில்லை. என் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்த விஷயத்தைப் பற்றி அவளிடம் கேட்க ஏனோ தயக்கமா யிருந்தது. அவளும் ஏதேதோ விஷயங்களைப் பற்றிப் பேசினாளே தவிர, தன் கணவரின் இரக்கமில்லாச் செய்கையைக் குறித்து ஒன்றுமே சொல்ல வில்லை.

அடுத்த இரண்டு நாட்களும் என்னால் அவளைக் கேட்க முடியவில்லை. ஆயினும் உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் அவளிடம் சகஜமாகப் பழக முடியவில்லை. பட்டு ஊருக்குப்போன நான்காம் நாள் துணிந்து அவளிடம் என் சந்தேகத்தைக் கேட்டு விட்டேன்.

"உன் மூத்தாளின் திதி நடந்ததே, அதற்கு முதல் நாளிரவு புயலும் மழையுமாய் இருந்ததே?..." என்று ஆரம்பித்தேன்.

"ஆமாம், அன்று சரியான மழைதான்!" என்றாள் அவள்.

"நான் வெளியில் பெய்த மழையைப் பற்றியோ, புயலைப் பற்றியோ கேட்கவில்லை. உங்கள் வீட்டில் நடந்ததைத்தான் கேட்கிறேன்" என்று சொல்லி நிறுத்தினேன்.

திடீரென்று அவள் 'இடி இடி' யென்று சிரிக்கத் தொடங்கி விட்டாள். அவளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா, என்ன?

"மீனா! இது என்ன, நான் ஏதோ கேட்டால் நீ சிரிக்கிறாயே?" என்று அவளைப் பிடித்துக் குலுக்கினேன். அவள் சிரிப்பை நிறுத்தவில்லை. சிரித்துச் சிரித்துக் கண்களில் நீர் வந்து விட்டது. பிறகு பேசினாள். "என் கணவர் என்னை அடித்து இம்சை செய்தாரே, அதைச் சொல்கிறாயா? அது சகஜம்தானே?" என்று கூறினாள்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. "என்ன அப்படிச் சொல்லி விட்டாய்? உன் கணவர் என்ன மனிதரா அல்லது மிரு...." நான் முடிக்கவில்லை. அவள் என் வாயை இறுகப் பொத்தினாள்.

"சரசு! அவசரப்படாதே. அவர் மிருகமில்லை. மாணிக்கம்!" என்றாள். என் வியப்பு அதிகரித்தது. அவள் விளக்கினாள்.

"அவருடைய அக்கா பெண்தான் அவருடைய முதல் மனைவி. அக்காவின் வற்புறுத்துதலுக்காகவே அவளைக் கல்யாணம் செய்து கொண்டு, ரொம்பக் கஷ்டப்பட்டாராம். மேலும் குழந்தையே பிறக்கவில்லையாம். அவள் இறந்தவுடன் அவர் இரண்டாம் விவாகம் செய்து கொள்ள முயன்றபோது அவருடைய உறவினர்கள் அதை எதிர்த்தார்களாம், முக்கியமாக அவருடைய அக்கா அவரைச் சபிக்காத குற்றமாம்! எப்படியோ துணிந்து அவர் என்னைக் கைப் பிடித்து மணந்து அழைத்து வந்து விட்டார்.

"வருஷாப்திகத்துக்கு எப்படியும் தன் அக்கா வருவாள் என்று அவருக்குத் தெரியும். தன் இன்ப வாழ்க்கையில் அவள் இடைஞ்சலாக இருக்கக் கூடாது என்றே அந்த நாடகத்துக்கு ஏற்பாடு செய்தார். அக்கா இருந்த நாலைந்து நாட்களும் என்னிடம் மிக்க கொடூரமாக நடப்பது போல் பாவனை செய்தார். எப்பொழுதும் முகத்தைச் 'சிடு சிடு' வென்று வைத்துக் கொண்டார். இதனால் அவர் எதிர்பார்த்தது போல் அவளுக்குத் திருப்தி ஏற்பட்டிருக்கும் அல்லவா? தன் பெண் வாழ்ந்த இடத்தில் இன்னொருத்தி இன்பமாக இருப்பதை அவள் பொறுப்பாளா? அதனால்தான் என்னைக் கொடுமைப் படுத்தினார், அவளுக்கு முன்பாக. மன நிறைவோடு அவர் அக்கா ஊருக்குப் போய் விட்டாள். நாங்கள் பழையபடி சந்தோஷமாயிருக்கிறோம்" என்று கூறி முடித்தாள்.

"நல்ல நாடகம்!" என்று அவள் முதுகில் தட்டிக் கொடுத்தேன். 'ஐயோ!' என்று முதுகைப் பிடித்துக் கொண்டாள்.

"என்ன?" என்று பதறிப் போய்க் கேட்டதற்கு, "நடுவில் ஒருமுறை மறந்துபோய்அவர் நிஜமாகவே ஓங்கிக் குத்தி விட்டார். அது இன்னும் வலிக்கிறது. ..ஆனால், பாவம்! அதற்காக ரொம்ப வருத்தப்படுவதுடன் தானே மருந்தும்...." என்று கூற வந்ததை முடிக்காமல், வெட்கத்துடன் தன் அறைக்கு ஓடி விட்டாள் மீனாக்ஷி.




ஆர்ஜெண்டா உங்களுடைய கண்களுக்கேற்றது. ஏனெனில் இந்த பல்புகள் உட்புறம் பூசப்பட்டுள்ளதால் வெண்மை நிறத்துடன் ஒரே பிரகாசமாக எரிந்து, கண்களுக்குக் கூசாத, மிருதுவான வெளிச்சத்தைத் தருகின்றன.

இன்றே ஒரு ஆர்ஜெண்டா வாங்கி அதன் வெளிச்சத்தில் வேலை செய்வதாலோ அல்லது ஓய்வு எடுத்து கொள்வதாலோ உள்ள சுகத்தைப் பெறுங்கள். இதனுடைய மிருதுவான வெளிச்சத்தின் சுகத்தை அனுபவித்த பிறகு நீங்கள் என்றும் ஆர்ஜெண்டாவையே வாங்குவீர்கள்.



# பிலிப்ஸ்
# ஆர்ஜெண்டா
## என்று கேளுங்கள்

கண்ணைக் கூசாத பல்பு





# பல்லாண்டு பாடின செடிகள்

வனதேவதை ஒரு பரிஷத்து கூட்டிற்று மரம், செடி, கொடி, பறவை, பூச்சி, மாடு மான் முதலிய எல்லா தாவர ஜங்கமப் பிராணி வகைகளின் பிரதிநிதிகளும் கூடின. சாது ஜந்துக்கள் தான் கூடின. புலி, கரடி முதலியவை இந்தப் பரிஷத்தில் சம்பந்தப்படவில்லை.

"உங்கள் சுகம் எப்படி?" என்று கேட்டது வனதேவதை.

எல்லாச் செடிகளும் கொடிகளும் பிராணி வகைகளும் தத்தம் நிலைமையைப் பற்றிப் பேசின.

பிராணிகளும் செடிகளும் நமக்குத்தான் ஊமை. அவை தங்களுடைய பரிஷத்தில் நன்றாகப் பேசும். நம்முடைய பேச்சும் வாதமும் மற்றப் பிராணிகளுக்குப் பொருளில்லாத கூச்சல் போல் தோன்றும். அப்படியே பூச்சிகளும் பறவைகளும் மரங்களும் கொடிகளும் பேசுவது நமக்கு ஒன்றும் தெரிவதில்லை. அவை பேசும் சத்தம் நமக்குக் கேட்பதில்லை. கேட்டாலும் புரிவதில்லை. மொத்தத்தில் பார்த்தால் அவையல்ல ஊமை, நாம்தான் செவிடு

"வாழ்க, பூச்சிகள்!" என்றன புஷ்பங்கள்.

"வாழ்க" "ஒழிக" என்கிற சத்தங்கள் மானுட அரசியல் கோஷங்களாக வழங்கி வருகின்றன. தாவரங்களிலும் அந்த வாழ்த்துக்களும் சாபங்களும் உண்டு.

"வந்து தேனைக் குடியுங்கள். பூவினின்று பூவுக்குத் தாவிச் செல்லுங்கள். எங்களுக்கு ஒரு தீங்கும் தொந்தரவுமின்றி எங்கள் வம்சத்தைப் பெருக்குங்கள். காதலின் ஆனந்தத்தை எங்களுக்குத் தரும் பூச்சிகளே! ஈக்களே! உங்களுக்குப் பல்லாண்டு சொல்லுகிறோம்" என்றன.

குழந்தைகளே! இதன் விவரம் தாவர வாத்தியாரைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். எப்படிப் பூச்சிகள் புஷ்பங்களுக்கு உதவுகின்றன என்பதை அவர் சொல்லுவார்.

* * *

"பறவைகளே! நீங்கள் பல்லாண்டு வாழ்வீர்களாக! குரங்குகளே! உங்களுக்கும் பல்லாண்டு!" என்றன காட்டு மரங்கள்.

"எங்கள் பழத்தைப் பொறுக்கித் தின்று நல்ல விதைகளைக் காட்டில் கொண்டு போய்ப் போடுங்கள். பழங்களைத் தின்று விதைகளை உங்கள் வயிற்றில் காப்பாற்றி நல்ல பூமியில் வெளிப்படுத்திப் போடுங்கள். மழை பெய்து வெய்யில் நன்றாகக் காயும் இடங்களில் போடுங்கள். நாங்கள் வளரும் இடத்தில் அவற்றுக்கு வெய்யிலும் வெளிச்சமும் போதியபடியில்லை. எங்களுடைய குழந்தைகள் தாமாக நடந்து குடியேற முடியாது. அவற்றுக்குக் கால்

இல்லை. சிறகு இல்லை. திருமாலைப் போல் நீங்கள் எங்கள் வம்சத்தை வயிற்றில் வைத்துக் காப்பாற்றிப் பூமியில் பரப்புங்கள்'' என்றன.

"நடக்கும் பிராணிகளே! எங்கள் குலத்துக்கு யமன் ஆடுகளும் மானிடர்களும். நன்றாகக் கிளைத்து இலை விட்டு வளர்வதற்கு முன் ஆடுகள் எங்களைக் கொல்லுகின்றனவே? எங்களைத் தின்று கொழுத்த ஆடுகளைத் தின்பதற்காக மானிடர்கள் ஆடுகளை எங்கள் மேல் விடுகிறார்கள். இதற்கு என்ன செய்வோம்?" என்று செடிகள் கதறின.

"பல்லில் அழுக்கு எடுக்கப் பல்லுக் குச்சிக்காக இந்த மானிடர்கள் எங்கள் இளங் கிளைகளை ஒடித்து நாசம் செய்கிறார்களே! இவர்களுக்கு இரக்கமில்லையே!" என்றன மரங்கள்.

"விறகுக்காக எங்களை வெட்டித் தள்ளுகிறார்களே! தந்தத்துக்காகக் கூட மனிதர்கள் யானைகளைக் கொல்ல மாட்டார்கள். ஆனால் நாங்கள் சாவதற்கு முன் எங்களுடைய எலும்புக்காக எங்களைக் கொல்லுகிறார்களே விறகு வெட்டிகள்!"

இவ்வாறெல்லாம் மரங்களும் செடிகளும் அழுதன.

"எங்கள் ஊனைத் தின்று இந்த இரு கால் பிராணிகள் தங்கள் ஊனைப் பெருக்கி வருகிறார்களே! ஆண்டவன் எங்கள் சதையில் விஷம் வைக்கவில்லையே. வைத்திருந்தால் நாம் பிழைத்திருப்போம்!" என்றன மாடுகள்.

பிரபஞ்சத்தில் ஊமைப் பிராணிகள் பேசும் பேச்சும் அழும் பிரலாபமும் காற்றில் அலை அலையாகச் சென்று வானத்தில் இடிக்கின்றன.

எல்லாம் பரமன் கூத்து. அவன் கூத்தை நாம் அறியும் வண்ணம் அருள்வானாக.

மரத்தை வெட்டித் தள்ளுகிறவர்கள் மரங்களாகப் பிறந்து, வெட்டப்பட்டு, பட்டையிலிருந்து பால் சொரியச் சாவார்களோ என்னவோ? ஆண்டவனுக்குத்தான் தெரியும்.

• • •

செடிகளையும் மரங்களையும் சேதம் செய்யலாகாது.

வனதேவதை சொல்லிற்று: "நன்றாக வளர்ந்து பெருகுவீர்களாக. மரம் ஒன்றுக்கு லக்ஷம் பூக்கள் பூத்து, ஆயிரம் பழங்கள் காய்த்து வம்சம் பெருக்குவீர்களாக. யார் நாசம் செய்தாலும் நீங்கள் அழிய மாட்டீர்கள், வாழ்வீர்கள்." இவ்வாறு ஆசிர்வதித்து, வனதேவதை கூட்டத்தைக் கலைத்தது.

ராஜாஜி








உங்கள் புஷ் ஷர்ட் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்குவதைத் தடுக்க, 'ஸான்பொரைஸ்ட்' அடையாளத்தைக் கவனியுங்கள்

சாதாரண துணியில் தைக்கப்பட்ட ஒரு நேர்த்தியான புஷ் ஷர்ட் சிறிது சுருங்கினாலும், அதன் தோற்றம் கெட்டுவிடும். ஆனால் நீங்கள் வாங்கும் ஒவ்வொரு உடையிலும் 'ஸான்பொரைஸ்ட்' அடையாளமிருக்கிறதா என்று கவனித்தால், உடைகள் சுருங்கும் என்று நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை.

'ஸான்பொரைஸ்ட்' அடையாளமிடப் பட்ட துணிகள் முன்னமேயே முற்றிலும் சுருக்கச் செய்யப்பட்டவை. ஆகவே அனேக சலவைகளுக்குப் பிறகும் உங்களுடைய உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி ஒரு பொழுதும் சுருங்காது.

எப்பொழுதும் 'ஸான்பொரைஸ்ட்' அடையாளத்தைக் கவனியுங்கள்!




ஸான்பொரைஸ்ட் ஸர்விஸ், 'பாசிஹாக்',
நேதாஜி சுபாஷ் ரோடு, மெரீன் ட்ரைவ், பம்பாய் 2

'ஸான்பொரைஸ்ட்-மே-பெற்றமான்' என்ற நிகழ்ச்சியை ரேடியோ சிலோனில் கேளுங்கள்: பிரதி ஞாயிறு பகல் 12-15 மணி, 31 மீட்டர்; பிரதி செவ்வாய்க்கிழமை இரவு 7-30 மணி, 41 மீட்டர்

ACP. 3026




கர்ணபரம்பரைக் கதை:

# பொல்லாத உண்ணி!

வெகு நாட்களுக்கு முன் ஒரு உண்ணி இருந்தது. அது எல்லா உண்ணிகளையும் போல நாய்மேலும், மாட்டு மேலும் உட்காரவில்லை. ஆனால் அந்த உண்ணி மரங்களில் ஏறிப் பழங்கள் தின்று பிழைத்து வந்தது.

ஒருநாள் ஒரு நாவல் மரத்தில் ஏறி அது நாகப்பழம் தின்று கொட்டைகளைக் கீழே உமிழ்ந்து கொண்டிருந்தது.

அச்சமயம் ஒரு ராஜா காட்டிலுள்ள மிருகங்களை யெல்லாம் வேட்டையாடி விட்டுக் களைப்புடன் வந்தான். அவனுக்கிருந்த களைப்பில் ஒரு மரத்தின் அடியில் உட்கார்ந்து இளைப்பாற வேண்டும் என்று தோன்றியது. அரசன் உண்ணி உட்கார்ந்து பழம் தின்று கொண்டிருந்த அந்த மரத்தின் அடியிலே வந்து அமர்ந்தான். குளிர்ந்த காற்று வீசியது. திடீரென்று அரசன் தன் தலையில் ஏதோ விழுவதைக் கண்டு மரத்தை அண்ணாந்து நோக்கினான்.

இந்தப் பொல்லாத உண்ணி, ராஜா என்று கூடப் பயப்படாமல், அவன் தலைமீது கொட்டையை உமிழ்ந்தது. ராஜாவுக்குக் கோபம் வந்தது. கொதிக்கும் எண்ணெயைக் கொண்டுவரச் செய்தான். அதில் அந்த உண்ணியைப் போட்டு, "உண்ணியே! உண்ணியே! செத்தாயா?" என்று கேட்டான்.

"நானேன் சாவேன் ராஜாவே!
என் வயிறுநிறையப் பழம் தின்றேன்
உன் தலை நிறையக் கொட்டை உமிழ்ந்தேன்
இப்போ எண்ணெய் தேய்த்துக் குளிக்கிறேன்!"

என்று கூறியது உண்ணி.

ராஜாவுக்குக் கோபம் வந்தது. பொங்கும் தண்ணீரைப் பணியாளனைக் கொண்டு வரச் செய்து, அதில் உண்ணியைத் தூக்கிப் போட்டு, "உண்ணியே! உண்ணியே! செத்தாயா?" என்று கேட்டான்.

"நானேன் சாவேன் ராஜாவே!
என் வயிறு நிறையப் பழம் தின்றேன்
உன்தலை நிறையக் கொட்டை உமிழ்ந்தேன்
எண்ணெய் தேய்த்துக் குளித்தேன்
இப்போ சுகமாக வெந்நீரில் குளிக்கிறேன்"

என்று பாடியது.

ராஜாவுக்கு ஆத்திரம் பொறுக்க முடியவில்லை. கொதிக்கும் சாதத்தை எடுத்துவரச் செய்து அதில் உண்ணியைப் போட்டுவிட்டு, "உண்ணியே! உண்ணியே! செத்தாயா?" என்று கேட்டான்.

"நானேன் சாவேன் ராஜாவே!
என் வயிறு நிறையப் பழம் தின்றேன்
உன் தலை நிறையக் கொட்டை உமிழ்ந்தேன்
எண்ணெய் தேய்த்துக் கொண்டேன்
வெந்நீரில் குளித்தேன்
இப்போ நன்றாகச் சாப்பிடுகிறேன்"

என்று கூறியது உண்ணி.

ராஜாவுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. 'இந்தப் பூச்சியுடன் நமக்கென்ன வேலை?' என்று பேசாமல் போய் விட்டான். உண்ணியோ மறுபடியும் நாவல் மரத்தில் ஏறிக் கொண்டு நாகப் பழம் தின்ன ஆரம்பித்தது.

— வி. பி. கிருஷ்ணஸ்வாமி



# குரங்கின்

காட்டில் ஒரு நாள் குரங்கு செய்த சிறு விஷமத்தினால் பெரிய விபரீதம் நிகழ்ந்தது. இந்தக் கதையைத் தாய்க் குரங்கு தன் குட்டிக் குரங்குகளிடம் சொல்லியது.

"இரண்டு காண்டா மிருகங்கள் காட்டுக்குள் ஒரு மரத்தின் கீழ் மேய்ந்துகொண்டிருந்தன. மரத்தின் மேல் இருந்த குரங்குகளில் ஒன்று ஒரு நீளமான குச்சியை எடுத்து ஒரு காண்டா மிருகத்தின் காதில் குத்திக் குத்தி விஷமம் செய்தது. காண்டா மிருகம் கோபமடைந்து குரங்குகள் இருந்த மரத்தைத் தாக்கியது. பிறகு பக்கத்தில் நின்றுகொண்டிருந்த காண்டா மிருகத்தின் மீதும் பாய்ந்து அதைத் தண்ணீரில் வீழ்த்தியது.

அங்கிருந்த முதலைகள் தண்ணீரில் விழுந்த காண்டா மிருகத்தின் மீது விழுந்து பிடுங்கின.

காண்டா மிருகத்துக்கும் முதலைகளுக்கும் பலமான சண்டை மூண்டது. கரையில் இருந்த காண்டா மிருகம் தன் கோபத்தை இன்னும் பல மிருகங்களின் மீதும் காண்பித்தது. இதன் பலனாகப் பல மிருகங்களும் ஒன்றையொன்று தாக்கிக் கொண்டன. கொஞ்ச நேரத்தில் அந்தக் காடு முழுதுமே ரகளைப்பட்டது. பாவம், ஒரு குற்றமும் அறியாத மான்களும், முயல்களும்கூடச் சிங்கத்தினிடம் அகப்பட்டுத் தவித்தன. சிங்கங்களுக்கும் யானைக்கூட்டத்துக்கும் போர் மூண்டது. அதன் வினை



# விஷமம்

வாக யானைகள் கோபமடைந்து மரங்களைப் பிடுங்கி எறிந்தன.

இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த மற்றக் குரங்குகள் விஷமக் குரங்கைப் பார்த்து, "பேஷ்! சபாஷ்! நீ சின்னக் குறும்பு செய்ததால் அல்லவா காடே அல்லோலகல்லோலப் படுகிறது!" என்று கூறி அதைத் தட்டிக் கொடுத்தன. குறும்புக்காரக் குரங்குக்கு ரொம்பப் பெருமையாக இருந்தது. ஆனால் வெகு நேரம் பெருமைப்பட முடியவில்லை. இதற்குள் மரத்தைப் பெயர்த்துக் கொண்டு வந்த யானைக் கூட்டம் குரங்குகள் தங்கி இருந்த மரத்தையும் தாக்கி வீழ்த்தியது. பாவம்! விஷமக் குரங்கும் அதன் சகாக்களும் முதலைகள் இருந்த அந்த ஏரியில் போய் விழுந்தன."

"ஒரு சின்ன விஷமம் இவ்வளவு பெரிய விபரீதம் ஆகிவிட்டதே!" என்று கூறியது குட்டிக் குரங்குகளில் ஒன்று.

"ஆமாம்; ஆகையால் இனி நீங்கள் விஷமமே செய்யக் கூடாது. அப்படி விஷமம் செய்பவர்களால் எல்லோருக்கும் ஆபத்து ஏற்படும். விஷமம் செய்பவர்களும் தப்பிவிட முடியாது. அவர்களுக்கும் ஆபத்து நிச்சயம் உண்டு" என்று கூறியது தாய்க் குரங்கு.

குமார்







# வேடிக்கை விளையாட்டு



"கிட்டு! இருட்டிலே, பூதக் கண்ணாடி வைத்துக் கொண்டு என்ன தேடுகிறாய்?"

"இந்த அறைக்குள் பூதம் இருக்கிறது என்று அம்மா சொன்னாள். அதைத்தான் பூதக் கண்ணாடியில் பார்க்கிறேன்!"




ஒன்று பத்து வீசைக் குடம். மற்றொன்று ஏழு வீசைக் குடம். இன்னொன்று மூன்று வீசைக் குடம். பத்து வீசைக் குடம் நிறைய எண்ணெய் இருக்கிறது. கையில் தராசு இல்லை. அந்த எண்ணெயை ஏழு வீசைக் குடம் மூன்று வீசைக் குடம் இரண்டையும் கொண்டு ஐந்து வீசை வீதம் இரண்டு பங்காகப் பிரிக்க வேண்டும், எப்படி?

(விடை அடுத்த இதழில்)



பட்டுப் பூச்சிகளில் ஒன்று வித்தியாசப் படுகிறது. அது எந்தப் பூச்சி?



மேஜைமீது உள்ள காசை ஒரே விரலால் திருப்பி வைக்க வேண்டும். முடியுமா?

விடை:—காசு கீழே விழுந்து விடாதபடி மேஜையைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சாய்த்துப் பிடி. காசு நழுவி மேஜை ஓரத்துக்கு வரும். விளிம்பு தாண்டி வந்ததும் ஒரு விரலால் காசைச் சுலபமாகத் திருப்பி வைத்து விடலாம்.

மகள்:—இருட்டில் வழி தெரியவில்லை. அடுத்த தோப்புக்கு எப்படிப் போவது?

தந்தை:—அதோ மின்மினிப் பூச்சிகள் அங்கே தான் போகின்றன. பின்னே போ. வெளிச்சம் தெரியும்!





# புத்தம் புதியதாக இருக்கிறது

## ட்ரேயோபேன்

✳ ஈரம் உட்புகாத தாளில் சுற்றப்படுவதால்

பிஸ்கோத்துகள், தேயிலை, காப்பி பௌடர், சிகரெட்டுகள், மிட்டாய்கள் முதலிய ஈரம் படக்கூடாத பொருள்களை சுற்றிவைப்பதற்காகவே ஈரம் உட்புகாத ட்ரேயோபேன் தாள் தயாரிக்கப்படுகிறது. இவை தாள்களாகவும் சுருள்களாகவும் கிடைக்கிறது. அற்புதமான டிசைன்களில் அச்சடிக்கக்கூடியவை

ட்ரேயோபேன் தாள் கண்ணாடியை விடத் தெளிவானது.
சரக்குகளை நன்றாக எடுத்துக் காட்டுகிறது.
பொருள்களை ட்ரேயோபேனில் சுற்றி உஷ்ணத்தால் சீல் செய்து கொள்ளலாம்—ஒரு சூடான இஸ்திரியை ஓரத்தில் தேயுங்கள்.
மற்ற எந்த பாக்கிங் தாள்களை விட ட்ரேயோபேன் மலிவானது.
இலவசமான சாம்பிள் புத்தகத்திற்கு எழுதுங்கள்.

## ட்ரேயோபேன்

✳ ட்ரேயோன்ஸ் ட்ரான்ஸ்பெரண்ட் தாளின் புதிய பெயர்

கண்ணைக்கவருகிறது.. விற்பனையை துரிதமாக்குகிறது




தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிமிடெட்

பாக்டரி :
ரேயான்புரம் போஸ்ட், திருவாங்கூர் கொச்சின்
ஸேல்ஸ் ஆபீஸ் :
யுனைடெட் இந்தியா லைப் பில்டிங், மதராஸ்-1

TR 84

கோடைகாலத்தில் நீலகிரியின்
குளுமையை உங்கள்
வாசஸ்தலத்திலேயே அடையுங்கள்



# டி.எஸ்.ஆர்

சந்தனாதி, அரைகீரை விதை
பிருங்காமலகா தைலங்கள்.



**டி.எஸ்.ஆர் & கோ, கும்பகோணம்.**

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் : காந்த் ஏஜென்ஸிஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு ○ கோயமுத்தூர், பாலக்காடு, நீலகிரிக்கு சோல்ஏஜண்டு : B. பாலபட்டாபி, (ஸ்தாபிதம் 1932), வைசியாள் தெரு, கோயமுத்தூர் கல்கத்தாவில் கிடைக்குமிடம் : கோகுல் ஸ்டோர்ஸ், 179/1, [illegible] டவுன் ரோடு, கல்கத்தா-26



## பருக்களும் விகாரமான சருமமும் 24 மணி நேரத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) கண்டுபிடிக்கப்பட்ட பிறகு எக்ஸிமா, முகப்பரு, படை, ரத்தக் கட்டி முதலிய அருவருப்புத் தரக்கூடிய சரும உபாதைகளினால் அவதியுற அவசியமே இல்லை. நோயாளி என நினைத்து நண்பர்கள் விலகக் காரணமான அருவருப்பான சருமத்தை இம் மருந்தினால் குணப்படுத்துங்கள்

**ஒரு புதிய சாதனம்**

நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) ஒரு புதிய களிம்பு. பிசுக்கற்றது. ஒன்பது மூலப் பொருள்களின் சேர்க்கையால் தயாரித்த நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை மூன்று வழிகளில் தாக்குகிறது. (1) நோய்க்குக் காரணமான கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மை யாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி சுத்தமாக்குகிறது

**விரைவில் பலனளிக்கிறது**

சரும நோய்களை நிவர்த்திக்கவே தயாரான நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) மற்றதை விடச் சீக்கிரமாகவே நமைச்சல், எரிச்சலை சில நிமிஷத்தில் நிறுத்தி சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) ஆயிரக் கணக்கானவர்களது சருமத்தை சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் *R. K.*







கூறுகிறார். 12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன், பல மருந்துகளுக்குப் பின் நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) உபயோகித்தேன். பத்து நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாயிற்று. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்

**திருப்திக்கு உத்தரவாதம்**

இன்றே நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) வாங்கி உபயோகித்து அதனால் ஏற்படும் பலனை கவனியுங்கள். ஒரு வாரத்தில் சருமத்தைச் சுத்தப்படுத்துகிறது. திருப்தி அளிக்கும்படிச் சருமத்தைச் சுத்தப்படுத்தாவிடில் அதற்கான விலையைப் பற்றிக் கவலையுற வேண்டாம். அதன் காலி பாக்கெட்டை திருப்பி அனுப்பினால் உங்களுக்கு முழுப் பணம் வாபஸ் செய்யப்படும். அதற்கு அளிக்கப்படும் உத்தரவாதமே உங்களுக்குச் சிறந்த பாதுகாப்பு




என் தங்கைக்குப் பெரிய இடத்து வரன் ஒன்று நிச்சயமாகும் நிலையிலிருந்தது. நல்ல இடத்தில் வரன் கிடைத்தபொழுது என் தகப்பனார் விட்டு விடுவாரா? எல்லாம் முடிந்து விட்டது. பண வியவகாரத்தில்தான் பிள்ளை வீட்டார்கள் கொஞ்சம் அதிகம் எதிர்பார்த்தார்கள். கும்பகோணத்துக்குப் போய் அதை மெதுவாகப் பேசி முடித்துக் கொண்டு வருவதற்குச் சரியான ஆசாமியாக நான்தான் அகப்பட்டேன் போலிருக்கிறது. என்னைக் கும்பகோணத்துக்கு அனுப்பி வைத்தார்கள்.

இப்படிப்பட்ட விஷயங்களிலெல்லாம் எனக்கு அனுபவம் போதாதாகையால் இதை எப்படிப் பேசி, எப்படி முடிப்பது என்ற குழப்பம் ஏற்பட்டது. காரியத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு வராவிட்டாலும் காரியத்தை மேலும் கெடுத்து விடாமல் வர வேண்டுமே என்ற அச்சம்தான் மனத்தில் எழுந்தது. வரனாக அமைந்த பையன் பார்க்க லட்சணமா யிருந்தான். ஆனால் அவனுடைய தகப்பனார்?.... அவரை நினைத்த பொழுது மேலே விழுந்து குதறத் தயாராக இருக்கும் சரியான ராஜபாளையம் நாயின் நினைவுதான் எனக்கு வந்தது. அவர் உறுமி உறுமிக் கறாராகவும் கண்டிப்பாகவும் பேசுவதைக் கேட்ட எனக்கு அவர் எங்கு இணங்கி வரப்போகிறார் என்றுதான் தோன்றியது. ஏதோ நம்மால் முடிந்த வரையில் முயற்சிசெய்து பார்ப்போம் என்று மன ஆறுதலை ஏற்படுத்திக் கொண்டேன். தைரியமாக தசரத ராமய்யர் வீடு எங்கே என்று விசாரித்துக் கொண்டு போய்ச் சேர்ந்தேன்.

தோட்டத்துக் கிடையே அமைந்த அழகான பங்களா. அந்தப் பங்களாவைப் பார்த்தவுடனேயே நல்ல இடம்தான் என்று மனத்துக்குப் பட்டது. வெளிக் கதவு திறந்திருந்தது. மெதுவாக உள்ளே நுழைந்தேன். நான் உள்ளே நுழைந்ததுதான் தாமதம், 'வள்! வள்!' என்று நாய் குரைக்கும் சத்தம் கேட்டு நடுங்கிப் போய் நின்று விட்டேன். பங்களா வாசலில் சுமார் மூன்றடி உயரமுள்ள முரட்டு நாய் ஒன்று நின்று கொண்டு குரைத்துக் கொண்டிருந்தது. இப்படிப்பட்ட பங்களாவுக்கு நாய் ஒன்று காவலுக்கு இருப்பதும் நல்லது என்றுதான் எனக்குப் பட்டது. ஆனால் அது என்னைப் பார்த்துக் குரைத்ததுதான் மிகுந்த எரிச்சலைக் கொடுத்தது. அந்த நாய் விடாமல் குரைத்துக் கொண்டுதான் நின்றது.

அதைச் சமாதானம் செய்பவர்களும் அப்பொழுது அங்கு யாரும் இல்லை. எனக்குப் பங்களாவை நோக்கி முன்னேறவும் பயமாக இருந்தது. கேவலம், ஒரு நாய்க்காகப் பயந்து நல்ல வரனை விட்டு விட்டுச் செல்லவும் மனமில்லை. நின்ற இடத்திலேயே நின்று துடித்துக் கொண்டிருந்தேன். நாய் குரைப்பதைக் கேட்டுப் பங்களாவுக்குள்ளிருந்து யாராவது வரமாட்டார்களா என்று பார்த்தேன். ஒருவரும் வரவில்லை. 'இதென்ன நாய்? யாரைக் கண்டாலும் இப்படியே குரைக்குமா? ஒரு வேளை என்னைப் பெண் வீட்டுக்காரன் என்று தெரிந்து கொண்டுதான் குரைக்கிறதா?' என்பது எனக்குப் புரியவில்லை.

ஒருவேளை இந்த நாய்க்கு ஏதாவது பிஸ்கோத் வாங்கிப் போட்டால் குரைக்காமல் இருக்குமோ என்று எனக்குத் தோன்றியது. உடனே சமீபத்திலிருக்கும் கடைக்குப் போய் இரண்டணாவுக்

குப் பிஸ்கோத் வாங்கிக் கொண்டு வரலாமென்று போனேன்.

கடையிலிருந்து இரண்டணாவுக்குப் பிஸ்கோத் வாங்கிக்கொண்டு பிஸ்கோத்தைக் கையில் தெரியும்படியாக வைத்துக் கொண்டு போனால் நாய் அதைப் பார்த்து விட்டுக் குரைக்காமல் இருக்கும் என்று எண்ணிப் பிஸ்கோத்தை நீட்டிய வண்ணமே பங்களாவை நோக்கிப் போனேன். நாயை நேராகப் பார்ப்பதற்கே எனக்குப் பயமாக இருந்ததால் வேறெங்கேயோ பார்த்துக் கொண்டே சென்றேன்.

நான் பங்களா வாசலை அடைந்ததும், ''யாரையா அது?'' என்ற குரலைக் கேட்டு மிரண்டு போய் நின்று விட்டேன். சற்று முன்னால் நாய் எந்த இடத்தில் நின்று கொண்டிருந்ததோ அதே இடத்தில் தசரதராமய்யர் நின்று உறுமிக் கொண்டிருந்தார். ''உங்களைத்தான் பார்க்க வந்தேன்..'' என்று சொல்லிக் கொண்டே கையிலிருந்த பிஸ்கோத்தை மறைத்துக் கொள்ள முயற்சித்தேன்.

''என்னையா பார்க்க வந்தீர்? கையில் ஏதையோ வைத்துக் காட்டிக் கொண்டே வந்தீரே? என்ன அது..?'' என்று அதட்டினார்.

''பிஸ்கோத்து....''

''பிஸ்கோத்தா? யாருக்கு....?''

''நம்ம வீட்டு நாய்க்குத்தான்..'' என்றேன் கொஞ்சம் தைரியமாக.

''நாய்க்கா? எங்கே அதைக் கொடும்!'' என்றார் அவர்.

பயத்தோடு என் கையிலிருந்த பிஸ்கோத்தை அவரிடம் கொடுத்தேன். அவர் அதை வாங்கித் திருப்பித் திருப்பிப் பார்த்து ஆத்திரத்தோடு வீசி எறிந்து விட்டு, ''கண்ட பிஸ்கோத்தை எல்லாம் கொடுத்து என் நாயைக் கொல்லலாம் என்று தீர்மானமோ? என் நாய்க்கு நீங்கள் பிஸ்கோத்து வாங்கிக் கொடுக்கவில்லை என்று யார் ஐயா அழுதார்கள்....?''

''எனக்கு அந்த நாயைப் பார்த்தவுடனேயே ஒரு பிரியம் விழுந்து விட்டது. அதற்கு ஏதாவது வாங்கிக் கொடுக்க வேணும்னு தோன்றியது. சாதாரண நாய்தானே என்று....''

தசரதராமய்யர் ஒரு துள்ளுத் துள்ளி, ''சாதாரண நாயா....? அதை நான் எவ்வளவு பணம் கொடுத்து வாங்கினேன், தெரியுமா? அது மிகவும் உயர்ந்த ஜாதி நாய். அது குரைக்கும்போதே தெரியவில்லையா?'' என்றார்.

''தெரிந்தது. ரொம்ப அழகாகத் தான் குரைத்தது. நல்ல சங்கீத வித்வான் லயக் கட்டோடு ஸ்வரப்பிரஸ்தாரம் செய்வது போல....''

''இது தெரிந்த பின்னுமா இவ்வளவு மட்டரகமான பிஸ்கோத்தை வாங்கிக் கொண்டு வந்து அதற்குக் கொடுக்க நினைத்தீர்கள்....?''

''அது தவறுதான். பெரிய மனிதர்களாய் இருந்தாலும் தேங்காய்த்

## பிரின்ஸிபாலுக்கு வெள்ளி விழா!

இருபத்தைந்து ஆண்டு காலம் ஒரு ஸ்தாபனத்துடன் இணைந்திருந்து அதன் முன்னேற்றத்துக்குப் பாடுபட்ட ஒருவரை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அதற்காக அவருக்கு ஒரு வெள்ளி விழாவே கொண்டாடினாலும் பொருந்தும். அத்தகைய

# குணஜோதி சூரணம்

வயிற்று வலி, புளித்த ஏப்பம், நெஞ்சு எரிச்சல், ஆகாரம் வாந்தி, வயிறு உப்புதல், அஜீரணம் இவைகளுக்கு சஞ்சீவி

தேவையாளர் ரூ. 3/- மணியார்டர் செய்யவும்

இடைக்குமிடங்கள் :

குணஜோதி வைத்யசாலை 514, அவின்யூ ரோடு, பெங்களூர்-2
S. T. பல்டோரு & சன்ஸ், புரசவாக்கம் ஹைரோடு, மதராஸ்
மாருதி மெடிகல் ஸ்டோர்ஸ், மலைக்கோட்டை, திருச்சி
கடம்பவனம் ஹவுஸ், 25, கீழாவணி மூல வீதி, மதுரை



5,00,000 கதிர்கள்

# பருத்தி நூல்கள்

நெ. 80 வரை நூல்கள்

## மதுரை மில்ஸ் கம்பெனி லிட்., மதுரை

மில்கள் : மதுரை, தூத்துக்குடி, அம்பாசமுத்திரம்

○●○

கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கான
சகலவிதமான நூல்கள்

○●○

விசேஷ ரகங்கள் :

கயிறுகள், விழுதுகள், கித்தான்கள், நாடாக்கள் முதலியவைகளுக்கான
விசேஷ நூல்கள்-தையல் நூல்-முறுக்கேற்றிய திரித்த சரடுகள் முதலியன

○●○

மானேஜர்கள் :

## ஏ. & எப். ஹார்வி லிமிடெட்

பாண்டியன் பில்டிங்

போன் : 420 (4 லைன்) மதுரை தந்தி : "ஹார்வி"



# த்வார்க்கின்ஸ்

கை ஆர்மோனியப் பெட்டிகள் செய்வதில் கைதேர்ந்தவர்கள். மேற்படி ஆர்மோனியப் பெட்டிகள் தயாரிப்பதில் புதுமையைப் புகுத்தியவர்களில் '**த்வார்க்கின்ஸ்**' முன்னணியில் நிற்கிறார்கள்.

விலை விவரம் : ரூ. 40/-லிருந்து ரூ. 550/-

விலை விவர ஜாபிதாவுக்கு ஆங்கிலத்தில் எழுதுங்கள்

**த்வார்க்கின் & சன் பிரைவேட் லிட்.**
8/2, எஸ்பிளனேடு ஈஸ்ட், கல்கத்தா-1




# இந்த முக க்ஷவரப் பரீக்ஷையை நீங்களே செய்து பாருங்கள்

சிறந்த பிளேட் எது என்பதை சுலபமாக நிர்ணயிக்க, எந்த பிளேட் வெகுகாலம் கூர்மையுடன் இருக்கிறது எனக் கவனியுங்கள். ஸெவன் ஒ'க்ளாக் பிளேடுகள் மழமழப்பானது. ஒவ்வொரு பிளேடும் அதிகப்படியான சுக க்ஷவரங்களை அளிக்கின்றன என்று உங்களுக்குத் தெரியவரும். இதனால் உங்கள் பணம் மிச்சமாகிறது. வேறெந்த பிளேடுகளைக்காட்டிலும் ஸெவன் ஒ'க்ளாக் பிளேடுகள்தான் நீங்கள் செலவழிக்கும் பணத்திற்கு அதிகப்படியான பெறுமானம் அளிக்கிறது. இன்றே அவைகளை வாங்கி பரீக்ஷியுங்கள்.




**7o'clock BLADES**

ஸெவன் ஒ'க்ளாக் பிளேடுகள்

துகையல் சாப்பிடாமல் இருக்கிறீர்களா ?'' என்று கேட்டேன்.

''தேங்காய்த் துகையல் வேறு ; பிஸ்கோத்து வேறு..''

''அப்படியானால் உங்க நாய்க்குத் துகையல்னு ரொம்பப் பிடிக்குமோ ?''

''பெரிய மனிதர்களையும் தேங்காய்த் துகையலையும் பற்றிப் பேசிக் கொண்டு வரும் பொழுது நாயையும் தேங்காய்த் துகையலையும் ஏனய்யா சம்பந்தப்படுத்துகிறீர் ?''

''நாயைப் பற்றிப் பேசும் போது பெரிய மனிதர்கள் பேச்சு வந்தது. அப்படியே தேங்காய்த் துகையல் பேச்சும் வந்தது....''

''அப்புறம் கிடாரங்காய் ஊறுகாய்ப் பேச்சு வருகிறது. அதற்காக எல்லாவற்றோடும் என் நாயைச் சம்பந்தப் படுத்திப் பேசி விடுவதா ?''

''எல்லாவற்றோடும் உங்க நாயைச் சம்பந்தப்படுத்துவது பிசகுதான்! உங்க நாய்க்கு என்னதான் பிடிக்குமென்று நீங்கள் சொன்னால் அடுத்த தடவை வரும் போது வாங்கிக் கொண்டு வருவேன்....''

''என் நாய்க்கு நீங்கள் எதற்காக ஏதாவது வாங்கிக் கொண்டு வர வேண்டும்? அடுத்த தடவை எதற்காக நீங்கள் வர வேண்டும் ?''

''ஒரு வரனைப் பேசி முடிக்கணுமானால் அடிக்கடி வராமல் இருக்க முடியுமா? அதுவும் சம்பந்தம் செய்து கொண்டு விட்டால்..''

''வரனா..?''

''ஆமாம் ! நான் நளவாஞ்சேரி சுப்பையாவின் பிள்ளை. என் தங்கையைத்தான் உங்கள் குமாரனுக்கு..'' என்றேன்.

''அடேடே! வா ஐயா, உள்ளே ! இதை அப்பொழுதே சொல்லக் கூடாதோ....?'' என்று சொல்லிக் கொண்டே என்னை உள்ளே அழைத்துக் கொண்டு போனார்.

''எனக்கு உங்க நாயைப் பார்த்த வுடனேயே ஒரு பிரியம் விழுந்து விட்டது. அதனாலேயே எல்லாவற்றையும் மறந்து அதைப் பற்றியே பேச, ஆரம்பித்து விட்டேன்.''

நாங்கள் உள்ளே சென்றபோது தாழ்வாரத்தில் போடப்பட்டிருந்த நாற்காலியில் அந்தநாய் உட்கார்ந்திருந்தது. எங்களைக் கண்டதும் அந்த நாய் சட்டென்று நாற்காலியிலிருந்து கீழே குதித்து வாசல் பக்கம் ஓடியது. தசரதராமய்யர் அந்த நாற்காலியில் போய் உட்கார்ந்து. ''நான் இந்த நாற்காலியில் உட்கார்ந்திருந்தால் எங்க 'டாமி'





சென்னை செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிடெட்டின் காரியதரிசி ஸ்ரீ எஸ். வி. பெரியசாமி அவர்களின் சகோதரர் ஸ்ரீ எஸ். வி. சுப்பையாவுக்கும், குமாரி ஜெயலட்சுமிக்கும் துறையூரில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாசலில் போய் நிற்கும். நான் வாசலில் போய் நின்றால் அது இந்த நாற்காலியில் வந்து உட்கார்ந்து விடும்'' என்றார் மிகப் பெருமையோடு.

''ரொம்பக் கெட்டிக்கார நாய். இப்படிப்பட்ட நாய்க்கு 'டாமி' என்ற பெயர்தான் ரொம்பப் பொருத்தமாயிருக்கும். அது நாற்காலியில்தான் எவ்வளவு கம்பீரமாக உட்காருகிறது? நாற்காலியில் உட்காருவதற்கும் ஒரு கம்பீரம் வேண்டித்தான் இருக்கிறது'' என்றேன் நான்.

''அதிலென்ன சந்தேகம்? அதிருக்கட்டும், நீங்கள் வந்த விஷயம்..?''

''வரன் விஷயம்தான்..என் தங்கை சரோவுக்கு நாய் என்றால் ஒரு அலாதிப் பிரியம். அதுவும் உங்க டாமியைப் பார்த்தால் உயிரை விட்டு விடுவாள். அதுவும் உங்கள் வீட்டுக்கு வந்து விட்டாளானால் மற்ற எல்லாவற்றையும் விட 'டாமி' விஷயத்தில்தான் அதிக கவனம் செலுத்துவதற்கு ஆரம்பிப்பாள்'' என்றேன்.

''அடாடா! அப்படியா? நம்ம வீட்டுக்கு வருகிற பெண் அப்படித்தான் இருக்க வேண்டுமென்று நினைத்தேன். அதோடு மட்டுமில்லே. நம்ப பயலுக்கு இந்த நாயைக் கண்டால் அடியோடு பிடிக்கவில்லே. எங்கே அவனுக்கு வருகிற மனைவியும் அவன் மாதிரியே இருந்து விடுவாளோ என்று பயப்பட்டேன்.''

''நீங்கள் பயப்பட வேண்டிய அவசியமே இல்லே. அவளுக்கு டாமி மேலே பிரியம் ஏற்பட்டால், இயற்கையாக உங்கள் பையனுக்கும் டாமி மேலே பிரியம் ஏற்படும்படியான நிலைமை தானே ஏற்படும்? அதெல்லாம் என் தங்கை சரோ ரொம்பக் கெட்டிக்காரி.''

''அப்படித்தானே இருக்க வேண்டும்? அது சரி. கல்யாணத்தை முடித்து விடுவோம். இப்போது நீங்கள் பேச வேண்டிய விஷயம் என்ன?''

''பணவிஷயம்தான். நீங்கள் சொன்னபடி கையிலே மூவாயிரம் ரூபாய் கொடுப்பதற்கு எங்களால் முடியாது. இரண்டாயிரம்தான் முடியும்....''

''பணம் கிடக்கிறது. இடம்தான் நல்லதாக இருக்க வேண்டும். நீங்கள் பெண்ணின் குணத்தைப் பற்றிச் சொன்னவுடனே நான் எதையுமே பெரிதாகக் கருதவில்லே..''

''நீங்கள் கருத மாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும். நீங்கள் வெள்ளிக்கிழமை எங்கள் ஊருக்கு வந்தால் நிச்சயதார்த்தத்தையும் செய்து, சீக்கிரமாகச் சமீபத்திலேயே ஒரு முகூர்த்தத்தையும் வைத்து விடலாம்..''

''ஓ!..அப்படியே!''

''நீங்கள் வரும் போது 'டாமி'யையும் அழைத்துக் கொண்டு வாருங்கள். கல்யாணத்தின் போதும் அது அவசியம் இருக்க வேணும்.''

''அழைத்துக் கொண்டு வரலாம். ஆனால் அதை அழைத்துக் கொண்டு உங்கள் ஊருக்கு வந்தால், அதைச் சரியானபடி பாதுகாக்க வேணுமே!''

''அதைப் பற்றி நீங்கள் கவலைப் படவே வேண்டாம். உங்க மனிதர்களென்று யார் வந்தாலும் விட்டுவிடப் போகிறோமா? அதுமாதிரி டாமி வந்தாலும் ஒரு குறையும் இல்லாமல் எல்லாம் சரியாகத்தான் நடக்கும்'' என்றேன் நான்.

''அப்படியானால் சரி!'' என்றார் அந்த மனிதர். நான் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்தேன். வாசலில் நின்று கொண்டிருந்த 'டாமி' என்னிடம் வாலை ஆட்டிக் கொஞ்சியது. அதற்குள் நான் அந்த வீட்டுக்குச் சம்பந்தியாகப் போகிறேன் என்று அதற்கு எப்படித் தெரிந்ததோ, எனக்குத் தெரியவில்லே!

எப்படியோ காரியம் வெற்றி. கல்யாணத்தின் போது சம்பந்தி வீட்டு மனிதர்கள் யாரை உபசரித்தாலும் உபசரிக்கா விட்டாலும் டாமியைக் கொஞ்சிக் குலாவிப் பூரண உபசாரமும் செய்து விட்டால் போதும். கல்யாணத்தில் சீர் செய்யும் விஷயத்தில் இன்னும் சிறிது குறைந்தால் கூடப் பாதகம் ஏற்படாது என்ற ரகசியத்தை அழுத்தமாக என் தகப்பனாரிடம் சொல்லி வைப்பதென்று தீர்மானித்தேன்.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

ஹிமாலயா
புக்கே
அளிக்கும் மிகுந்த
புதுமைப் பொலிவை
– நீங்கள்
நாள் முழுதும்
உணரலாம்!




ஹிமாலயா
புக்கே

டாய்லெட், டால்கம்
பவுடர்கள்



HBP. 15-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

மணம் கமழும் முறையில்
உங்கள் சருமத்தை இன்று நீங்கள்
ஆரோக்கியத்துடன் வைத்திருக்கலாம்.
அத்தகைய சிறப்பு உள்ளது
ப்ரீஸ்






ஆக்டமர்
கலந்த டாய்லெட் சோப்

- சருமக் கிருமிகளை ஒழிக்கிறது
- உடல் நாற்றங்களை நீக்குகிறது
- சருமத்தை ஆரோக்கியத்துடன் வைத்திருக்கிறது
- புதுமையுடன் வைத்திருக்கிறது!




8 அணாதான்
உள்ளூர் வரிகள் நீங்கலாக

இராஸ்பீக் தயாரிப்பான "ஹலோ ரூபயே" நிகழ்ச்சியைக் கேளுங்கள். ரேடியோ சிலோன் ஹிந்தி சேவையில், சனிக்கிழமைதோறும் இரவு 8-30 மணிக்கு